குளித்தெழுந்த
புதுமலர்ச்சியை நாள்முழுதும்
அளிப்பது






# ஹிமாலயா
# புக்கே
# டால்கம் பவுடர்

**இன்பமூட்டும் பவுடர்!**
**விலையோ சிக்கனம்!**

HB. 17-50 TM

# கல்கி

## பொருளடக்கம்



'கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே



# அவனுக்கு ஜான்ஸன்ஸ் பேபி ஆயிலின் சுகத்தை அளியுங்கள்




**இலவசபுத்தகம்:** ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு 25 நயா பைசா ஸ்டாம்பு வைத்து எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது தமிழ் பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிடவும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆஃப்
இந்தியா பிரைவேட் லிமிடெட்,
பி. ஒ. பாக்ஸ் 1976,
டிபார்ட்மெண்ட் 100A,
பம்பாய்



மலர் 18
இதழ் 16

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விளம்பி௵
கார்த்திகை 1

# அமெரிக்கத் தேர்தல்

அமெரிக்க மக்கள் தங்கள் தீர்ப்பைச் சந்தேகமறத் தெரிவித்து விட்டார்கள்.

அமெரிக்காவில் சமீபத்தில் பிரதிநிதிகள் சபைக்கும், ராஜ்யங்களில் கவர்னர் பதவிகளுக்கும் தேர்தல் நடந்தது. இத்தேர்தலில் ஜனாதிபதி ஐஸன்ஹோவர் கட்சியான குடியரசு (ரிபப்ளிகன்) கட்சி படுதோல்வியடைந்திருக்கிறது. ரிபப்ளிகன் கட்சியின் பெரிய பெரிய தலைவர்கள், பிரமுகர்கள் எல்லாரும் படுதோல்வியடைந்திருக்கிறார்கள். பிரதிநிதிகள் சபையில் மூன்றில் இரண்டு பங்குக்கு மேல் எதிர்க்கட்சியினர்களான ஜனநாயக (டெமொகிரடிக்) கட்சியினர் பதவிக்கு வந்திருக்கிறார்கள்.

ஆகவே, ஜனாதிபதி ஐஸன்ஹோவர் தம் கட்சிக்கு எதிர்க்கட்சியானர்களின் ஒத்துழைப்பைப் பெற்று நிர்வாகம் நடத்த வேண்டிய பொறுப்பு அவருக்கு இப்பொழுது ஏற்பட்டுள்ளது.

ஆனால் ஜனநாயகக் கட்சி இவ்வளவு வெற்றி பெறுவதற்குக் காரணம் என்ன என்று யோசித்தால் ஜனாதிபதி ஐஸன்ஹோவரும் அவர் சகா டல்லஸும் கடைப்பிடித்து வரும் வெளிநாட்டுக் கொள்கையில் அமெரிக்க மக்கள் நம்பிக்கையிழந்து விட்டதுதான்.

மத்திய கேந்திரத்திலும் மேற்கு ஐரோப்பாவிலும் பலமான ராணுவ முகாம்கள் இருக்க வேண்டும் என்று ஸீட்டோ, நாட்டோ போன்ற ராணுவ கூட்டுறவுகளைப் பலப்படுத்தும் திட்டம், அமெரிக்க சர்க்காரின் விருப்பத்துக்கு மாறாகவே அந்தப் பிரதேசங்களில் மக்களின் உணர்ச்சிகளைக் கிளறி விட்டிருக்கின்றன.

மத்திய கேந்திரத்தில், முக்கியமாக அமெரிக்காவுக்கு எதிரிடையாகத்தான் மக்கள் கிளர்ச்சிகளை உந்தி, அரபு தேசிய உணர்ச்சியைப் பலப்படுத்தியிருக்கிறது.

மேலும் சமீபத்தில் அமெரிக்கா லெபனானுக்கு ராணுவப் படையை அனுப்பி உலகக் கண்டனத்துக்கு ஆளாகியது.

இவையெல்லாம் அமெரிக்க மக்களின் உணர்ச்சியை ஆளும் கட்சியாகிய ரிபப்ளிகன் கட்சிக்கு எதிராக வோட்டளிக்கும்படி தூண்டியிருக்கிறது.

பெருவாரியாக வெற்றிபெற்ற டெமோகிராடிக் கட்சிக்கும் ரிபப்ளிகன் கட்சிக்கும் அயல்நாட்டுக் கொள்கை விஷயத்தில் அதிக வித்தியாசமில்லையே என்று நம்மில் சிலர் சொல்லுகிறார்கள்.

ஆனால் குடியரசுக் கட்சியின் அயல்நாட்டுக் கொள்கை மீது அதிருப்தி அடைந்தே மக்கள் தங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்பதை ஜனநாயகக் கட்சியார் இதற்குள் உணர்ந்திருப்பார்கள். அதனால் அவர்கள் அயல்நாட்டுக் கொள்கையில் மாறுதல் ஏற்பட வாய்ப்பு உண்டு.

ஆனால் இவ்வளவு தோல்வியடைந்த பிறகும் ஜனாதிபதி ஐஸன்ஹோவர், தமது அயல்நாட்டுக் கொள்கையில் ஒரு மாறுதலும் இராது. மாறுதல் ஏற்படுத்தும்படி இத்தேர்தல் செய்யவில்லை என்று கூறுகிறார். 'குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை!' என்று சொன்ன பயில்வானின் வாக்குத்தான் ஞாபகம் வருகிறது!

## அயூப்கானின் மிரட்டல்!




# ஏன் இந்தத் தாமதம்?

மரண தண்டனை வழக்குகளை, உடனுக்குடன் விசாரித்து, காலதாமதமின்றிக் குற்றவாளி அல்லது குற்றவாளியல்ல என்று தீர்மானித்துவிட வேண்டும் என்பது உலகம் அறிந்த நியாய விதி. அந்த நியதிக்கு மதிப்புத் தராமல், சிறியவராயினும் பெரியவராயினும் சரி, யாவரையும் சிறையில் அடைத்துப் போட்டுத் தீராத கவலைக்கு உட்படுத்துவது தர்மத்துக்கு விரோதமாகும்.

திரு முத்துராமலிங்கத் தேவர் சென்னை அரசாங்கத்துக்கு வேண்டியவராக இருக்கலாம்; அல்லது வேண்டாதவராக இருக்கலாம். கொலைக் குற்ற விசாரணையில் அந்த விஷயம் எவ்விதத்திலும் புகுதல் கூடாது. சர்க்காருக்குப் பிடிக்காதவர்களை விசாரணையின்றிச் சிறையில் வைக்கும் சட்டத்தைப் பிரயோகப்படுத்தி, தேவரை அடைத்துவைத்திருப்பது ஒரு பக்கமிருக்க மரணதண்டனை விதிக்கக்கூடிய கொலை வழக்கில் அவர் இப்பொழுது சிக்கியிருக்கிறார். விசாரணையில் இருக்கும் கொலையானது நிகழ்ந்து பன்னிரண்டு மாதங்களுக்கு மேலாயிற்று. இன்னும் குற்றம் சாட்டப்பட்டவர் விடுதலையுமின்றி, தீர்ப்புமின்றி நிற்கிறார். அவர் ஜாமீனில் விடுபட்டிருந்தால் தகுந்த விதத்தில் இந்தத் தாமதத்தைப் பற்றி நியாயக் கிளர்ச்சி செய்ய ஏற்பாடு செய்திருப்பார். அதற்கும் வழியில்லாமல் சிறையில் கிடக்கிறார். உண்மைக்கும் குற்றங்களைப் பற்றிய சட்டத்துக்கும் ஒத்த தீர்மானம் சீக்கிரத்தில் நீதிபதி செய்துவிட வேண்டும் என்று கோருகிறோம். விசாரணை அளவுகடந்த தாமதமாகி விட்டிருப்பதைப் பற்றி வருந்துகிறோம்.

# பழைய பல்லவி

நிலப் பிரச்னையைப் பற்றி ஆராயப் பதினைந்து பேர் கொண்ட கமிட்டி நியமிக்கப்பட்ட போது, இக்கமிட்டியினிடமிருந்து விசேஷமாக எந்த உருப்படியான யோசனையும் எதிர்பார்ப்பது வீணேயாகும் என்று இரண்டு வாரங்களுக்கு முன்புதான் எழுதியிருந்தோம். திரு சுப்பிரமணியத்தின் வாதங்கள் ஹைதராபாத் காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் அங்கீகரிக்கப்பட்டவை போல் தோன்றினாலும் காரியசித்தி ஆகக்கூடியதல்ல

என்றும் சொன்னோம். இவ்வளவு சீக்கிரமாக எதிர்பார்த்தது நடக்கும் என்று அப்போது நினைக்கவில்லை. இப்போது அப்படியேதான் நிகழ்ந்திருக்கிறது.

நிலவுடைமைக்கு உச்சவரம்பு கட்டும் கொள்கையை முன்னம் திட்டக் கமிஷன் சொல்லியபடியே. பின்னர் திரிமூர்த்திக் கமிட்டி வலியுறுத்தியபடியே இப்போது இந்தப் பதினைந்து பேர் கமிட்டி அங்கீகரித்திருக்கிறது. உச்சவரம்பு கட்டியே ஆகவேண்டும் என்று பழைய பல்லவியைப் பாடியிருக்கிறது. அளவில்தான் கருத்து வேற்றுமை இருக்கிறதாம்! ரூ. 4500 வருமானம் போதுமா, ரூ. 4200 போதுமா என்பது சீக்கிரமே தெரியுமாம்! பெரிய பண்ணைகள் உடைபட்டுப் போனால் உற்பத்தி குறையுமே என்ற பயத்தைக் கூட்டுறவு முறையை விஸ்தரிப்பதன் மூலம் போக்க வேண்டுமென்று பழைய பல்லவியே மறுபடியும் பாடப்படுகிறது.

கூட்டுறவு பண்ணைகளைப் பற்றி மிகவும் சிலாகித்துப் பேசப்படும் மேல்நாடுகளில்கூட இந்த முறை திருப்திகரமாகச் செயல்படவில்லை என்பது தெரிந்திருந்தும் அதே பாடத்தைத் திருப்பித்திருப்பிப் படிப்பது ருசிக்கவில்லை.

இம்மாதிரி பழைய கொள்கைகளை ஊர்ஜிதப்படுத்துவதானால் பதினைந்துபேர் கொண்ட புது கமிட்டி எதற்கு அமைக்க வேண்டும்? மக்களுக்குக் கண் துடைக்கவா? ஒரு முறைக்குப் பல முறைகள் ஆலோசனை செய்தபிறகே இவ்விஷயம் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்ற மயக்கத்தை உண்டு பண்ணவா? எப்படியும் அடுத்த தேர்தலைத்தான் முக்கியமாகக் கருத்தில் கொண்டு நடவடிக்கைகள் நடக்கின்றன என்பது தெளிவாகி விட்டது.

நிலச் சொந்தக்காரர்களுக்கும் சாகுபடியாளர்களுக்கு மிடையே இப்போது நிலவி வரும் ஒப்பந்தங்களைப் புறக்கணிக்காமல், ஒருவருடைய உரிமையைப் பறித்து மற்றவருக்கு அளிக்க முற்படாமல், விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் எல்லாருக்கும் நல்லுறவை நிலநாட்டினாலே உண்மையான நிலச் சீர்திருத்தம் செய்ததாக ஆகும்.

# ஹார்வுட் தம்பதிகள்

**ஹா**ர்வுட் பிரபு பிரிட்டிஷ் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். இப்பொழுது ராணியாக உள்ள எலிஸபெத் அம்மையாருக்கு மிக நெருங்கிய உறவினர். பிரிட்டிஷ் அரசாங்க வைபவங்களில் உயர்ந்த அந்தஸ்தும் மதிப்பும் பெறுபவர்.

அவர் மேற்கத்திய சங்கீதத்தில் அபாரமான ஞானம் பெற்றவர். பிரிட்டனிலுள்ள பல முக்கிய சங்கீதக் கழகங்களில் டைரக்டராகவும் ஆலோசகராகவும் இருந்து வருகிறார். பிரிட்டனில் லீட்ஸ் நகரில் ஆண்டுதோறும் நடைபெறும் பெரிய சங்கீத–நாடக–கலை விழாவுக்கு அவர்தான் முக்கிய நிர்வாகத் தலைவர். அவருடைய மேற்பார்வையில் நடைபெறும் அவ்விழா மேற்கத்திய உலகின் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது.

ஸ்ரீமதி ஹார்வுட் பியானோ வாசிக்கும் கலைஞர்.

ஹார்வுட் தம்பதிகள் இந்திய சங்கீதத்தைக் கேட்டு அவற்றின் நுட்பங்களை அறிய இந்தியாவுக்கு வந்திருக்கிறார்கள்.

இந்தியாவுக்கு வந்ததுமே சென்ற மாதம் 25-ந் தேதி டில்லியில் அகில இந்திய ரேடியோ நிலையத்தார் ஏற்பாடு செய்திருந்த ஸ்ரீமதி எம். எஸ். ஸின் அகில பாரத சங்கீத நிகழ்ச்சி கச்சேரியைக் கேட்டு ஹார்வுட் தம்பதிகள் பரவசப்பட்டுப் போனார்கள்.

கர்நாடக சங்கீதத்தின் நுணுக்கங்களைத் தெரிந்து கொள்வதற்கு ஹார்வுட் தம்பதிகள் சென்ற வாரம் சென்னைக்கு வந்தார்கள். சென்னையில் இருக்கும் கர்நாடக சங்கீதக் கல்லூரிக்கும், கலாக்ஷேத்திரத்துக்கும் விஜயம் செய்து பல இசை நிகழ்ச்சிகளைக் கேட்டார்கள். பல நடன நிகழ்ச்சிகளைப் பார்த்தார்கள். நமது இசைக் கலையின் சிறப்பை ஹார்வுட் பிரபு மிகவும் அநுபவித்து மகிழ்ந்தார்.

இவ்வளவு ஆர்வத்துடன் ஒரு ஆங்கிலேயர் நமது சங்கீதத்தைக் கேட்டு ரஸிக்கிறார் என்றால் நமக்கு வியப்பாக இருக்கிறது அல்லவா? அவர்களுக்கு நம்முடைய சங்கீதம் விளங்குமா என்ற சந்தேகம் எழுகிறதல்லவா? இதைப் பற்றி, ஹார்வுட் தம்பதிகளுடன் சென்னைக்கு வந்திருந்த டாக்டர் நாராயண மேனனிடம் கேட்டபோது, 'மேற்கத்திய சங்கீதமோ, இந்திய சங்கீதமோ, சீன தேசத்துச் சங்கீதமோ ஏதோ ஒரு சங்கீதத்

புது டில்லி அகில பாரத சங்கீத நிகழ்ச்சியில் ஸ்ரீமதி எம். எஸ். பாடுவதையும் அதைக் கேட்க ஹார்வுட் தம்பதிகள் உள்பட பல பிரமுகர்கள் குழுமியிருப்பதையும் காணலாம்.



தில் நல்ல ஞானம் பெற்றவர்கள் மற்ற சங்கீதத்தை ஓரளவு ரஸிக்கலாம். எந்தச் சங்கீதமும் தெரியாதவர்களால்தான் எந்தச் சங்கீதத்தையும் ரஸிக்க முடியாது" என்றார்.

மேற்கத்திய சங்கீதத்தில் நல்ல ஞானம் பெற்ற ஹார்வுட் தம்பதிகள் நமது கர்நாடக சங்கீதத்தையும் ரஸித்தார்கள். இப்படி இந்திய சங்கீதத்தை அறிந்துகொள்ளும் நோக்கத்துடன் தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்துள்ள ஹார்வுட் தம்பதிகளை வரவேற்கிறோம்.

ஹார்வுட் தம்பதிகள் புதுதில்லியில் நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ். ஸின் அகில பாரத சங்கீத நிகழ்ச்சிக் கச்சேரியைக் கேட்டு விட்டு, ஸ்ரீமதி எம். எஸ். அவர்களைப் பாராட்டும் காட்சியைத்தான் இவ்விதழ் அட்டையில் வெளியிட்டிருக்கிறோம்.

# மந்திரியைப் பாராட்டுகிறோம்!

சென்னை அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம். முக்கியமாக மந்திரி திரு எம். பக்தவத்சலம் அவர்கள் நமது பாராட்டுக்குரியவராகிறார்.

இந்தியன் எக்ஸ்பிரஸ் தினமணி, ஆந்திரப் பிரபா காரியாலயங்களில் நீண்ட தொழிலாளர் கிளர்ச்சியின் காரணமாக மேற்கூறிய பத்திரிகைகளின் சென்னை காரியாலயங்களை மூடிவிடப் போவதாகப் பத்திராதிபர் அறிவித்திருந்தார். இது சென்னை பொது மக்களுக்குப் பெரும் கவலை தந்து வந்தது.

நல்லவேளையாக மந்திரி பக்தவத்சலம் இத்தகராறில் தலையிட்டு, தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் உவப்பான முறையில் சமாதானத்தை ஏற்படுத்தி, உருவாகவிருந்த விபரீதங்களைத் தடுத்திருக்கிறார்.

ஹிந்து பத்திரிகை வேலைநிறுத்தத்தின் போது சர்க்கார் நடந்துகொண்ட முறையைப் பற்றி நாம் கடுமையாகக் கண்டித்து எழுதவேண்டியிருந்தது.

இந்தியன் எக்ஸ்பிரஸ் விவகாரத்தில் முன் எச்சரிக்கையுடன் இருந்து சுமார் எழுநூறு தொழிலாளர்களுக்கும் பத்திராதிபருக்கும் ஏற்படவிருந்த நஷ்டத்தைத் தவிர்த்தமைக்கு மந்திரியையும் சென்னை சர்க்காரையும் மிகவும் பாராட்டுகிறோம்.

# பல்லாண்டு கூறுகிறோம்

பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் அவர்களுக்குப் பல்லாண்டு கூறுகிறோம். பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து பாரதத்துக்கும் உலகத்துக்கும் தொண்டு செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

இப்பொழுதெல்லாம் ஜவாஹர் அவர்கள் தமக்கு வயதாகிவிட்டது என்று கூறி மக்களைத் திக்குமுக்காடச் செய்து வருகிறார். ஜவாஹர்லால் அவர்களை என்றும் இளமையுடன் திகழும் வாலிபர் என்று எண்ணி வந்த மக்கள் அவர் கூறிவருவதைக் கேட்டு ஆச்சரியப்பட்டுப் போகிறார்கள். ஆண்டு ஒன்று முடிந்தால் ஜவாஹர் அவர்களுக்குக் கூட வயது ஒன்று கூடுகிறது என்று எண்ணி வியந்து போகிறார்கள்.

அடுத்த கணமே ஜவாஹரின் பிராயம் என்ன என்று விசாரிக்கவும் தொடங்கி விடுகிறார்கள். இதன் பயனாக நாளை நவம்பர் 14-ம் தேதி என்று பண்டித ஜவாஹர்லால் நேருவின் அறுபத்தொன்பதாம் வயது பூர்த்தியாகி எழுபதாவது வயது பிறக்கிறது என்று தெரிந்து கொள்கிறார்கள். ஜவாஹரின் பிறந்த நாளைப் பாரத நாடெங்கும் மக்கள் குதூகலத்துடன் கொண்டாடி மகிழ்கிறார்கள்.

நேருஜியின் எழுபதாவது பிறந்த நாளை உலகமெங்கும் கொண்டாடுகையில் நமது தலைவர் ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கு வயது எழுபது ஆகிவிட்டது என்று நமக்கு நம்புவது இயலாத காரியமாயிருக்கிறது.

வாலிபப் பிராயத்தினர்கூட நினைத்துப் பார்க்கமுடியாத பயங்கரப் பனியும், மலையும், பாதை வசதி சிறிதும் இல்லாத பூடான் நாட்டுக்கு விஜயம் செய்துவிட்டுத் திரும்பிய ஜவாஹர் "என்னுடைய வயதில் பத்து ஆண்டுகள் குறைந்து விட்டதுபோல் குதூகலமாக இருக்கிறது" என்று சொன்னார். இந்த நிகழ்ச்சியும், அவர் பேச்சுக்களில் காணும் ஆவேசமும் உற்சாகமும் இன்னும் அவர் நவ யௌவன தசையில் இருக்கிறார் என்பதை நம்மை நம்பும்படி செய்கின்றன.

எது எப்படி இருந்தாலும் இந்தப் பிறந்த தின விழாவைப் பாரதமக்கள் பண்டித ஜவாஹரிடம் காட்டும் அன்பும் அபிமானமும் அவருடைய பிராயத்தின் சரிபாதியைக் குறைத்து விடும் என்று நம்புகிறோம்.

பாரத மக்களின் மங்காத அன்பின் சக்தியால் ஜவாஹர்லால் நேரு அவர்கள் நீடூழி வாழ்ந்து பாரத நாடும் பாரத மக்களும் மகோன்னத நிலைக்கு உயர்ந்து உலகம் கொண்டாடுவதை ஆண்டுதோறும் பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்க வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

---

*நேருஜியின் பூடான் விஜயக் காட்சிகளை எதிர்ப் பக்கத்தில் காணலாம். 1. பாரோ நகரத்தில் பூடானிய மக்கள் பிரதமர் நேருவுக்குக் குதூகலமான வரவேற்பளித்தனர். 2. பிடாசோராங் காங்டாக் சந்தையை ஒழுங்குறப் பார்த்துக் கொண்ட உழைப்பாளிகள் நேருஜியை மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றனர். 3. காங்டாக் நகரத்துக்கு அப்பாலுள்ள இயற்கை வனப்பை நேருஜி, சிக்கிம் மகாராஜா, ஸ்ரீமதி இந்திரா காந்தி மூவரும் கண்டு களிக்கின்றனர். 4. பாரோவுக்குச் செல்லும் வழியில் பிரதமர் நேரு 'யாக்' என்னும் மலை ஆட்டின் மீது சவாரி செய்கிறார். 5. சிக்கிம் மஹாராஜா பூடானிய முறையில் நேருஜியை வரவேற்கிறார். 6. பூடான் செல்லும் வழியில் பாகோகோட்டகிரா விமான நிலையத்தில் தம்மை வரவேற்ற குழந்தைகளுக்கு நேரு புஷ்பங்களை வழங்குகிறார். 7. சிக்கிம் மகாராஜா அரண்மனையில் நேருஜி.*

# அருள் வாக்கு

தர்மத்தையும் பக்தியையும் வளர்ப்பதற்காக நம் நாட்டில் முக்கியமாக, தென்னாட்டில், பல ஸ்தாபனங்கள் இருக்கின்றன. எல்லோரும் அவரவர்களுக்கு முடிந்த வரையில், அவரவர்களுடைய சமயக் கொள்கைகளுக்கேற்பு தர்மப் பிரசாரம் செய்து வருகிறார்கள். ஆனால் இந்த விஷயத்தில் நாம் எல்லோருமே இணைந்து செயல்படுவது நல்லது. தனித் தனியாக நின்றுவிட்டால் நெல்லிக்காய் மூட்டை போல ஆகிவிடக் கூடும். இது சாதாரணமாக நாம் சொல்லிக் கொள்ளும் உதாரணம். நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்து விட்டதும் ஒவ்வொரு நெல்லிக்கனியும் உருண்டு சிதறி ஒவ்வொரு பக்கத்துக்கு ஓடிவிடும். அவைகளை ஒன்றாக இணைக்கும் சக்தி அங்கே இல்லை. தர்மப் பிரசார விஷயத்தில் நாம் அப்படி இருக்கக் கூடாது.

நமது நாட்டில் பல மதங்கள் ஒரே சமயத்தில் பழக்கத்திலிருந்த போதிலும், எல்லா மதத்தினர்களும் நான்கு வேதங்களைப் பற்றியும் ஆறு சாஸ்திரங்களைப் பற்றியும் பேசிக் கொண்டேதானிருந்திருக்கின்றனர். இவற்றை ஆதாரமாகக் கொண்டே தான் பல்வேறு மார்க்கங்கள் கட்டுச் கோப்புகள் போல் எழுப்பப்பட்டிருக்கின்றன ஒரு மதத்தைப் பின்பற்றுகிறவர்கள் இதர மதத்தைப் பின்பற்றுகிறவர்களைப் பற்றிக் குறை கூறிக் கொண்டே இருக்கலாம். அப்படியிருந்தும் இந்தப் பல்வேறு மதங்களை ஸ்தாபித்த ஆசாரியர்களைப் பற்றிப் பக்தியுடன் மரியாதையாகவேதான் பேசுவார்கள். இதிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகத் தெரிகிறது. வெவ்வேறு சித்தாந்தங்கள் ஏற்பட்டுப் பிரசாரத்திலிருப்பது ஒருவருக்கொருவர் கட்சி செய்து கொண்டு பிரிந்து நின்று சண்டை போட்டுக் கொள்வதற்காக அல்ல; அவரவர்களுடைய மனோ பரிபாகத்துக்கும் ருசிக்கும் ஏற்றவாறு அவரவர்களுக்கு உகந்த மார்க்கங்களை ஏற்படுத்தி வழிகாட்டுவதற்காகவே அவைகள் அமைந்தவை. அடிப்படையான தத்துவங்களை எந்த சித்தாந்தமும் புறக்கணிப்பதில்லை என்பதைக் கவனித்தல் வேண்டும்.

இவையனைத்தும் ஹிந்து மதக் கொள்கைகளின் அடிப்படையில் ஒற்றுமையும், ஒருமைப்பாடுள்ள கருத்துக்களும் ஊடுருவிச் செல்லுகின்றன என்பதைத்தான் காட்டுகின்றன. ஹிந்து தர்மத்தை அழியாமல் பாதுகாப்பதற்காக ஒரு மார்க்கத்துக்குப் பதிலாகப் பல்வேறு மார்க்கங்கள் பல ஆசார்ய புருஷர்களால் வகுக்கப்பட்டன. இவற்றுள் ஏதாவது ஒன்று க்ஷீணமடைந்து நசித்து விட்டாலும் கூட, மற்றொரு மார்க்கம் தர்மத்தை அழிவுறாமல் பாதுகாக்கும். இதுதான் அவற்றின் நோக்கம். நமது மதமாகிய விருக்ஷத்துக்குத் தர்மம்தான வேர். பக்தியும் ஞானமும் அம்மரத்தின் புஷ்பமும் பழமும். வேர் உலர்ந்து நசித்துப்போகாமல் பார்த்துக் கொள்வது நம் எல்லோருடைய கடமை. தர்மத்தைப் பாதுகாப்பதில் எல்லா மதத்தினர்களுக்கும் பொறுப்புண்டு. எல்லா மதங்களுக்கும் பொதுவானதும், எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதுமான அம்சங்களை ஆதாரமாகக் கொண்டு எல்லா மதத்தினர்களும் ஒன்றுபட்டுச் செயல்படுவது நன்மை பயக்கும். அவ்வாறு செயல்பட வேண்டும். சிற்சில அம்சங்களில் விட்டுக் கொடுக்க வேண்டியுமிருக்கும்.

நமது தக்ஷிண பிராந்தியத்தில் நான்கு முக்கிய சித்தாந்தங்கள் பிரசாரத்தில் இருக்கின்றன. அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் என்ற நான்கும் நம்மிடையே இருக்கின்றன. இவைகளின் தலைவர்கள் எல்லோரும் தர்மத்தை வளர்ப்பதற்காக வேண்டி ஒன்றாகச் சேர்ந்தால், தீவிரமாக வேலை செய்ய வாய்ப்பு கிடைக்கலாம். தர்மத்தைப் பரப்ப நான்கு மதங்களைச் சார்ந்த மடாதிபதிகளைக் கொண்டு பல பிரசுரங்கள் வெளியிட முடியும். ஏற்கனவே ஹிந்து தர்ம பிரசார சபை ஒன்று சென்னையில் செயல் புரிந்து வருகிறது. இதையே பயன்படுத்திக் கொண்டால் பிரசாரத்தை விஸ்தரிக்க வாய்ப்பு கிடைக்கும். இது ஒரு உதாரணம். நாம் செய்ய வேண்டிய முதலாவது, முக்கிய கடமை, ஜனங்களிடையே தர்மத்தையும் பக்தியையும் வளர்ப்பதுதான். தர்மத்திலேயே பக்தி வேரூன்றி இருக்கிறது. தர்மம் நிலைத்து விட்டால் பக்தி தானாகவே நிலைபெற்று நின்றுவிடும். ஆகவே நாம் எல்லோரும் சேர்ந்து தர்மத்தை வளர்ப்போமாக.

ஸ்ரீ சங்கராச்சாரியார் • காஞ்சி காமகோடி பீடம் •




56

உயிரைப் போல் வேறொன்றில்லை, நாம் விட்டுப் பிரிய விரும்பாத பொருள். எதை விட்டாலும் உயிரை விடமாட்டோம். அத்தகைய பொருள் அல்லவா பிற உயிருக்கும் அதன் உயிர்? அதை உணராமல் பிற உயிரைக் கொல்லுவது எவ்வளவு பெரிய பாவம்!

விரும்பும் பொருள்களுக்குள் எல்லாம் அதிகமாக விரும்பும் உயிரை ஒரு பிராணியினின்று நீக்கும் செயலைச் செய்யாதே; உன் உயிரைக் காப்பதற்குக்கூட அதைச் செய்யாதே என்கிறார் முனிவர்.

தன்னுயிர் நீப்பினும்
செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும்
வினை.

எந்தப் பிராணியையும் கொல்லாதே; கொல்லுவது உன் தொழிலல்ல. பிராணிகளுக்கு இயற்கையில் ஆண்டவன் மரணத்தை அமைத்திருக்கிறான். அதைச் செய்யும் அதிகாரம் உனக்கு இல்லை என்கிறார்.

இந்த உபதேசத்தை எல்லாரும் தீர நடத்தி விட்டால் இப்படியாகுமே அப்படியாகுமே என்று சிலர் வாதிப்பார்கள். "எந்த உபதேசமும் உலகம் முழுதும் ஒப்புக் கொண்டு நடத்தி விடப் போவது இல்லை. ஆகையால் நீ அதற்காகப் பயப்பட வேண்டியதில்லை. இந்த உபதேசம் உனக்கு நல்லது. நீ செய். அதனால் நன்மை அடைவாய்" என்றே முனிவரும் காந்தியும் கொல்லாமையை உபதேசித்தார்கள்.

எல்லாம் சேர்த்து முனிவர் ஒரு குறளில் சொல்லுகிறார்:

பகுத்துண்டு பல்லுயிர்
ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம்
தலை.

நீ பெற்ற உணவைப் பசித்தவர்களுக்குக் கொடுத்து நீயும் உண்பாயாக. பிறர் பசியைப் பார்த்துக் கொண்டு நீ மட்டும் உன் பசியைத் தீர்த்துக் கொள்ளாதே. பிற ஜீவன்களைக் காப்பாற்றுவது உன் கடமை. எந்தப் பிராணியின் உயிரையும் அழித்துக் கொல்லாதே. எல்லாச் சமய சாத்திரங்களில் விதிக்கப்பட்ட தருமங்களில் இதுவே சிறந்த தருமம். உணவைப் பற்றிச் சொன்னது போக, வேறு காரணங்களுக்காகவும் கொல்லாதே; எந்தப் பிராணியின் உயிரும் அதற்கு மிகப் பிரியம். உனக்கு உன் உயிரைப் போல் அதற்கு அதன் உயிர். சிறியதாயினும் பெரியதாயினும் உயிரின் பிரியம் அந்த அந்தப் பிராணிக்கு ஒரே அளவினதாகும். கடலின் அளவினதாகும்.

கொல்லுவது பாவம். அதிலும் உணவுக்காகக் கொல்லுவது மிக நீசமான காரியம். கோபத்தில் கொல்லுவதே பாவம், அப்படியிருக்க உன் நாக்குக்குத் திருப்தி கொடுக்கவா கொல்லுவது?

• • •

சாப்பாட்டு முறையில் ஜீவஹிம்சையை ஒழிப்பது பற்றி முனிவர்

விளக்கமாக உபதேசித்திருக்கிறார். இதைப் பற்றி விவாதம் கிளப்ப எனக்குப் பிரியமில்லை. ஆனால் ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். வனஸ்பதி ஆசார விரதம் அனுசரிப்பவர்களில் பலர் வேறு விதங்களில் கொடுந் துன்பம் இழைக்கக் கூடியவர்களாயும் இருக்கக் கூடும். தங்கள் குல வழக்கத்தின்படி ஓரளவு மாமிசம் சேர்த்துக் கொண்டு, காலம் கழிப்பவர்களில் பலர் மிக நல்ல தயாளசீலர்களாகவும் இருக்கிறார்கள். ஆனால் தெய்வ வழிபாட்டுக்கென்று ஜீவ ஹிம்சை செய்யும் முறை அறிவீனமாகும்.

* * *

முன்னொரு காலத்தில் இந்திரன் ராஜாவாக இருந்தான். அவன் ஒரு சமயம் யாகம் செய்ய ஆரம்பித்தான். அப்போது அவ்விடம் வந்திருந்த மகரிஷிகள் யாகத்தில் கொல்லப்படுவதற்காகக் கட்டப்பட்டிருந்த பிராணிகளைப் பார்த்து இரக்கம் மேவிட்டு மனம் கலங்கினார்கள். அவர்கள் இந்திரனிடம் சென்று, "மகாராஜாவே! இந்த யாகத்தின் முறை நல்லதன்று. தர்மத்தை விரும்பி இதைச் செய்கிறாய். புரந்தரனே! யாகத்தில் பிராணிகளைக் கொல்ல வேண்டுமென்று சாஸ்திரத்தில் காணப்படவில்லை. நீ செய்திருக்கும் இந்தப் பிராண ஹிம்சை ஏற்பாடுகள் தர்மத்தைக் கெடுக்கும். ஹிம்சை எக்காலத்திலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் தர்மமாகாது. உனக்கு யாகம் செய்ய வேண்டும் என்று விருப்பமாயிருந்தால் சாஸ்திரப்படி செய்விப்பாயாக. அவ்வாறு செய்தால் பயனுண்டாகும். மூன்று வருஷங்கள் ஆன பழைய தானியத்தைக் கொண்டு யாகத்தைச் செய்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

இவ்வாறு மகரிஷிகள் சொன்னது இந்திரனுக்குப் பிடிக்கவில்லை. அகங்காரமும் மோகமும் அவனைப் பிடித்தன. தத்துவம் கண்ட அவர்கள் சொன்ன புத்திமதியை அவன் அங்கீகரிக்கவில்லை. கூடியிருந்த பண்டிதர்களுக்குள் பெரிய விவாதம் உண்டாயிற்று.

விவாதம் வெகு நேரம் நடந்தது. உண்மை அறிந்த ரிஷிகள் விவாத சிரமத்ினால் ஓய்ந்து போனார்கள் என்று வைசம்பாயனர் சொல்கிறார். அவர்களை இந்திரன் கூப்பிட்டு, வசு என்கிற ஒரு புகழ்பெற்ற அரசனிடம் அனுப்பி, அவன் தீர்ப்பின்படி நடக்க வேண்டியது என்று உத்தரவிட்டான். ரிஷிகள் வசுவிடம் சென்று, "அறிவில் சிறந்தவனே! தர்மத்தில் சமுசயமடைந்த எங்களுக்கு நீ உண்மையைச் சொல்ல வேண்டும். யாகங்களைப் பற்றிச் சாஸ்திரம் என்ன சொல்லுகிறது? நல்ல குணம் படைத்த பசுக்களைக் கொண்டு யாகம் செய்யவேண்டியதா?" என்று கேட்டார்கள்.

அந்த அரசன் இவர்கள் பிரச்னையைக் கேட்டு ஆராயாமல் உடனே பதில் சொல்லிவிட்டான். "கிடைத்தவைகளைக் கொண்டு யாகம் செய்ய வேண்டும். போங்கள்" என்றான்.

அந்த அரசன் சரியான கவனம் செலுத்தி ஆராய்ச்சி செய்யாமல் இவ்வாறு தவறான பதில் சொல்லி அசத்தியம் பேசியபடியால், பாதாளம் சென்றான். இந்தச் சிறந்த உபாக்கியானத்தைச் சொல்லி விட்டு வைசம்பாயனர் இன்னும் சொல்லுவதாவது:

'ஹிம்சிப்பவன் எவ்வளவு தானம் செய்தாலும் சடேறமாட்டான். அநியாயமாய்க் கிடைத்த திரவியத்தைச் சிலர் தானம் செய்வார்கள். அவர்கள் ஒரு நல்ல பயனையும் அடையமாட்டார்கள். கபட எண்ணத்துடன் தானம் செய்பவனும், தன்னிடம் நம்பிக்கை உண்டாக வேண்டியதற்காகவோ அல்லது வீண் பெருமைக்காகவோ தானம் கொடுக்கிறவனும் முடிவில் கெட்ட கதியை அடைவார்கள். பிராணிகளை ஹிம்சை செய்து யாகம் செய்பவனும் பாவமான வழியில் சம்பாதித்த தனத்தைக் கொண்டு அஞ்ஞானத்தால் தானம் செய்கிறவனும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட யாக தானங்களின் பயனை அடைய மாட்டான். சக்திக்குத் தக்கவாறு நல்ல வழியில் கிடைத்த பொருளைத் தானம் செய்பவர்களும் ஹிம்சையில்லாமல் யாகம் செய்பவர்களுமே சுவர்க்கம் அடைகிறார்கள். பிராணிகளிடத்தில் கருணையும் பிரம்மசரியமும் உண்மையும் பச்சாத்தாபமும் தைரிய

[மகாபாரதம் — அசுவமேதபர்வம் 94, 95 அத்தியாயங்கள்.]

மும் பொறுமையுமே, தர்மமும் யோகமுமாகும்.

முற்காலத்தில் அகஸ்தியர் ஒரு மகா யாகம் செய்தார். பன்னிரண்டு வருஷங்கள் நடந்த அந்த ஸத்ரயாகத்தில் ஹிம்சை முறை ஏதும் இல்லாமல் கனி, கிழங்கு தானியங்களைக்கொண்டே எல்லாம் நடந்தது. யாகத்துக்கு இந்திரன் இடையூறு செய்யப் பார்த்தான். மழையில்லாமல் செய்து தானியம் கிடைக்காமல் செய்தான். 'இதற்கு என்ன செய்வது?' என்று முனிவர்கள் அகஸ்தியரைக் கேட்டார்கள். அவர் "இந்திரன் பன்னிரண்டு வருஷங்களும் மழையை நிறுத்தி விட்டாலும், நான் மானஸிகமான வேள்வியைச் செய்வேன். இது சநாதன விதி!" என்றார்.

தம்முடைய தவ வலியால் அகஸ்தியர் இந்திரனைத் தோற்கடித்து யாகத்துக்கு வேண்டியதைச் சிருஷ்டித்துக் கொண்டார். பிறகு இந்திரனே வந்து தான் தோற்றதாக ஒப்புக்கொண்டு மழை பெய்வித்தான். "ஹிம்சையற்ற யாகமுறை அகஸ்தியரால் ஸ்தாபிக்கப்பட்டது" என்கிறார் வைசம்பாயனர்.


...இதே மாதிரி
மேலும்
என்னுடைய உடல்
உறுதியாக
வளர......
பார்லேயின்
க்ளுகோ
பிஸ்கெட்டுகள்
Parle Gluco
BISCUITS
ENRICHED WITH VITAMINS
விட்டமின்கள்
செறிந்தது
பார்லே ப்ராடக்டஸ் மானுபாக்சரிங்
கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்.

# இலங்கையில் தமிழ் ஒழிப்பு

**இ. வன்னியசிங்கம்**

தென் ஆபிரிக்காவின் இன ஒதுக்கல் கொள்கையை மிகவும் வன்மையாகக் கண்டிக்கிறார்கள். கண்டிக்க வேண்டியதுதான். இந்த இன ஒதுக்கல் பிரச்னை ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் பல முறைகள் இந்தியாவின் பிரேரணை மீது விவாதிக்கப் பட்டிருக்கிறது. இன ஒதுக்கலைக் கண்டித்த நாடுகளில் ஒன்று இலங்கை. ஆனால் அதே இலங்கை இன ஒதுக்கலை மிகவும் கேவலமானதும், அருவருப்பு தரத்தக்கதுமான தமிழன் ஒழிப்பு நடவடிக்கையில் நேரடியாக ஈடுபட்டும், மறைமுகமாக இன ஒழிப்பு நடவடிக்கைகளுக்கு ஆதரவு கொடுத்தும் வருகிறது. இந்த இன ஒழிப்புக் கொள்கையின் ஓர் அம்சம்தான், தமிழ் மொழி ஒழிப்பாகத் தலை விரித்தாடுகிறது.

சமீபத்தில் தமிழ் மொழிச் சட்ட மூலம் தமிழ் மக்களுக்கு ஓரளவு நீதி வழங்கப்பட்டதாக வெளியூர்களில் நம்பும் வகையில் இலங்கை அரசாங்கம் செய்திருக்கிறது. தமிழ் மொழிச் சட்டம் எவ்வளவு மோசமானது என்பதையும், அதன் உண்மையான அடிப்படை நோக்கம் தமிழ் ஒழிப்புத்தான் என்பதையும் சட்டத்தின் பிரிவுகளைக் கொண்டும், பாராளு மன்றத்தில் தமிழ் மொழி மசோதா விவாதிக்கப்பட்டபொழுது பிரதம மந்திரியும், உணவு மந்திரியும் நிகழ்த்திய பேச்சுக்களைக் கொண்டும் ஆதாரபூர்வமாக நிரூபிப்பதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

ஒவ்வொரு பிரிவிலும், அதிலுள்ள சிறிய நல்ல அம்சங்களைக் கூட வேறு கட்டுப்பாடுகள், புறநடைகள் மூலம் கெடுத்திருப்பதை நாம் பார்க்கலாம். புறநடைகள், கட்டுப்பாடுகளைக் கவனியாது மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் ஓரளவு நன்மை யிருப்பதாகவே தோன்றும். பிரிவுகளுக்குப் பகட்டான தலைப்புக்களைக் கொடுத்திருக்கிறார்கள். இந்தத் தலைப்புக்களைத்தான் வெளிநாட்டுப் பத்திரிகைகள் வெளியிட முடிகிறது. அந்தத் தலைப்புகளைப் படிப்பவர்கள் 'மசோதா பரவாயில்லையே' என்று சொல்லிவிடத் தோன்றுகிறது.

25-4-57ல் இலங்கையில் தமிழ் மொழியின் நியாயமான அளவு பிரயோகம் பற்றித் தமது நான்கு அம்சத் திட்டம் என ஓர் திட்டத்தை இலங்கைப் பிரதமர் ஜனப் பிரதிநிதிகள் சபையில் வெளியிட்டார். இந்தத் திட்டத்தில் கூறியவற்றைக் கூட முற்றாகச் சட்டத்தில் சேர்க்கவில்லை.

எட்டு பிரிவுகள் அடங்கியசட்டத்தில், முதல் பிரிவு, சட்டத்தின் பெயர் கூறுகிறது; 8-வது பிரிவு, சட்டத்தில் பிரயோகிக்கப்பட்ட சில பதங்களுக்கு அர்த்தங்கள் தருகிறது. 6-வது பிரிவு, சட்டத்தின் வரம்புக்குட்பட்டும் பாராளுமன்றத்தின் அனுமதியுடன் பிரமாணங்கள் அமைக்க மந்திரிக்கு அதிகாரம் வழங்குகிறது; 7-வது பிரிவு, தமிழ்மொழிச் சட்டம் தனிச் சிங்களச் சட்டத்துக்கமைவாகவே அமுல் நடத்தப்பட வேண்டுமென்று கூறுகிறது. பாக்கி 4 பிரிவுகளில் பிரதமரின் நாலு அம்சத் திட்டத்தில் சில பாகங்களை மட்டும் காணலாம். ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு அம்சத்தை அடக்கியுள்ளதாகச் சொல்லப்படுகிறது. அவற்றைக் கொஞ்சம் ஆராய்வோம்.

* *

இரண்டாம் பிரிவின் முதல் உப பிரிவு, கல்விச் சட்டத்தின்கீழ் இப்போது உண்டாக்கப்பட்டதும், இனிமேல் உண்டாக்கப்படக் கூடிய விதிகளுக்கும் அமைவாக ஒவ்வொரு தமிழ் மாணவருக்கும் தமிழ்மொழி மூலம் கல்வி பயிற்றப்படும் உரிமை உண்டென்று கூறுகிறது. சாதாரணமாக வாசிப்பவர்களுக்கு இதில் ஓர் தப்பும் இல்லை என்று தோன்றும். கல்விச் சட்டத்திலும் அதன்கீழ் ஆக்கப்படும் பிரமாணங்கள் விதிகளிலும் பாடவிதிகள் முதலிய கல்வி சம்பந்தமான விஷயங்கள் மட்டுமே அடங்கியிருக்கும் என்றும் தாய்மொழி மூலம் கல்வி பயின்றலும், கல்விச் சட்டத்துக்கும் அதன்கீழ் ஏற்படும் பிரமாணங்களுக்கு அமைவாகவும் தானே இருக்க வேண்டுமென்றும் நினைக்கத் தோன்றும். ஆனால் இப்போதே பிரமாணமாகியிருக்கும் விதிகளில் ஒன்று, தமிழ்ப் பெற்றோர் விரும்பினால், தங்கள் குழந்தைகளுக்குச் சிங்களம் மூலம் கல்வி கற்பிக்கலாம் என்று கூறுகிறது என்பது வெளியில் யாருக்குத் தெரியப் போகிறது? பாராளு மன்றத்தில், இந்த விதிக்கு அனுமதி கோரிப்பேசிய கல்வி மந்திரி, விரும்பினால் சிங்களம் மூலம் கல்வி கற்பிக்கத் தமிழ்ப்பெற்றோர்களுக்கு ஜனநாயக ரீதியில் உரிமை வழங்குவதே இந்த விதியின் நோக்கம் என்று கூறிவைத்தார். ஜனநாயக ரீதியில் சிங்களப் பெற்றோர்கள் விரும்பினால் தங்கள் பிள்ளைகளுக்குத் தமிழ் மொழிமூலம் கல்வி கற்பிக்கும் உரிமை ஏன் வழங்கப்பட



ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்சஸ் பிரைவேட் லிமிடெட் கம்பெனியின் மனேஜிங் டைரக்டர் திரு பலசுப்பாய் தமது மனைவியாரோடு ஐரோப்பா, மத்திய கிழக்கு நாடுகளுக்குப் பிரயாணமானுர். 'இனிர்டேசன்' தொழிற் சாதனங்கள் அயல் நாடுகளில் விற்பனையாவதற்குரிய வழி வகைகளை ஆராய்ந்து வருவதற்கே அவர் சென்றிருக்கிறர்.

இல்லை? அன்றி, சிங்களப் பெற்றோர்களுக்கும், தமிழ்ப் பெற்றோர்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்கு ஆங்கிலத்தில் கல்வி பயிற்றும் உரிமையை ஏன் ஜனநாயக ரீதியில் வழங்கவில்லை என்றும், ஏன் சிங்கள மொழியில் கல்வி பயிற்றுவதற்கு மட்டும் தமிழ்ப் பெற்றோர்களுக்கு மட்டும் உரிமை வழங்க வேண்டும் என்றும் தமிழ்ப் பிரதிநிதிகள் கேட்டார்கள். ''சிங்களம் அரசாங்க மொழி. அதனைப் பயில்வதற்கு அளிக்கும் வசதி மற்ற மொழிகளுக்கு வழங்க முடியாது'' என்று தங்குதடையின்றிப் பதில் வந்தது. இந்தப் பிரமாணத்தை வைத்து, தமிழ் மக்கள் அதிகமாகவுள்ள வடக்கு கிழக்கு மாகாணங்களைத் தவிர்த்த ஏனைய பிரதேசங்களிலெல்லாம், ஒரே பள்ளிக்கூடத்தில் சிங்களம், தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் கல்வி போதித்து, சகல வகுப்புகளையும் இரு கூருகப் பிரிப்பது சாத்தியமில்லை என்றும், தமிழ் மாணவர்களுக்கென்று தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் நடத்துவதோ தமிழ் வகுப்புகள் நடத்துவதோ சாத்தியமில்லை என்றும் சொல்லி, சிங்களத்தில் பயிற்சி பெற விரும்புவதாக எழுதிக் கொடுத்தால் இலகுவாகப் பள்ளிக்கூடங்களில் சேர்க்கலாம் என்று தமிழ்ப் பெற்றோர்களை நிர்ப்பந்திக்கிறர்கள். எத்தனையோ பள்ளிகளில் தமிழ் மூலம் கல்வி கற்பிக்கும் வகுப்புகளுக்கு மூடுவிழா நடந்து விட்டது; நடந்து கொண்டிருக்கிறது; மேலும் தீவிரமாக நடக்கும். தமிழ் மொழி மூலம் கல்வி என்ற உரிமை பெயரளவில் இருக்கிறது. ஆனல் கல்விச் சட்டத்துக்கும், அதன்கீழ் ஏற்பட்டுள்ள பிரமாணங்களுக்கும் அமைவாக உள்ள உரிமையாதலால், இந்த உரிமையை இலகுவில் தன் விருப்பத்தின்படி விடலாம் என்று பிரமாணம். காரியாம்சத்தில் உரிமையை இழந்து விடுவதற்கு நிர்ப்பந்தம் செய்து வருகிறர்கள்.

கல்வி சம்பந்தமாக இன்னொன்று கவனிக்க வேண்டியது. இப்பொழுதுள்ள விதிகளின்படி சிங்கள மாணவர்களுக்கும் சரி, தமிழ் மாணவர்களுக்கும் சரி ஆங்கிலம் இரண்டாவது மொழியாகப் போதிக்கப்படுகிறது. சிங்களம் மூலம் கல்வி பயில்வோர் தமிழைக் கற்க வேண்டும் என்றோ, தமிழ் மொழி மூலம் கல்வி பயில்வோர் சிங்களம் கற்க வேண்டும் என்றோ நியதியில்லை. சிங்களம் மூலம் கல்வி பயிலும் மாணவர்களைப் பொறுத்தவரை, அவர்கள் தொடர்ந்து ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாகப் பயில்வர். ஆங்கிலக் கல்வியினால் விஞ்ஞானப் பாடங்கள் முதலியவற்றில் உயர்தரக் கல்வி பயிலவும், ஓர் உலக மொழியை அறிந்ததன் மூலம் வெளிநாடுகளுடன் தொடர்பு கொள்ளவும், பலவித வசதிகள் பெறவும் ஏதுவாகிறது. தமிழ் மாணவர்களைப் பொறுத்தவரையில் இதில் மாறுதல்கள் ஏற்படுமென மசோதாவைப் பிரேரேபித்துப் பேசிய பிரதமரே கூறியிருக்கிறார். தமிழ் மாணவர்களுக்கு, ஆங்கிலத்துக்கு பதில், உலகத்தில் வேறெந்த நாட்டிலுமே பேசப்படாத மொழியான சிங்களம் இரண்டாவது மொழியாகப் போதிக்கப்படும். பிரதமரின் வார்த்தைகளையே எடுத்துக் காட்டுகிறேன்:

''வருங்காலத்தில் தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் சிங்களம் இரண்டாம் மொழியாகப் பயிற்றப்பட்டும், பயிலப்பட்டும் வரும். அவ்விதம் பயிலப்படும் காலத்தில்,' உத்தியோகத்தில் சேர்ந்த பின்னர் சிங்களத்தில் தேர்ச்சி பெறுவதென்பதை நிறுத்தி, தெரிவுப் பரீட்சையிலேயே சிங்களத்தில் ஒன்று அல்லது இரண்டு வினாப் பத்திரங்கள் எழுத வேண்டும் என்ற நியதி ஏற்படுத்திவிடலாம். இவ்வித நிலை அடையச் சில வருடங்கள் பிடிக்கலாம். ஆனல் அந்த நிலை இயல்பாகவும், தானுகவும் வந்தே தீரும் என நிச்சயமாகக் கூறுவேன்.''—(பிரதிநிதிகள் சபை நடவடிக்கைப் புத்தகம் 5-8-58 பத்தி 1966) ஆகவே, பிரதமரின் கூற்றுப்படியே தமிழில் கல்வி பயிலும் மாணவர்களுக்கு, சிங்களம் இரண்டாவது மொழியாகவும், கட்டாயமாகவும் போதிக்கப்பட இருக்கிறது. தமிழ் மாணவர்கள் ஆங்கிலம் பயில வேண்டுமானல் மூன்றாவது மொழியாகத்தான் பயில வேண்டும். அல்லாவிடில் ஆங்கில அறிவால் பெறக்கூடிய நன்மைகள் அனைத்தும் இழந்து, இலங்கைக்கு வெளியே எங்குமே தெரியாத சிங்களத்தை இரண்டாவது மொழியாகப் பயில்வதுடன் திருப்தியடைந்திருக்க வேண்டும்.'

இரண்டாவது பிரிவின், இரண்டாவது உபபிரிவு இலங்கைப் பல்கலைக் கழகத்தில் சிங்களம் போதனு மொழியாக வருங்காலத்தில், தமிழ் மூலம் கல்வி பயின்ற மாணவர்களுக்குத் தமிழ் மொழி போதனு மொழியாக வர வேண்டுமென்று கூறுகிறது. உடனடியாகவே தமிழில் போதிப்பது சாத்தியமாக இருந்த போதிலும், சிங்களத்தில் போதிப்பது சாத்தியமாகும் வரை தமிழும் பின்தங்கி நிற்க வேண்டும். முன்னேறிவிடக் கூடாது. அதற்காகவே அரசாங்கம் தமிழ் சர்வகலாசாலை ஏற்படுவதையும் வேண்டுமென்றே தடுத்து வைத்திருக்கிறது. ஓரே சர்வகலா

சாலையிலேயே தமிழ் மாணவர்களையும், சிங்கள மாணவர்களையும் வைத்து, சிங்களம் மூலம் கல்வி ஏற்படும் காலத்தில்தான் தமிழ் மூலம் கல்வி ஏற்படலாம் என்பதைச் சட்டமாக்கியதும், அதே சமயத்தில் ''வித்தியாலங்கார,'' ''வித்தியோதய பிரிவெனு''க்களைச் சிங்கள சர்வகலாசாலைகளாக்கியதும், தமிழை எவ்விதத்திலும் சிங்களத்திலும் முன்னேற விடலாகாது என்ற கொள்கையை அம்பலமாக்குகிறது.

இந்தச் சட்டத்தின் ஒவ்வொரு பிரிவிலும் உப பிரிவிலுங்கூடத் தமிழ் ஒழிப்புக் கொள்கை அடிப்படையாக இருப்பதைக் காணலாம்.

தமிழ் மொழிச் சட்டத்தில் இல்லாததெனிலும், தமிழ் மாணவர்களின் உயர்தரக் கல்வி சம்பந்தமாக இந்த ஆண்டில் ஏற்பட்டிருக்கும் இன்னொரு கட்டுப்பாடு பற்றியும் குறிப்பிடுவது பொருத்தமென்றே கருதுகிறேன். சென்னை மாகாணத்திலுள்ள பல்கலைக் கழகங்களிலும், இந்தியாவில் வேறு இடங்களிலுள்ள பல்கலைக் கழகங்களிலும் கூட ஏறக்குறைய ஆயிரம் தமிழ் மாணவர்கள் இலங்கையிலிருந்து வந்து உயர்தரக் கல்வி பெறுவது வழக்கம். இந்த ஆண்டு தொடக்கம் அவர்கள் நேரடியாகக் கல்லூரிகளுக்கு மனுச் செய்து சேர்ந்து கொள்ள முடியாது. இலங்கையிலுள்ள அதிபர், தில்லியிலுள்ள இலங்கை கமிஷனர் மூலம் மனுச் செய்துதான் கலாசாலைகளில் இடம் பெறலாம். அவர்கள் மனுவை உரிய கல்லூரிக்கோ, கலாசாலைக்கோ அனுப்புவதற்கு முன், மனுச் செய்தவர் 'இலங்கையில் ஏன் அதே கல்வியைப் பெற முயற்சி செய்யவில்லை?' என்ற கேள்வி எழுந்து விடுகிறது. இலங்கையிலுள்ள ஒரேயொரு பல்கலைக் கழகத்தில் இடத்துக்குப் போட்டி போடும் தமிழ் மாணவர்கள் அனைவர்க்கும் இடம் கிடைப்பது முற்றிலும் முடியாத காரியம் என்பது யாருக்கும் தெரியும். ஆனாலும் இலங்கையில் ஏன் இந்தக் கல்வி பெறவில்லை என்று அர்த்தமற்ற கேள்வியைக் கேட்டுப் பல மாணவர்களைத் தடுத்து விடுகிறார்கள்.

தமிழ் மொழிச் சட்டத்தின் 3-வது பிரிவின்படி தமிழ் மூலம் கல்வி பயின்றவர்கள் தமிழிலேயே அரசாங்க உத்தியோகங்களுக்கான தெரிவுப் பரீட்சைகளில் எழுதும் உரிமை உண்டென்று கூறுகிறது. இதற்கும் இரண்டு நிபந்தனைகள்! 1. தெரிவுப் பரீட்சையிலேயே, உத்தியோக மொழியாகிய சிங்களத்தில் போதிய தேர்ச்சி இருக்கிறதா என்று பரீட்சிக்க விதிகள் அமைக்கலாம். அல்லது 2. உத்தியோகக் கடமையேற்றுக் குறிப்பிட்ட காலத்துக்குள் (உத்தியோகம் பலப்படுமுன்) வேண்டிய சிங்கள மொழிப் பயிற்சி பெற்றேயாக வேண்டும். மேலும் விளக்கப் பிரமாணமாகத் தமிழ்மூலம் கல்வி பயிற்றும் பாடசாலைகளில் சிங்களம் போதிப்பதற்குப் போதிய வசதிகள் ஏற்பட்ட காலத்தில், உத்தியோகம் ஏற்ற பின் சிங்களத்தில் தேறும் நிபந்தனையை முற்றாக நீக்கித் தெரிவுப் பரீட்சையிலேயே சிங்களத்திலும் தேற வேண்டும் என்ற நிபந்தனையை மட்டும் அமுல் நடத்தவும் அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது!

ஆகவே, சில வருடங்களுக்குப் பின் தமிழ் மாணவர்களெல்லாம், சிங்களத்தைக் கட்டாய பாடமாகக் கற்று, தெரிவுப் பரீட்சைகளிலேயே சிங்களத்திலும் தேர்ச்சி பெற வேண்டுமென்று நிர்ப்பந்திக்கப்படுவர். தாய் நாட்டில் இந்தி மொழித் திணிப்பா, அன்றிச் சேய் நாட்டில் சிங்கள மொழித் திணிப்பா, எது தீவிரமாக நடத்தப்படுகிறது என்பதை விஷயமறிந்தவர்கள் உற்று நோக்குவார்களாக.



எச்சுளுளம் கல்வி ஏஜண்ட் திரு ராமநாதன் அவர்களின் தந்தையும், ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியருமான திரு ஏ. ராமச்சந்திரய்யருக்குச் சதாபிஷேகம் சமீபத்தில் வெகு விமரிசையாக நடந்தேறியது. ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீ சங்கராச்சாரியார் தம்பதிகளுக்கு நல்லாசிகள் அனுப்பியிருந்தார்.

இனி 4-வது பிரிவைக் கவனிப்போம். அதன்மீது 25-4-57 அன்று பிரதிநிதிகள் சபையில் பிரதமர் பண்டாரநாயகா கூறியது:

''மற்ற விஷயம் கடிதம் எழுதலும், அலுவல்கள் முடித்தலும் ஆகும். தமிழ் மூலம் கல்வி என்பது ஒப்புக் கொள்ளப்பட்டால், அம் மொழி மூலம் கல்வி பயின்றவர், அம் மொழியிலேயே கடிதங்கள் எழுதவும், பதில் பெறவும் வாய்ப்புக் கொடுக்கத்தானே வேண்டும்?'' 25-4-57ல் தமிழ் மூலம் அலுவல்கள் முடித்தல் என்பதைப் பிரதமர் கூறியிருந்த போதிலும், தமிழ் மொழிச் சட்டத்தில் இதற்குச் சிறிதும் இடம் கிடையாது. கடிதம் தமிழில் எழுதுவது மட்டுமே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அலுவல்கள் முடித்துக் கொள்வது என்பது கடிதம் எழுதுவதிலும் மிகவும் விரிந்ததொன்று. கடிதம் எழுதுவது அலுவல்கள் முடிப்பதில் ஓர் வழியாக இருக்கலாம். ஓர் அலுவலகத்துக்குத் தமிழ் மட்டும் தெரிந்த ஒருவர் சென்றால், அங்குள்ள விளம்பரங்கள், பெயர்ப் பலகைகள் தமிழில் இருந்தால்தான் அவர் தமக்குவேண்டிய காரியத்தை முடித்துக் கொள்ள முடியும். அவர் அந்த அலுவலகத்தில் நிரப்ப வேண்டிய பத்திரங்கள் தமிழில் அச்சிடப்பட்டிருந்தால்தான், தமிழில்நிரப்பித் தமக்கு வேண்டிய அலுவலைச் செய்யமுடியும். அங்குள்ள உத்தியோகஸ்தர்கள், சிப்பந்தி

களிடம் தமிழில் பேச முடிந்தால்தான் தமிழில் அலுவல்களை முடிக்கலாம். வெறுமனே தமிழில் கடிதம் எழுதும் உரிமை மட்டும் இருந்தால், தமிழ் மொழி மூலம் அலுவல் முடித்தல் நடந்து விடாது.

இதற்கும் பிரதமர் விளக்கம் தந்திருக்கிறார்.

''தமிழ் மகனுக்குத் தமிழில் கடிதம் எழுதும் உரிமை இருக்க வேண்டும். ஆனால் அதே சமயத்தில் சிங்களம்தான் உத்தியோகமொழி என்பதைப் பாதுகாக்க வேண்டும். இதற்காக, கடிதத்துக்கு அனுப்பும் பதில் உத்தியோக மொழியாகிய சிங்களத்திலேயே அனுப்பி, அத்துடன் சிங்களம் தெரியாத தமிழ் மகனின் சௌகரியத்துக்காக, சிங்களக் கடிதத்தின் தமிழாக்கமோ, அன்றிக் கடிதத்தின் சாரத்தைத் தமிழில் எழுதியோ சேர்த்து அனுப்பிவிடவேண்டியது. காலகதியில் தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் சிங்களம் போதிக்கப்படுமாகையால், கடிதத்தின் தமிழாக்கத்தையோ, சாரத்தைத் தமிழில் எழுதி அனுப்புவதையோ நிறுத்தி விடலாம்.'' (5—8—58 பிரதிநிதிகள் சபை நடவடிக்கைப் புத்தகம்—பந்தி : 1969.)

தமிழ்மகன் தமிழில் கடிதம் எழுதுவதற்குப் பண்டாரநாயகாவின் தயவோ உத்தரவோ தேவையில்லை. தமிழில் வரும் கடிதங்களுக்கு அவரது அரசாங்கம் எப்படிப் பதிலளிக்கும் என்பதை அவரின் வார்த்தைகளே தெளிவுபடுத்துகின்றன. வேறு குறிப்புரையொன்றும் தேவையேயில்லை.

ஐந்தாவது பிரிவு : 'உத்தியோக மொழியின் நிலை பங்கப்படாது. அதற்கு அமைவாகவே சில குறிப்பிட்ட நிர்வாகக் காரியங்களுக்கு, வடக்கு கிழக்கு மாகாணங்களில் தமிழை உபயோகிக்கலாம் என்று ஐந்தாம் பிரிவு கூறுகிறது. குறிப்பிட்ட நிர்வாகக் காரியங்கள் எவையெவை என்பதை மேற்கொண்டு தான் பார்க்க வேண்டும்'' என்று பிரதம மந்திரியே கூறியிருக்கிறார்.

இச்சட்டம் மொத்தத்தில் தமிழ் மொழிக்குப் பிரதேச அந்தஸ்து கூட வழங்கவில்லை என்பதைப் பிரதமரே ஒப்புக் கொண்டிருக்கிறார். 1955ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 10ந் தேதி நடந்த ஓர் கூட்டத்தில், சிங்களம் மட்டுமே உத்தியோக மொழியாகவும், வடக்கு—கிழக்கு மாகாணங்களில் தமிழ் பிரதேச மொழியாகவும் ஆக்கப்பட வேண்டுமென்று ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதை உணவு மந்திரி தமிழ் மொழி மசோதா பற்றி நடந்த விவாதத்தில் குறிப்பிட்டார். (பிரதிநிதிகள் சபை நடவடிக்கை 5-8-58 பந்தி 2070 பார்க்க) இதே விஷயத்தைப்பற்றிக் குறிப்பிட்டுப் பிரதமர் பண்டாரநாயகா பேசியது: ''அழகிய கௌரவ வெளிமடை அங்கத்தினர் இன்று கண்ணீர் பெருக்கக்கூடிய அளவுக்கு இம் மசோதா பற்றி ஆத்திரமடைந்ததற்கு நான் மிகவும் வருந்துகிறேன். கௌரவ கிருஷிக உணவு மந்திரி குறிப்பிட்ட 1955 செப்டம்பர் கூட்டத்தில் அவர் கணவரே தமிழ் மொழிக்குக் கொடுக்க இசைந்த (பிரதேச மொழி) அந்தஸ்திலும் மிகக் குறைவாகவே இந்த மசோதாவில் கொடுத்திருக்கும்போது அவர் ஏன் அழவேண்டும்?'' (பிரதிநிதிகள் சபை நடவடிக்கை புத்தகம் 5-8-58 பந்தி 2075).

இதுகாறும் சட்டத்திலேயே கூறப்படும் புறநடைகள், கட்டுப்பாடுகளையும், பிரதமர் பண்டாரநாயகா கூறிய விளக்கங்களையும் கொண்டே மசோதா எவ்வளவு மோசமானது என்பதைக் காண்பித்தோம். இவற்றைக் கவனியாது, 1. ஆரம்ப முதல் பல்கலைக் கழகப் படிப்புவரை தமிழ் மாணவர்களுக்குத் தமிழ் மொழி மூலம் கல்வி. 2. கல்வி முடிந்து, உத்தியோகம்தேடுபவர்களுக்குத் தமிழிலேயே தேர்வுப் பரீட்சை. 3. தமிழிலேயே அரசாங்கத்துடன் கடிதத் தொடர்பு வைத்துக் கொள்ளும் உரிமை. 4. வடக்கு கிழக்கு மாகாணங்களில், உள்ளூராட்சி மன்றங்களும், வேறு குறிப்பிட்ட நிர்வாக அலுவல்களும் தமிழில்நடத்த ஏற்பாடு என்று கூறிவிட்டால், 'சட்டம் பரவாயில்லையே' என்றுதான் சொல்லத் தோன்றும்.

சட்டத்தின் நோக்கம் காலகதியில் தமிழை முற்றாகவே இலங்கையில் ஒழித்துக் கட்டுவது தான் என்பது தெரியவராது. நிபந்தனைகள், கட்டுப்பாடுகள், பிரதமரின் விளக்கம் இவற்றை ஊன்றிக் கவனித்தால்தான், உள்ளே பொதிந்து கிடக்கும் தீய நோக்கம் தெரியும். ' தனிச் சிங்களச் சட்டம் ' கூட இவ்வளவு மோசமில்லை. ஏனெனில், சிங்களம் மட்டுமே அரசாங்க மொழி என்று கூறுவதைத் தவிர அதில் வேறு எதுவுமே கிடையாது. தமிழ்மொழிச் சட்டத்தில் அமைந்த ''தமிழ் ஒழிப்பு''ச் சதித்திட்டம் தனிச் சிங்களச் சட்டத்தில் இல்லை. பொற்காப்பைக் காட்டிச் சேற்றுள் சிக்க வைத்து — ஆளையே ஈற்றில் விழுங்கிவிடும் திட்டம்—தனிச்சிங்களச் சட்டத்தில் இல்லை. தமிழ் மொழிச் சட்டத்தில்தான் நிறைய இருக்கிறது. 'புலி பொற்காப்பு தருகிறதே! நல்லதாயிற்றே' என்று நினைத்தால், ஏமாந்து உயிரைப் பறிகொடுக்க வேண்டியதுதான்.

ஓர் இனத்தையோ, அந்த இனத்தின் மொழி, கலாசாரம் ஆகியவற்றையோ ஒழிக்க முயல்வது ''இன ஒழிப்பு'' என்னும் குற்றமாகும். இது ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் அடிப்படைத் திட்டம் 10-ம், 55-ம், 56-ம் விதிகளுக்கு மாறானது மட்டுமல்ல, 12—1—51 ல் அமுலுக்கு வந்த இன ஒழிப்பு உடன்படிக்கைப்படி, இன ஒழிப்பு நடவடிக்கையில் ஈடுபடுதல் ஓர் பெரும் சர்வதேசக் குற்றம். ஐ. நா. ஸ்தாபனத்தில் அங்கம் பெற்றது இலங்கை. இன ஒழிப்பு பற்றிய உடன்படிக்கையிலும் கையொப்பமிட்டுத் தனது நாட்டில் இன ஒழிப்பு நடவாது பார்த்துக் கொள்ளும் கடமையையும் ஏற்றுள்ளது. இந்த உடன்படிக்கைக்கு மாறாக நடக்கும் நாடுகள் பற்றி இதர நாடுகள் புகார் செய்வதற்கும் உடன்படிக்கையில் விதிகள் இருக்கின்றன. இருந்தும் சிறிதும் வெட்கமின்றி இலங்கை இன ஒழிப்பில் ஈடுபடுகிறது. காலகதியில் இலங்கையில் தமிழையும், தமிழரையும் ஒழித்துக்கட்ட வழி வகை தேடுகிறது. இலங்கையின் இன ஒழிப்பு விஷயம் ஐ. நா. சபையின் முன் வருமா ?

# விசேஷ செய்தி!

Agfa

புகைப்படத் தொழிலின் உலகக் கண்காட்சியாகிய

# போட்டோகினா 1958ல்

**ஆக்பா**

**உலக மக்களின் கவனத்தைக் கவர்ந்து விட்டது**

ஜெர்மனி தேசத்தில் கலோன் நகரில் நடைபெறும் போட்டோ தொழிற் பொருள்களின் மிகப் பெரிய உலகக் கண்காட்சியில், ஆக்பா, கீழ்க்குறிப்பிட்டுள்ள பொருள்களைப் போன்ற சிறந்த பொருள்களைத் தயாரித்துக் காண்பித்தமைக்கு மீண்டும் பெரும் பாராட்டுக்களைப் பெற்று வெற்றி அடைந்தது!

ஒரு தீக்குச்சியின் வெளிச்சத்தில்கூட அசையும் பொருள்களையும் போட்டோ எடுக்கும் புதிய ஆக்பா ஐஸோபான்ரிகார்டு கருப்பு - வெண்மை பிலிம்.

வியூ பைண்டரிலேயே ஆடோமாடிக் எக்ஸ்போஷர் இன்டிகேடர் உள்ள முதல் மினியேச்சர் காமிரா — 'ரைபின் லைட் எக்ஸ்போஷர்' கொண்ட புதிய ஆக்பா ஸில்லெட்டி ஆடோமாடிக்.

செகடிவின் அசல் அளவைக் காட்டும் ரிப்லெக்ஸ் வியூ பைண்டர் உள்ள புதிய ஆக்பா கலர் பிளெக்ஸ் காமிரா — பிரிஸம் பைண்டராலும் மாற்றிக்கொள்ளக் கூடியது, ஆடோமாடிக் டயபாரம் உள்ள லென்ஸ்.

மேற்குறிப்பிட்ட அனைத்திற்கும் மேலாக மாற்றியமைத்துக் கொள்ளக்கூடிய லென்ஸுகள் கொண்ட புதிய ஆக்பா ஆம்பிபிளெக்ஸ்.

புதிய ஆக்பா டயாமேடர் S. 35mm புரொஜெக்டர் பித்தானை அழுத்தியதும் ரிமோட்-கன்ட்ரோலால் தானாகவே ஸ்லைடுகளை மாற்றிக் கொள்ளும். உங்களுடைய டேப் ரிகார்டர் ஆக்பா டயாமேடருடன் சேர்ந்தால் தானாகவே ஸ்லைடுகளை மாற்றிக் கொள்வதுடன் அதற்குத் தகுந்தாற்போல பேசி விமர்சனமும் செய்கிறது.

புதிய ஆக்பா மூவிமாடிக் — முழுவதும் ஆடோமாடிக்கான 8mm காமிரா.

புதிய ஆக்பா மூவெக்டாரும் லோனெக்டாரும் — சுச்சிதப்படுத்தப்பட்ட 8mm புரொஜெக்டர்கள்.




தற்பொழுதுள்ள இறக்குமதிக் கட்டுப்பாட்டினால் இந்தப் புதிய பொருள்கள் இந்தியாவில் கிடைப்பதில்லை. ஆனால் நீங்கள் மேனாடுகளுக்குச் சென்றால் இவை எல்லாவற்றையும் கண்டிப்பாகப் பாருங்கள்.

**ஆக்பா இந்தியா பிரைவேட் லிமிடெட்**

பம்பாய் ● புதுடெல்லி ● கல்கத்தா ● சென்னை




**ப**டுக்கையில் உட்கார்ந்துகொண்டு வெகு மும்முரமாகக் காதல் நவீனமொன்றைப் படிப்பதில் என்னை மறந்திருந்தேன். கதைத் தலைவனும், தலைவியும் தனிமையில் சந்திக்கிறார்கள். ஆசிரியர் மிக அழகாகச் சந்திப்பை விவரிக்கிறார். நீண்ட நாட்களாகவே அவர்கள் பரஸ்பரம் ஒருவரையொருவர் காதலிக்கிறார்கள். தனிமையில் சந்திப்பதற்குத்தான் அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைப்பதில்லை. எண்ணங்களைப் புகையும் கனவுகளாக்கி நிலவொளி பொழியும் மாடியில் அவன் நின்றுகொண்டிருக்கிறான். தென்றல் அவன் காதல் பற்றிய உடலைத் தீய்க்கிறது. விம்மும் அவன் நெஞ்சில் நெடிய பெருமூச்சுகள் சிதறுகின்றன. தனிமை!......

இந்த இன்பமயமான சூழ்நிலையில் அவள் இல்லையே என்ற ஏக்கம் அவனைப் பிழிந்தெடுக்கிறது. குளிர் நிலவைப் பார்க்கிறான். அவனுக்கு அணையிட முடியாத தாபம் பிறக்கிறது. அப்பொழுது மல்லிகைச் சரத்தின் புது மணம் தவழ்ந்தோடும் தென்றலில் கலந்து அவனுக்கு மன மயக்கத்தை ஊட்டுகிறது. மாடிப் படியில் யாரோ நடந்துவரும் காலடியோசை. அதைத் தொடர்ந்து புதுப் புடவை அடிக்கேற்ப மெல்லச் சரசரக்கும் ஒலி. கைவளைகள் கலகலவெனக் குலுங்கின. ஆச்சரியத்தோடு உணர்ச்சிகள் குமிழியிட அவன் திரும்பிப் பார்க்கிறான். அவளேதான்!...அவனுடைய

இரு கைகளும் நீண்டு விரிகின்றன. இரு கைகளிடையே ஓடி வந்து புகுந்த அவள் அவன் நெஞ்சில் முகம் புதைக்கிறாள். ஆசையுடன் பளபளக்கும் அவள் கருங் கூந்தலை நீவிக் கொடுக்கிறான், அவன்.

அதற்கு மேல் எனக்கு நாவல் ஓடவில்லை! மனம் ஒருவித மயக்கத்தில் திளைத்தது. கண்களை மூடினேன். அக் காட்சி என் உள் மனத்தில் நிழலாக விரிந்தது! எத்தகைய இன்பமயமான காட்சி? நான் ஆழ்ந்த பெருமூச்சு விட்டேன்! கண்களைத் திறக்கவே எனக்கு மனமில்லை. இமைகள் விரிந்தால் அக் காட்சி மறைந்தல்லவா போய்விடும்?

"அத்தான்!" யாழின் நாதத்தை யாரோ என் காதில் பிழிந்தார்கள். இமைகளை உயர்த்தி நெற்றியைச் சுருக்கி ஆச்சரியத்தோடு பார்த்தேன். என் எதிரில் நிற்பது...?

"என்ன அத்தான் அப்படிப் பார்க்கிறீர்கள்? நான்தான் உங்கள் சாந்தா!" என்றாள்.

"சாந்தாவா?"......

"ஆமாம்!"

என் இரு கைகள் தாமாகவே நீண்டு விரிந்தன. இரு கைகளிடையே ஓடி வந்து புகுந்த அவள் என் நெஞ்சில் முகம் புதைத்து விம்மினாள். அவள் முகத்தை இரு கைகளாலும் ஏந்தி மீண்டும் அவள் கண்களைப் பார்த்தேன்.

"அத்தான்! என்னை மறந்துவிட மாட்டீர்களே?" எல்லாப் பெண்களுக்கும் தங்கள் காதலர்களிடம் ஏற்படும் இயற்கையான சந்தேகம் அவளுக்கும் ஏற்பட்டது.

"அடி அசடே! என்னை மறந்தால் அல்லவா உன்னை மறப்பதற்கு? உயிரோடு கலந்து விட்ட உணர்வை யாராவது பிரித்து விடுவதற்கு முடியுமா?"

"மாமாவையும், மாமியையும் நினைக்கும் பொழுது......!"

"அவர்களைப் பற்றிக் கவலைப்படாதே. சாந்தா! உன்னை நான் மணப்பதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லையென்றால் என் பிணத்தைத் தான் அவர்கள் பார்ப்பார்கள்."

"அப்படியெல்லாம் பேசாதீர்கள், அத்தான்!" என்று அவள் தன் மலர்க் கரத்தால் என் வாயைப் பொத்தினாள்.

"உன் அன்பான இதயத்தைப் புரிந்து கொள்ளவில்லையே என் தாயும், தந்தையும்! இன்று வந்து நாளை போகும் பணத்தின் முன் பண்பை இழந்து விடுகிறார்களே? நான் படித்ததும், உத்தியோகம் பார்ப்பதும் திருமண மார்க்கெட்டில் பணம் சம்பாதிப்பதற்குத்தான் என்று அவர்கள் நினைப்பது விசித்திரமல்லவா? வாழ்க்கையில் இப்படியொரு இக்கட்டான சூழ்நிலை வருமென்று தெரிந்திருந்தால் படித்திருக்கவே மாட்டேன்."

"நீங்கள் படித்து நல்ல நிலைமையில் வந்திருப்பதைக் காண எனக்கு ஏற்படும் மகிழ்ச்சி அவர்களுடைய மகிழ்ச்சியைவிட அதிகமானதுதான்! இன்றில்லாவிட்டாலும் நாளை உங்களின் மனைவியென்று சொல்லிக் கொள்வதில் எனக்கு எவ்வளவு பெருமையிருக்கிறது? என் நிலைக்கு ஒரு ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை கிடைப்பாரா?" என்று கேட்டாள் சாந்தா பெருமையோடு.

"நீ எதை நினைத்துப் பெருமைபெற நினைக்கிறாயோ, அதை வைத்துத்தான் அவர்கள் அந்தஸ்து பெற நினைக்கிறார்கள். இத்தனை தொல்லைகளும் என் படிப்பால் வந்தவை! நான் வெறும் சீதாராமனாக இருந்திருந்தால் உன்னை மணப்பதற்கு அவர்கள் எந்தத் தடையும் சொல்லப் போவதில்லை......"

"சாந்தா!" என்று கீழேயிருந்து என் அம்மா இரைந்தாள்.

"அத்தான்! மாமி கூப்பிடுகிறார்கள். பிறகு உங்களைச் சந்திக்கிறேன்" என்று என் பதிலுக்குக் கூடக் காத்திராமல் படியில் இறங்கி வேகமாக ஓடினாள்.

"ஏண்டி, உனக்கென்ன மாடியில் வேலை? வயது வந்த பெண் கொஞ்சமாவது அடக்கத்தோடு நடந்து கொள்ள வேண்டாமா?" என்று என் தாயார் சாந்தாவை அதட்டுவது நன்றாகக் கேட்டது.

"இல்லே, மாமி! மாடி அறை பெருக்கிச் சுத்தம் செய்யாமல் இருந்தது. அதனாலே..." என்று குழறினாள் அவள்.

"சரி, போ!"

பாவம்! அவள் நிலையை எண்ணி வருந்தினேன். என் சாந்தா துயரத்தைச் சுமக்கத்தான் பிறந்தவளா? வாழ்க்கையில் அவள் அடைந்த இன்பம்தான் என்ன? பன்னிரண்டு வயதிலே தாயையும், தந்தையையும் பறிகொடுத்து விட்டு இந்த வீட்டுக்கு அடிமைத் தொழில் செய்ய வந்து விட்டாள். தங்கையின் பெண் என்ற பாசம்கூட என் தந்தைக்கு இல்லை. தங்கையிடமிருந்து உதவி கிடைத்த வரையில் அவளை வாய் நிறையக் கொண்டாடியவர் அவள் கண்ணை மூடியவுடன் தம் வாயை 'டப்'பென்று மூடிக் கொண்டார். என் அத்தை மட்டும் இல்லையென்றால் நான் இவ்வளவு தூரம் படித்திருக்கவே முடியாது. தன் கணவன் சம்பாதித்ததில் பாதியை என் படிப்புக்கே செலவிட்டாள். அத்தகைய நல்லவளின் பெண்ணுக்கா இந்தக் கதி?

நான் புரண்டு படுத்தேன். என் தலை பாறையாகக் கனத்தது. இமைகள் மூட மறுத்தன. நினைவு எங்கேயோ சுற்றித் திரிந்தது.

ஒரு வாரம் வெளியூரில் அரசாங்க வேலையாக அலைந்து கொண்டிருந்து விட்டு அன்று தான் வீட்டுக்குத் திரும்பினேன். வீட்டினுள் நுழைந்தவுடனேயே ஓடி வந்து கையிலிருந்த பையை வாங்கிக் கொண்டாள், சாந்தா. வீட்டினுள் கண்களைச் சுழல விட்டேன். அவளைத் தவிர வேறு யாரையும் வீட்டில் காணவில்லை. பையை வாங்கிக் கொண்டு உள்ளே போக முயன்ற அவளைப் பிடித்து நிறுத்தினேன். அவள் கண்கள் ஏனோ சிவந்திருந்தன.

"உடம்புக்கு என்ன, சாந்தா?"

"ஒன்றுமில்லையே!..." அவள் மறைத்ததை அவள் குரலே காட்டிக் கொடுத்து விட்டது. அவள் எதையோ நினைத்து அழுதிருக்கிறாள்.

"அழுதாயா?..."

"இல்லையே!" என்று அவள் என் பிடியிலிருந்து நழுவிச் சமையலறையில் நுழைந்தாள். ஆவி மணக்கும் காப்பியுடன் என் அருகில் அவள் வந்தபொழுது நான் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தேன்.

"அத்தான்!"

நான் எதுவும் பேசாமல் மௌனம் சாதித்தேன்! காப்பி டம்ளரை அமைதியாக என்

விடம் நீட்டினாள். அதையும் நான் வாங்கிக் கொள்ளவில்லை.

"என் மேல் கோபமா, அத்தான்?" என்று என் எதிரில் நின்று முகத்தைக் குனிந்து பார்த்தாள். நான் முகத்தைத் திருப்பிக் கொண்டுவிட்டேன்.

"நான் மறுபடியும் அழுவதில்தான் உங்களுக்கு விருப்பமா, அத்தான்?" என்ற பொழுதே அவள் குரல் கம்மியது. கண்களில் கண்ணீர் தளும்பியது.

"சாந்தா!" என்றேன் ஆத்திரத்துடன்.

"உங்களுக்கு ஏன் அடிக்கடி இப்படிக் கோபம் வருகிறது?"

"எல்லாம் உன்னுடைய முட்டாள்தனமான செய்கையால்தான்!"

"நான் முட்டாளாக இருந்தால் இருந்து விட்டுப் போகிறேன். நீங்கள் முதலில் காப்பியைக் குடியுங்கள்....ஆறிவிடப் போகிறது!"

"நீ முதலில் அழுத காரணத்தைச்சொல்!"

"காப்பியைக் குடியுங்கள்..........பிறகு சொல்லுகிறேன்."

அவள் கையிலிருந்த காப்பியை வாங்கி மெதுவாகக் குடித்தேன். நான் குடிப்பதையே அவள் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"மாப்பிள்ளை பார்க்க மாமாவும், மாமியும் போயிருக்கிறார்கள்."

"என்னது?"

"ஆமாம்!"

அதற்குள் வெளியில் காலடிச் சத்தம் கேட்டது. என் தாயாரும், தந்தையும் உள்ளே நுழைந்தார்கள். சாந்தா உள்ளே ஓடித் தன்னை மறைத்துக் கொண்டாள்.

"எப்போடா வந்தே?" என்று என் தந்தை விசாரித்தார்.

"இப்போத்தான் வந்தேன்!"

"உடம்புக்கு?"

"ஒண்ணுமில்லே! நீங்க எங்கே போய் விட்டு வருகிறீர்கள்?" என்று அடக்க முடியாத எரிச்சலுடன் கேட்டேன்.

"நம்ம சாந்தாவுக்கு மாப்பிள்ளை பார்த்து விட்டு வருகிறோம்!" என்றார் அப்பா.

"சாந்தாவுக்காக நீங்களொன்றும் மாப்பிள்ளை பார்க்க வேண்டாம். அவளுக்கு நானே மாப்பிள்ளை பார்த்து வைத்திருக்கிறேன்" என்று கூறிவிட்டு நான் விடுவிடு வென்று மாடிக்குப் போய் விட்டேன்.

"சாந்தா!" என்று மாடியிலிருந்து கூப்பிட்டேன். அடக்க ஒடுக்கத்துடன் வந்து ஒதுங்கி நின்றாள் அவள். அவள் நின்றதைப் பார்த்தவுடன் எனக்குப் பரிதாபமாகவும் இருந்தது; அதே சமயத்தில் சிரிப்பாகவும் இருந்தது.

"என்ன சாந்தா, அப்படிப் பயந்து ஒதுங்கிப் போய் நிற்கிறாய்?"

"நீங்கள்தான் கோபமாக இருக்கிறீர்கள்!" என்றாள் சிரித்தவண்ணம்.

"இதோ பாரு. இன்னொரு தடவை இந்த மாதிரி காரியங்கள் வீட்டில் நடந்தால் என்னிடம் உடனே சொல்லிவிடணும். எதையாவது மூடி மறைத்தாயோ எனக்குக் கெட்ட கோபம் வரும்."



"இல்லே, அத்தான்!"

இரவு பன்னிரண்டு மணிக்கு மேலிருக்கும். திடீரென்று விழித்துக் கொண்ட எனக்குத் தொண்டை வறண்டது. படுக்கையிலிருந்து எழுந்து விளக்கைப் போட்டேன். தண்ணீர்க் கூஜா காலியாக இருந்தது. அந்த நேரத்தில் சாந்தாவைக் கூப்பிட எனக்கு விருப்பமில்லை. அவள் அயர்ந்து தூங்குகிறாளோ என்னவோ? நானே சமையல் அறையை நோக்கி நடந்தேன். கீழே அப்பாவின் அறையில் பேச்சுக் குரல் கேட்டது. பேச்சில் அடிக்கடி சாந்தாவின் பெயர் அடிபடவே சற்று நின்றேன்.

"இதோ பாருங்க! பேசாமே அந்த இடத்தையே சாந்தாவுக்கு முடிச்சிடுங்கோ. கல்யாணச் செலவுக்காக ஆயிரம் ரூபாய் தரவும் மாப்பிள்ளை சம்மதிக்கிறார்."

"எனக்கென்ன ஆட்சேபனை இருக்கிறது? எல்லாத்துக்கும் அவன் சம்மதிக்கணுமே? அவன் இரண்டாந் தாரம், வயதானவர் என்று சாக்குப்போக்கு சொல்வானே!"

"கல்யாணத்தை அவனுக்குத் தெரியாமல் நடத்திவிட்டால்?"

"என்னடி சொல்றே?"

"அடுத்த தடவை அவன் வெளியூர் 'காம்ப்' போகும் போது கல்யாணத்தைக் காதும் காதும் வைத்தாற் போல் கோவிலில் நடத்திவிடலாம்." சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது.

"என்ன யோசிக்கிறீர்கள்?"

"ஒண்ணுமில்லே! நாளைக்கு அவனுக்குத் தெரிந்தால்?......"

"பிறகு அவனை நான் சமாளித்துக் கொள்கிறேன். சாந்தாவுக்குக் கல்யாணமாகும் வரையில் அவன் வேறு எந்தப் பெண்ணையும் திருமணம் செய்துகொள்ள மாட்டான்! அவளுக்கு ஒரு வழி ஏற்பட்டால்தான் அவனுக்கும் ஒரு வழி ஏற்படும். அவள் அவனை எப்படியோ மயக்கி விட்டிருக்கிறாள்."

"உண்மையாகவா?"

"நானென்ன பொய்யா சொல்கிறேன்?"

"அப்படியானால் அந்த வரனையே அவளுக்கு முடித்து விடுகிறேன்."

"அதுதான், சரி!"

சிறிது நேரம் கழிந்தது. மெதுவாக மாடியை நோக்கிப் புறப்பட்டேன்.

"அத்தான்!" என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். சாந்தா பின்புறம் நின்று கொண்டிருந்தாள்.

"இந்நேரத்தில் இங்கே என்ன செய்து கொண் டிருக்கிறீர்கள்?" என்று மெதுவாகக் கேட்டாள் அவள்.

"இன்னும் நீ தூங்கவில்லையா?"

"ஊஹூம்!"

"ஏன்?"

"தூக்கம் வரலே!..."

"பைத்தியம்! போய்த் தூங்கு!" என்று அவள் கன்னத்தில் செல்லமாகத் தட்டினேன்.

"முதலில் நீங்கள் போய்த் தூங்குங்கள்! இப்படித்தான் வேளை, நேரம் இல்லாமல் என்னைத் தேடிக் கொண்டு வருவதா? மாமி பார்த்தால் என்ன நினைப்பார்கள்?"

என்னையும் அறியாமல் என் இதயத்திலிருந்து பெருமூச்சு வெடித்துச் சிதறியது: நான் சொல்லியதைப் போல் அவள் உண்மையிலேயே பைத்தியம்தான்! அவள் வாழ்வைக் குலைக்க நடக்கும் சதியைப் பற்றி ஏதும் எண்ணாமல் எதையோ பேசுகிறாள். மெதுவாக நான் அங்கிருந்து மாடிப்படியேறினேன். மனம் பலவற்றை எண்ணிக் குழம்பியது. பெற்றோர்களின் துரோகச் சிந்தனை என்னைப் பெரிதும் வாட்டியது.

'முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும்: அவர்களுடைய சதியை எப்படியும் உடைத்தெறிந்துவிட்டுச் சாந்தாவை மணந்து அவர்களுடைய துராசைக்கு முடிவு கட்ட வேண்டும்' என்று தீர்மானித்தேன்.

சாந்தாவுக்குத் திருமண ஏற்பாடுகளெல்லாம் இரகசியமாக நடந்து கொண்டிருந்தன. நான் எதுவும் தெரியாதவன் போல் நடமாடிக் கொண்டிருந்தேன். சாந்தாவுக்கும் அந்த விஷயம் தெரியாது! நான் என் திட்டத்தை அவளுக்குச் சொல்லவுமில்லை. அதனால் பிரதிகூலமும் ஏற்படலாம். மேலும் அவளைத் திடீரென்று மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்த வேண்டுமென்றும் நினைத்தேன். வெகு இரகசியமாக என் பெற்றோர்கள் திருமண விஷயத்தில் முனைந்திருந்தார்கள். திருச்செந்தூர் முருகன் சன்னதியில் திருமணத்தை வைத்துக் கொள்வதென்று முடிவாகியிருந்தது. பின்னைக்கு யாரும் நெருங்கிய சொந்தம் கிடையாது. இளம் வயதிலேயே உத்தியோகம் பார்க்க அவர் பம்பாய்க்குப் போய் விட்டவர். திருமணத்தை முன்னிட்டே இங்கு வந்திருந்தார். தெரிந்த ஓரிரு சொந்தக்காரர்களையும் திருமணத்துக்கு அழைத்து வர அவருக்கு விருப்பமில்லை யென்று தெரிந்தது. அதுவும் நல்லதென்றே எனக்குத் தோன்றியது. வழக்கம் போல் வெளியூர் போவதாகவும், வரப் பத்து நாட்களாகுமென்றும் கூறிவிட்டு நான் வீட்டை விட்டுக் கிளம்பிப் போய் விட்டேன்.

திருமணத்துக்கு முன் தினம்—

நான் இரண்டு தந்திகள் கொடுத்தேன்! ஒன்றை மாப்பிள்ளைக்கும், மற்றொன்றை என் தந்தைக்கும் கொடுத்தேன். திடீரென்று

சாந்தாவுக்கு அசௌக்கியம் ஏற்பட்டதால் திருமணத்தைத் தள்ளி வைத்துக் கொள்வதாக என் தந்தை கொடுத்ததைப் போன்று மாப்பிள்ளைக்கும், எதிர்பாராத காரணத்தால் திருமணத்துக்கு முன் தினம் வரமுடியாமல் இருப்பதாகவும் காலையில் வந்துவிடுவதாகவும் மாப்பிள்ளை கொடுத்ததைப் போன்று என் தந்தைக்கும் தந்தி கொடுத்தேன்.

தந்தியைக் கண்டதால் என் தந்தை திருமண ஏற்பாட்டை நிறுத்தவில்லை. காலையில் எல்லா ஏற்பாடுகளும் தயாராகச் செய்யப்பட்டிருந்தன. ஒவ்வொரு நிமிடமும் மாப்பிள்ளையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று மாப்பிள்ளை வந்துவிட்டாரென்ற சலசலப்பு கூட்டத்தில் தோன்றியது. மாப்பிள்ளைக் கோலத்தில் நான் மணவறைக்கு வந்தேன். என்னைக் கண்டவுடன் எல்லோரும் திடுக்கிட்டார்கள். என் தந்தை கற்சிலையாக நின்றுவிட்டார். சாந்தா மணவறையில் குனிந்த தலை நிமிராமல் விம்மிக் கொண்டிருந்தாள்.

"சாந்தா!" என்று கூப்பிட்டேன். என் குரலைக் கேட்டவுடன் அவள் முகம் நிமிர்ந்தாள். அவள் கண்களில்தான் எத்தனை ஆச்சரியம்?

"இனி நம்மை யாராலும் பிரிக்க முடியாது, சாந்தா!" என்று தாலிக் கயிற்றை எடுத்து அவள் கழுத்தில் கட்டினேன். மங்கல வாத்தியம் முழங்கியது. பெரியவர்கள் எங்களை வாழ்த்தினார்கள். சாந்தா என் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினாள்.

"சாந்தா! இதென்ன அசட்டுத்தனம்?" என்று நான் செல்லமாகக் கோபித்துக் கொண்டேன்.

"நான் உங்களை மோசம் செய்துவிட்டேன், அத்தான்!" என்று அலறினாள் அவள்.

"என்னது?" நான் திகிலுடன் கேட்டேன்.

"ஆமாம்! நீங்கள் இல்லாத வாழ்வு எனக்கெதற்கென்று நினைத்தேன். அதனால்..."

"அதனால்?..." என்னுடைய கேள்வியில் உயிரேயில்லை.

"ஏற்கனவே தயாராக வாங்கி வைத்திருந்த நஞ்சைச் சற்றுமுன் குடித்துவிட்டேன்" என்று விம்மினாள், அவள்.

"உண்மையாகவா, சாந்தா?"

"ஆமாம், அத்தான்! உங்களுக்காகவே உயிர் வாழ்ந்த நான் வேறு ஒருவரை மணக்கச் சம்மதிப்பேனா?" அவள் குரல் விக்கியது. நஞ்சின் கருமை உடலின் பொன்னிறத்தை விழுங்கிக் கொண்டிருந்தது. சொருகும் இமைகளைப் பிரயாசையுடன் விலக்கி என்னைப் பார்த்தாள். அவள் உதடுகள் சோகத்தால் துடி துடித்தன.

"உன்னைத் திடுக்கிட வைக்க வேண்டும் என்று நினைத்த என்னைத் திடுக்கிட வைத்துவிட்டாயே, சாந்தா!" என்று அவள் முகத்தோடு முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினேன். அவள் என் கன்னத்தை மெதுவாகத் தடவிக் கொடுத்தாள். அடுத்த நிமிடம் ஒடிந்த கிளையாக அவள் கை கீழே விழுந்தது. அவள் தலை துவண்டு என் மார்பில் புரண்டது.



ஊன்றிய
நம்பிக்கையோடு
நீங்கள் லோமா
உபயோகிக்க எவ்வயதும்
ஏற்ற வயதே





லோமா உபயோகிப்பதற்கு வயதுகாரணமான வரம்பே கிடையாது. விரும்பிய பயனை எய்திடுவோம் என்ற முழு நம்பிக்கையுடன் எல்லா வயதினரும் அதனை உபயோகிக்கலாம். ஏனெனில், கேசத்திற்குக் கருமையூட்டுவதில் தன்னிகரற்ற தைலம் என்பதோடு, தரத்திலுயர்ந்த கேச எண்ணெய்களில் பொதுவாக இடம் பெறும் பொருள்கள் அனைத்தும் லோமாவில் அடங்கியுள்ளன.




அகில உலகும் வியந்து போற்றிட
கேசத்திற்கு இயற்கைக் கருமை
யூட்டும் தைலம்

ஏகபோக ஏஜெண்டுகள்: எம். எம். கம்பாட்வாலா, அஹமதாபாத்-1.
ஏஜெண்டுகள்; வி. நரோத்தம் அண்ட் கோ., பம்பாய்-2

MPS-TAM

சென்னை; ஏஜண்டுகள்: ஜே பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ் - 1
இலங்கை ஏஜண்டுகள்: சிருல்கதீர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

பாகவதமாகிய

# பக்தி வயல்

## 11. பிருதுவின் வரலாறு

துருவனுடைய வரலாற்றை மைத்திரேயர் விதுரருக்கு எடுத்துரைத்தார் என்று முன் சொன்னோம். "பிரசேதருடைய யாகத்தில் நாரதர் துருவனைப் புகழ்ந்தார்" என்று துருவ சரித்திரத்தை மைத்ரேயர் முடிக்கலை, விதுரர், "பிரசேதர்கள் யார்? எந்தக் குலத்தில் பிறந்தவர்? எவ்விடத்தில் யாகம் செய்தார்கள்?" என்று மிகுந்த பணிவுடன் வினவினார்.

மைத்ரேயர் மீண்டும் துருவனுடைய பரம்பரையை எடுத்துரைக்கலானார். துருவனுடைய மைந்தன் உத்கலனுக்கு உலகத்தில் பற்றே இல்லை. பித்தனைப் போல் வெளிவேஷம் பூண்டு ஆங்காங்கு திரிந்து வந்தான். உள்ளுமையில் அவனுடைய மனம் கடரின்றிக் கனிந்திருக்கும் நெருப்பைப் போல் தெளிவும் அமைதியும் நிறைந்து நின்றது. மூத்த மகன் யோகியாகி விட்டதனால் துருவனுடைய இளைய மகன் வத்ஸரன் நாளடைவில் அரசனானான். பின்னர் ஒருவர் பின் ஒருவராக புஷ்பார்ணன், வியுஷ்டன், ஸர்வதேஜன், சக்ஷு, உல்முகன், அங்கன் என்று துருவன் குலத்தில் பிறந்த ஸந்ததிகள் பூமியை ஆண்டனர்.

ஒரு சமயம் அங்கன் அச்வமேத யாகத்தை நடத்தினான் அப்பொழுது தேவர்கள் வேள்வியில் தங்களுக்கு உரிய பங்கை வாங்கிப் போக மறுத்து விட்டனர். நன்னெறி வழுவாமல் ஆண்டு வந்து, தவறின்றிச் செய்த யாகத்தில் தேவர்களுக்கு என்ன குறை தோன்றியது என்று யாகத்தை நடத்திய அந்தணருக்குத் தெரியவில்லை. அங்கன் மனம் வருந்தினான். பெரியோரை மீண்டும் காரணம் வினவினான். "முன் பிறவியில் செய்த கொடுமையினால் மக்கட் பேறில்லாமல் இருக்கிறாய். ஒரு மகனைப் பெற்றால் தேவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள்" என்று அங்கனிடம் வேள்வித் தலைவர்கள் சொன்னார்கள். யாகத்தில் விஷ்ணுவைத் துதித்தான். தங்கப் பாத்திரத்தில் ஏந்திய பால் பாயசத்துடன் ஒரு தேவ புருஷன் நெருப்பினின்று வெளி வந்து, பாயசத்தை மன்னனிடம் கொடுக்க, மன்னனும் அதைத் தன் மனைவிக்கு அளித்தான். அதை உட்கொண்ட அரசி, நாளடைவில் கருத்தரித்து ஒரு மகனைப் பெற்றாள்.

அந்த ராஜகுமாரனுக்கு வேனன் என்று பெயர் வைத்தார்கள். அறிவு தெரிந்த நாள் முதல் அவன் அதர்மத்தையே கடைப் பிடித்தான். தன்வயதுள்ள பாலகரின் கழுத்தைத் திருகியும் ஓடித் திரியும் மான்களைக் கொன்றும் அதிவிரைவில் "கொடியவன் வந்து விட்டானே" என்று அனைவரும் நடுங்கும்படி ஒரு தீய வாழ்வில் உழன்றான். வேனனை ஒருவராலும் அடக்க முடியவில்லை. இதைக் கண்டு பொறுக்காத அங்கன் நள்ளிரவில் ஒருவரிடமும் சொல்லாமல், நாட்டை உதறி விட்டுக் காட்டுக்குச் சென்று விட்டான்.

மன்னனைக் காணாத குடிகள் மிகவும் வருந்தி, தெரிந்த இடமெல்லாம் தேடினார்கள். ஆனால் மறைந்த மன்னன் மறுபடியும் திரும்பவே இல்லை. நாட்டின் நன்மையைக் கருதின பிருகு முதலிய முனிவர்கள், அரசனற்ற நாடு பாழாகி விடும் என்று பயந்து, வேனனுக்கு முடி சூட்டினார்கள். வேந்தன் என்ற செருக்கு வேனனுக்குத் தலைக்கேறியது. அங்குசத்தால் அடக்கப்படாத யானையைப்போல் ஆனான். நாடெங்கும் ஒருவரும் வேள்விகளை நடத்தக் கூடாதென்று பறை சாற்றினான். இருதலைக் கொள்ளியில் அகப்பட்ட எறும்பைப் போல் அனைவரும் வழியின்றி வருந்தினார்கள். முனி



பௌராணிகர்

வருள் தலைவர்கள் வேனனை அணுகி நல் வார்த்தையும் கூறினார்கள். "அரசே! குடிகளைக் காக்கும் கடமையை விட்டு நீ அகலுவது அடுக்காது. தன் தர்மத்தை விட்டு நழுவிய அரசன் ஐச்வரியத்தி லிருந்து இறங்கி விடுகிறான். மன்ன னுடைய நன்மைக் கென்று குடிகள் இறைவனுக்கு யாகம் செய்கின்றனர். யாகத்தினால் களிப்புற்ற விண்ணவரும் உனக்கு மேன்மையை அளிப்பார்கள். ஆகையால் வேள்விகளைத் தடை செய் யாதே" என்றார்கள்.

வேனன் அதற்கு மாறாகப் பதில் உரைத்தான். "நேரில் இருக்கும் எனக் குச் செய்யாத பூசை மறைந்திருக்கும் மகாவிஷ்ணுவுக்குச் செய்வது என்ன பேதைமை? அரசனே ஆண்டவன். மாலையிட்ட மணாளனை மறந்து விட்டுக் காத்திருக்கும் காளையரைக் காமுறுவது தான் அறமோ? எல்லாத் தேவதைகளும் அரசனிடம் குடி கொண்டிருக்கின்றன.



எனக்குச் செய்யுங்கள், வேள்வியும் வழி பாடும்" என்றான்.

இவ்வாறு மதமேறிய மன்னனால் அவ மானம் செய்யப்பட்ட முனிவர்கள், சினம் மிகுந்தவராய், தங்களுடைய "ஹூம்" என்ற பெருமூச்சினாலேயே வேனனைக் கொன்று விட்டனர்.

ஆனால் நாட்டில் இருடரும் கொள் ளைக்காரர்களும் மிகுந்து எங்கும் பயம் அதிகரித்து விட்டது. அரசாங்கம் குன்றி அதிகாரமற்று இருந்தது. அப் பொழுது சரஸ்வதி நதிக்கரையில் வீற்றிருந்த முனிவர்கள் மறுபடியும் ஆழ்ந்த யோசனை செய்யலானார்கள். வேன னுடைய வம்சம் அழியலாகாது என்று தீர்மானித்து, அவனுடைய [illegible] யை வேகமாகக் கடைந்தார்கள். அதி லிருந்து சாக்கை போல் கறுத்த நிறமும், குறுகிய கையும் காலும், அகன்ற கடை வாயும், சப்பை மூக்கும், செம்பட்டை

மயிரும் வாய்ந்த ஒரு குள்ளன் தோன்றி னான். அந்தவரை வணங்கித் தான் என்ன செய்ய வேண்டும் என்று வின வினான். "வீற்றிரு" என்றார்கள் முனிவர் கள் அவனை. ஆகவே அவனுக்கு "நிஷா தன் (அதாவது வீற்றிருந்தவன்)" என்ற பெயர் வந்தது. வேனனுடைய பாபங் களை திரண்டு வந்தவனாதலால் அவ னுடைய பின்னோர்கள் கொடுந்தொழில் களைக் கைப்பற்றி மலையிலும் காட்டிலும் வசித்து வந்தனர்.

பிறகு வேனனுடைய கையை முனி வர்கள் கடைந்தனர். அந்த வேகத்தி லின்று ஒரு ஆணும் ஒரு பெண்ணும் வெளி வந்தார்கள். சூக்ஷ்ம திருஷ்டி வாய்ந்த முனிவர்கள் இவ்விருவரும் கட வுளின் அம்சம் என்று அறிந்தனர். விஷ்ணுவின் அம்சமாக அவதரித்து, "பிருது" என்று பெயர் பூண்டு அர சாளப் போகும் அவ்வாண் மகனையும், அழகின் அடைக்கலமும், செல்வத்துக் குச் செல்வியுமான லக்ஷ்மியின் கிரண மாக அவதரித்து 'அர்ச்சி' என்று பெயர் வாய்ந்த அப் பெண் மகளையும் முனிவர் தோத்திரம் செய்தனர்.

பிருதுவின் பட்டாபிஷேகம் சொல்ல வொண்ணாச் சிறப்புடன் நடந்தேறியது. அச்சமயம் தேவர்கள் பல பரிசுகளை வழங்கினார்கள். குபேரன் தங்க சிம்மா சனமும், வருணன் மதியின் ஒளி வீசும் வெண்குடையும், வாயு வெண்சாமரமும், இந்திரன் கிரீடமும், யமன் செங்கோ லும், பிரமன் மறை ரூபமான கவசமும், சரஸ்வதி முத்து மாலையும், ஹரியான வர் தம் சுதர்சனமும், லக்ஷ்மி அழியாத சீரும், சிவன் வாளும், துர்க்கை கேடய மும், சந்திரன் பரியும், சூரியன் தேரும், அக்னி வில்லும், பூமாதேவி நினைத்த இடத்துக்குக் கொண்டுவிடும் பாதரக்ஷை யும், காயத்தில் உலாவும் தேவதைகள் கலைகளும், சமுத்திரராஜன் சங்கும், பிருதுவுக்குப் பரிசாக அளித்தார்கள்.

கட்டியம் கூறுவோரும் பாடகரும் பிருதுவைப் பலவாறு புகழ முன்வந் தார்கள். அதைக் கண்ட பிருது, புன் னகையுடன், "குணம் படைத்தவன் துதியை விரும்ப மாட்டான். நானோ, இன்னும் ஒன்றும் செய்து விடவில்லை. ஆகவே என்னைத் தோத்திரம் செய்யா தீர்கள்" என்று தடுத்தார். ஆனால், முனிவர்களால் ஏவப்பட்ட பாடகர்கள் பிருதுவை மேலாகப் புகழ்ந்து பாடித் தான் போனார்கள்.

பூமண்டலத்துக்கு நாயகனாய்ப் பிருது மன்னன் முடி [illegible] செலுத்தும் பொழுது, பூமியானது பயிர் விளைவின்றி வறண்டு போய், பஞ்சமும் பசியும் குடி

களுக்கு மேலிட்டன. "பொந்தில் நின்றெழும்பும் தீயினால் மரங்கள் அழிவது போல் பொறுக்க முடியாத பசியினால் நாங்கள் மடிந்து வருகிறோம்" என்று அனைவரும் அரசரிடம் சென்று முறையிட்டார்கள். பிருது ஆழ்ந்த யோசனை செய்தார். பூமாதேவியானவள் தன்னுள்ளே தானியங்களை அடக்கிக் கொண்டது தான் பஞ்சத்துக்குக் காரணம் என்று தெரிந்து கொண்டார். உடனே கோபம் மேலிட்டு, பூமியின் மீது விடுவதற்கு வில்லை நாணேற்றினார். இதைக் கண்ட பூமி பயந்து, பசு வேஷம் பூண்டு, வேடனுக்கு அஞ்சி ஓடும் மானைப் போல் ஓட ஆரம்பித்தாள். மன்னரும் பின் தொடர்ந்தார். புகலிடமின்றித் தவித்தாள் பூமி. முடிவில் பிருதுவையே சரண் புகுந்து, "நிரபராதியான என்னை ஏன் கொல்ல வருகிறீர்? தர்மம் தவறாத அரசன் பெண் உயிரை வாங்கலாமா? கப்பலைப் போல் மாந்தரைக் காத்து வரும் என்னைக் கொன்று விட்டால், உயிர்கள் எல்லாம் நீரில் அல்லவோ தத்தளிப்பர்!" என்று மன்றாடினாள்.

ஆனால் பிருது சிறிதும் இரங்கவில்லை. தம் குடிகளைப் பசியினால் வருத்தும் பூமியைப் பிளந்தே தீருவதாய்த் தம் துணிச்சலைத் தெரிவித்தார். உலகம் யாவையும் ஆக்கவும், நிலைநிறுத்தவும், நீக்கலும் தன் விளையாட்டாகவுடைய பரம புருஷனே பிருதுவாக அவதாரம் செய்துள்ளார் என்று அறிந்த பூமி, அப்பொழுது அவரைப் பலவாறு தோத்திரம் செய்தாள். தீமையே தொழிலாகக் கொண்டு திரிந்தவருக்கு உதவாமல் தான் பயிரையும் பச்சிலையையும் தன்னுள்ளே பாதுகாத்து வைத்ததாகவும் தெரிவித்தாள் "ஆகையால் தோள் வலிவு வாய்ந்த வீரனே! ஒரு கன்றையும் பால் பாத்திரத்தையும் கொண்டு வந்து என் பாலைக் கறந்து அனைவருக்கும் திறமளிக்கும் ஆகாரத்தைப் பெருக்குவாய்" என்று உரைத்தாள்.

ஸ்வாயம்புவ மனுவைக் கன்றாகக் கொண்டு, பூமியாகிற பசுவினிடமிருந்து பிருது தானாகவே எல்லாப் பயிர்களையும் மூலிகைகளையும் கறந்தார். மற்றப் பெரியார்களும் அவ்வாறே பூமியிலிருந்து வேண்டியதை வாங்கிக் கொண்டார்கள். முனிவர்கள் மறையையும், தேவர்கள் ஸோமரஸத்தையும், அசுரர்கள் மதுவையும், கந்தர்வர் இன்னிசையையும், அப்ஸரர்கள் அழகையும், பித்ருக்கள் தங்களுடைய உணவாகிய "கவ்யம்" என்ற பண்டத்தையும், சித்தர்கள் சித்திகளையும், வித்யாதரர் ஆகாயத்தில் போகும்



திறமையையும், பிசாசங்கள் ரத்தத்தையும், பாம்புகள் விஷத்தையும், பசுக்கள் புல்லையும், விலங்குகள் ஊனையும், பறவைகள் புழுவையும், மரங்கள் தங்கள் தாவரப் பாலையும், மலைகள் உலோகங்களையும் பூமியிலிருந்து அடைந்தார்கள்.

மகிழ்ச்சி அடைந்த மன்னர் பூமியைத் தம் மகளாகவே ஏற்றுக் கொண்டார். மலைச் சிகரங்களைத் தகர்த்துப் பூமியைச் சமதளமாக்கிக் கிராமங்களையும் நகரங்களையும் ஆங்காங்கு நிர்மாணம் செய்தார். இதன் காரணமாகத்தான் இப் பூமிக்குப் "ப்ருத்வீ" (பிருதுவின் மகள்) என்று பெயர் பொருந்தியது.

பிறகு பிருது நூறு அச்வமேத யாகங்கள் செய்வதற்கு வேண்டிய முயற்சியில் ஈடுபட்டார். இதைக் கண்ட இந்திரன், தன் பெருமை குன்றிவிடுமோ என்று அச்சம் கொண்டான். ஏனென்றால் அந்தப் பெரும் வேள்விக்கு ஹரியே நேரில் வந்தார். அவருடன் சிவனும் பிரமனும் வந்தனர். பசு என்ற முறையில் பூமியும் பாலையும் நெய்யையும் அள்ளி அளித்தாள். நூறுவது யாகம் நடக்கும்பொழுது, இந்திரன், தான் மறைந்திருந்து கொண்டு யாகக் குதிரையைத் திருடிச் சென்றான். ஆனால் இதை அத்ரி முனிவர் பார்த்து விட்டார். பிருதுவின் மகனைக் கூப்பிட்டு, இந்திரனிடமிருந்து குதிரையை மீட்டு வரும்படி ஏவினார். இந்திரன் துறவி வேடம் பூண்டு ஆகாயத்தில் விரைந்து கொண்டிருந்தான். முனி என்று மதித்துப் பிருது மகன் இந்திரனைக் கொல்லவில்லை. "முனி அல்ல, மாறு வேடம் பூண்ட இந்திரன்" என்று திரும்பவும் அத்ரி எச்சரிக்கவே, பிருது மகன் சினம் கொண்டு, ராவணன் மீது பாயும் ஜடாயுவென, இந்திரனைத் துரத்தினான். இனிமேல் வழி இல்லை என்று இந்திரனும் குதிரையைக் கொடுத்து விட்டுத் தன் ரூபத்துடன் விண்ணுலகம் சென்றான். ஆனால் இந்திரனுடைய மனத்தில் பொறாமை குறையவில்லை. மறுமுறையும் குதிரையைத் திருடினான். இச்சமயம் கையில் கபாலமும் கழியும் ஏந்திக் துறவி போல் மாறுவேடம் பூண்டான். இந்த மோசடியையும் அத்ரி கவனித்து, அரசன் மகனுக்கு எச்சரிக்கை செய்தார். தன்மீது குறி வைத்த பாணத்தைக் கண்ணுற்ற இந்திரன் திரும்பவும் மறைந்து ஓடினான். பிருது இந்திரனைத் தாமே கொன்று விடுவதாக நிச்சயம் செய்தார். யாகத்தில் பலியாகப் போகும் இந்திரனைப் பிரமன். வேள்வி செய்யும் முனிவரிடமும், மன்னரிடமும் மன்றாடிக் காப்பாற்றினார்.

நூறு அச்வமேதயாகம் செய்தவருக்கு இந்திர பதவி கிடைக்கும் என்பது நம்முடைய நம்பிக்கை. ஆகவே, தொண்ணூற்றி ஒன்பது யாகங்கள் முடிந்ததும், பிரமன் வேண்டுகோளுக்கு இணங்கிப் பிருது அச்வமேதயாகத்தை நிறுத்திக் கொண்டார் என்பது பாகவத வரலாறு.

பிருது செய்த அச்வமேதத்துக்கு ஹரியே நேரில் வந்து பிருதுவுக்குத் தரிசனம் அளித்தார். மன்னிக்கப்பட்ட இந்திரனும்கூட இருந்தான். "என்ன வரம் வேண்டும்?" என்று ஹரியானவர் பிருதுவை வினவினார். அதற்கு அரசர், "வரம் அளிக்கவல்ல தேவருக்கும் தேவனை உம்மிடம், நரகத்தில் இருப்பவரும் பெறக்கூடிய இன்பங்களை வேண்டும் என்று எவன்தான் கேட்பான்? ஆனால் எனக்கு மோட்சமும் வேண்டாம். பக்தருடைய மனத்தில் நின்று வெளிவரும் உம்முடைய பெருமைகளைக் கேட்டுக் கேட்டு இன்புறுவதற்குப் பதினாயிரம் காதுகளைக் கொடுத்தருள்வீர்" என்றுகேட்டார். அச்சுதனும் அரசருக்கு அனுக்கிரகம் செய்துவிட்டுச் சென்றான்.

# நீடித்து நிலைத்திருப்பவை

ஒரிஸ்ஸாவில் கொனரக் கடற்கரையில் பிரசித்தமான
சூரிய ஆலயம் இருக்கிறது. நம் பழம் இந்தியச் சிற்பிகளின்
திறம் மிக்க கைகளிலிருந்து வெளிப்பட்ட அந்தக் கற்கோயில்
இன்றும் நிலைத்து நின்று பண்டைக்கால இந்திய சம்பிரதாயத்தின்
இணையற்ற ஜீவகலையை ஒளி விட்டுப் பிரகாசிக்கச் செய்கிறது
அந்த ஈடு இணையற்ற பரம்பரைத் திறமையை இன்றும்
நிலைநிறுத்த, நுணுக்கமான இயந்திர சூக்ஷுமத்தோடு ஹிந்த்
சைக்கிள் தயாரிக்கப்படுகிறது. ஏற்கெனவே
இம்மாதிரி பத்து லட்சம் சைக்கிள்கள் தயாரித்து
புகழுடைந்திருக்கிறது இக் கம்பெனி




**ADMIRAL**




ஹிந்த் சைக்கிள்ஸ் லிமிடெட், 250, வொர்லி, பம்பாய் 18

# பூர்வகதை

அலை அலையாகப் பொங்கும் எல்லையற்ற காலக் கடலின் பெரும் பரப்பில் பன்னூறு ஆண்டுகளுக்கு முன் தென்பாண்டி நாட்டுக் கன்னியாகுமரிக் கடற்கரையில் ஒரு அழகிய மாலை நேரம். பராந்தக பாண்டியன் அமரபதவி அடைந்து விட்டதனால் அவனுடைய நாட்டைக் கவலைகளும், பகைகளும் சூழ்ந்திருந்தன. குமாரபாண்டியன் இராசசிம்மன் எங்கோ கடல் கடந்த தீவுகளுக்கு ஓடிவிட்டதாகப் பேசிக் கொண்டார்கள். கோப்பெருந் தேவியாகிய வானவன்மாதேவியார் கணவனை இழந்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளவில்லை.

மனக் குழப்பங்களை மறப்பதற்காக அன்று மாலை குமரித் தெய்வத்தை வணங்கப் புறப்பட்டாள் மகாராணி. தளபதி வல்லாளதேவனும், அதங்கோட்டாசிரியரும், பவழக்கனிவாயரும் மகாராணியை எதிர்பார்த்துக் கன்னியாகுமரியில் காத்திருந்தனர். மகாராணியும் மற்றவர்களும் கடலின் இருபுறத்துக் காட்சிகளையும் இரசித்து விட்டுக் கோவிலுக்குள் செல்லும்போது தளபதி மட்டும் கடற்கரையிலேயே தங்கிவிட்டான். கடலோரத்துப் பாறைகளின் இடையே சந்தேகத்துக்குரிய மனித உருவங்கள் அவன் பார்வையில் பட்டன. அவன் அங்கே சென்றான்.

மகாராணி கோவிலுக்குள் சென்றபொழுது தளபதியின் தங்கை பகவதியும், அதங்கோட்டாசிரியர் மகள் விலாசினியும் உடன் வந்து சேர்ந்து கொண்டார்கள். அவர்கள் மூவரும் கோவிலில் திருச்சுற்றினுள் செல்லும்போதே பலகணி வழியே பாய்ந்து வந்த வேல் ஒன்று மகாராணியின் மேல் பாய இருந்தது. மகாராணியைப் பின்னால் இழுத்துத் தள்ளி வேல் பாயாமல் காப்பாற்றினாள் பகவதி.

அதே சமயத்தில் கடற்கரைப் பாறையில் இரு முரடர்களோடு போரிட்டுக் கொண்டிருந்த தளபதி ஒருவனை அடித்துத் தள்ளிவிட்டு மற்றொருவனையும் அவன் கையிலிருந்த இரகசியத் திருமுகத்தையும் கைப்பற்றிக் கொண்டு கோவிலுக்குள் வந்தான். திருமுகத்தை அவன் மகாராணியிடம் கொடுத்தும் விரக்தியால் அவள் அதைப் படிக்க மறுத்து அவனிடமே திருப்பியளித்து விட்டாள். இடையாற்றுமங்கலம் நம்பி தலைமையில் தென்பாண்டி நாட்டுப் பேரவையைக் கூட்டித் தன் குமாரன் இராசசிம்மனைத் தேடி வருமாறு கூறினாள்.

அவள் கட்டளைப்படி மற்ற கூற்றத் தலைவர்களையும் அழைத்து வர ஏற்பாடு செய்துவிட்டு இடையாற்றுமங்கலம் புறப்பட்டான் தளபதி. இடையாற்று மங்கலம் தீவுக்கு இப்பால் பறளியாற்றங்கரையை அடைந்த தளபதி அங்கே புறப்படத் தயாராயிருந்த தோணியில் நம்பியையும், அவர் புதல்வி குழல்மொழியையும், ஒரு இளந்துறவியையும் கண்டு திகைத்தான். நம்பி சிரித்துக் கொண்டே தளபதியை வரவேற்றுத் தோணியில் ஏற்றிக் கொண்டு தம் மாளிகைக்குச் சென்றார். இங்கு இவ்வாறிருக்க, கன்னியாகுமரியில் வேல் வீச்சுக்குத் தப்பி அரண்மனை திரும்பியிருந்த மகாராணி மன நிம்மதிக்காக நிலா முற்றத்தில் விலாசினியின் நாட்டியத்தையும், பகவதியின் பாடலையும் அனுபவித்தாள். அப்போது நிலாமுற்றத்துக்கு அருகிலிருந்த மகிழ மரக் கிளை முறிந்து யாரோ குதித்து ஓடும் ஓசை கேட்கவே, மறுபடியும் அவள் மனம் குழம்பியது.

பறளியாற்றில் மகாமண்டலேசுவரரோடு தோணியில் சந்தித்த இளந் துறவியைப் பற்றித் தளபதி பலவாறு சந்தேகப்பட்டான். நம்பியின் புதல்வி துறவியோடு நெருங்கிப் பழகுவதையும் அவன் கண்டான். நம்பியோடு அவருடைய அந்தரங்க அறையில் பேசிக் கொண்டிருக்கும்போது கன்னியாகுமரியில் கைப்பற்றிய இரகசியத் திருமுகம் பற்றி அவரிடம் கூறாமல் மறைக்க முயன்றான் தளபதி. அவரோ அதை அவனிடமே வலுவில் கேட்டு வாங்கி அவனை வியப்பில் ஆழ்த்தினார்.

மகாராணி குமரித் துறைக்கு வந்திருந்த அதே நாள் மாலை நம்பியும், அவருடைய புதல்வியும், அந்தரங்க ஒற்றன் நாராயணன் சேந்தனும் விழிஞம் துறைமுகத்துக்கு வந்து யாரையோ கப்பலில் எதிர்பார்த்திருந்தனர். நம்பி, மகாராணியோடு உடனிருந்து கவனிக்குமாறு சேந்தனைக் கன்னியாகுமரிக்கு அனுப்பினார். கன்னியாகுமரி செல்லும் வழியில் ஒரு புன்னைமரத் தோட்டத்தில் சேந்தன் சந்தேகமுறத் தக்க சில புது மனிதர்களைக் கண்டான். அவர்கள் நீராடிக் கொண்டிருந்தபோது உடைகளுக்கு நடுவிலிருந்த ஒரு ஓலையையும் மேற்போக்காகப் படித்துப் பார்த்து விட்டுத் திரும்பினான்.

அதன்பின் கன்னியாகுமரியில் நடந்ததை முற்றும் கவனித்துக் கொண்டு மகாராணியைப் பின்பற்றி அரண்மனை திரும்பும்போது இடையில் சுசீந்திரம் சென்று விழிஞத்திலிருந்து தம் புதல்வியுடனும் ஒரு இளந் துறவியுடனும் அங்கு வந்திருந்த நம்பியைச் சந்தித்து விட்டு மீண்டும், மகாராணியைப் பின்தொடர்ந்து அரண்மனைக்குச் சென்றான். செல்லும் வழியில் சில எதிரிகள் அவனைத் துரத்தியதால் நந்தவனத்து வாய்க்கால் வழியே அரண்மனைக்குள் புகுந்து நிலா முற்றத்தை ஒட்டி வளர்ந்திருந்த மகிழமரத்தில் ஏறி ஒளிந்து கொண்டான். துரத்தி வந்தவர்களும் மரத்தில் ஏறவே கிளை முறிந்து குழப்பமாயிற்று. அந்தக் குழப்பத்தில் துரத்தி வந்தவர்கள் ஓடிவிடவே சேந்தன் கீழே இறங்கி இடையாற்றுமங்கலம் புறப்பட்டான்.

இடையாற்றுமங்கலம் மாளிகையில் தளபதியும் நம்பியும் அந்தரங்க அறையில் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் சேந்தன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான். தளபதியிடமிருந்து வாங்கிய திருமுகத்தை நம்பி படித்தபோது வடதிசை மூவரசர் மகாராணியையும், குமார பாண்டியனையும் கொலை செய்யத் திட்டமிட்டிருப்பதையும்



முக்கிய அறிவிப்பு

49 ஆண்டுகளாகப் புகழ் பெற்றுள்ள எங்கள்

# ஆர். எஸ். பதி மருந்து

(REGD.)

தீபாவளி தினம் முதல்

புதிய அழகிய மூவர்ண அட்டைப் பெட்டியில் கிடைக்கும் என்பதை பொதுமக்களுக்கும் வணிகப் பெருமக்களுக்கும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்

## ஆர். எஸ். பதி அண்டு கோ.

(ஸ்தாபிதம்: 1909)

த. பெ. எண் 99

214 & 215. மேல மாசி வீதி - - மதுரை

மதுரை கிளை நிலையம்:
மேலக் கோபுரம் உட்புறம்
மீனாக்ஷி அம்மன் கோவில், மதுரை

சென்னை கிளை நிலையம்
111. தேவராஜ முதலித் தெரு
(லாலா மார்க்கெட்)
சென்னை-3

அதிசயமும் அற்புதமுமான சருமப் பாதுகாப்பு




மெபார்

# லிம்டா

டாய்லெட் சோப்

தி வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்
கோழிக்கோடு-1

சகிக்க முடியாத உபாதை: தூக்கமும் கிடையாது: சுகமான நித்திரைக்கும் உபாதை நிவர்த்திக்கும்



# எப்ரிலைம்

# EPHRILIME




நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

யூனியன் டிரக் கம்பெனி லிட்.
மதராஸ் டிப்போ
2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

கொண்டவனைக் கண்டுபிடிக்க நிலவறைக்குள் இறங்கினான். அவனால் முடியவில்லை. ஒளிந்தவன் தப்பி விட்டான். நிலவறையிலிருந்து ஏமாற்றத்தோடு வெளிவந்த சேந்தன் பட்டி மண்டபத்தில் ஆபத்துதவிகள் தலைவன் மகரநெடுங்குழைக்காதனைச் சந்தித்தான். அவன் மனத்தில் சில சந்தேகங்கள் ஏற்பட்டன. ஒளிந்திருந்து கவனித்தான். குழைக்காதன் அங்கேயிருந்து ஒரு பொருளை எடுத்துச் சென்றதை மேல்மாடத்திலிருந்து நம்பியின் ஏற்பாட்டின்படி புவனமோகினி என்ற வண்ண மகளும் கண்காணித்தாள். அவள் தலையிலிருந்து உதிர்ந்த பூ அவளைக் காட்டிக் கொடுத்து விட்டது. அவள் அஞ்சினாள். அன்று நடந்த கூற்றத் தலைவர் கூட்டத்தில் இளவரசனை விரைவில் தேடி வருவதற்கு ஏற்பாடாயிற்று.

அரண்மனையில் கூற்றத் தலைவர் கூட்டம் நடந்த அதே இரவில் இடையாற்றுமங்கலத்தில் பாண்டிய மரபின் அரசுரிமைப் பொருள்கள் கொள்ளை போய் விட்டன. இளந் துறவியும், அவரைத் தேடி வந்த ஆட்களும் காணாமற் போய் விட்டனர். தளபதி கரவந்தபுரத்துத் தூதனுடனும், அவசரச் செய்தியுடனும் வந்தான். இரவில் புவனமோகினி ஆபத்துதவிகள் தலைவனால் பயமுறுத்தப்படுகிறாள்.

மறுநாள் பொழுது விடிந்தபோது அதிர்ச்சி தரும் உண்மைகள் அரண்மனைக்கு வருகின்றன. கரவந்தபுரத்துத் தூதன் போர்ச் செய்தி கொண்டு வந்தான். இடையாற்றுமங்கலத்திலிருந்து கொள்ளைச் செய்தி வந்தது. நம்பி, மகாராணியாரைக் கலந்து ஆலோசிக்கிறார். இராசசிம்மன் மாறுவேடத்தில் தம்மிடமே தங்கியுள்ள உண்மையையும் கூறுகிறார். அவசரம் அவசரமாக ஏற்பாடுகள் நடக்கின்றன. இடையாற்றுமங்கலத்தில் துறவியையும் காணவில்லை என்று அறிந்தபோது அவர் நம்பிக்கை இழக்கிறார். இடையாற்றுமங்கலத்தில் அவர் புதல்வி குழல்மொழி இராசசிம்மனிடம் உள்ளம் பறிபோன ஏக்கத்தில் உழன்றாள்.

இவ்வளவுக்கும் காரணமான குமார பாண்டியனோ ஈழநாட்டுக் காசி மன்னரின் படைத் தலைவர் சக்கசேனபதியுடன் தென்கடலில் பயணம் செய்கிறான். இடையில் செம்பவழத் தீவில் இறங்குகிறான். அந்தத் தீவின் கடைவீதியில் சங்கு வாங்கப் போன இடத்தில் ஒரு அழகிய பெண்ணை அவன் சந்திக்கிறான். அன்றிரவு பகைவர்களால் அவனுக்கு வரவிருந்த ஆபத்திலிருந்து அந்தப் பெண் மதிவதனி அவனைக் காப்பாற்றுகிறாள். அந்தக் கள்ளங்கபடமில்லாத பெண் அவன் மனத்தில் பதிந்து விடுகிறாள். அந்தத் தீவிலிருந்து வெளியேறும்போது மறுபடியும் பல முறை அங்கு வரவேண்டும் போலவும், அந்தப் பெண்ணைக் காணவேண்டும் போலவும் அவன் மனம் ஏங்குகிறது. பாதுகாப்பிற்காக எடுத்துச் செல்லும் அரசுரிமைப் பொருள்களுடன் பயணத்தைத் தொடர்கிறான் அவன்.

### முதல் அத்தியாயம்

## பொருநைப் புனலாட்டு விழா

அன்றைக்குக் காலையில் பொதிய மலைக்குக் கிழக்கே கரவந்தபுரக் கோட்டத்தில் பொழுது புலரும்போது கதிரவனுக்கு அடக்க முடியாத ஆவல் உண்டாகி யிருக்க வேண்டும். வைகறையில் வழக்கத்தை விடச் சற்று முன்பாகவே உதயம் ஆகிவிட்டது போலிருந்தது.

சில நாட்களாக இடைவிடாத மழை. பொதியமலையின் எழிலார்ந்த நீலக் கொடுமுடிகளைக் காண முடியாதபடி எப்போதும் கருமேகங்கள் திரையிட்டுக் கவிந்திருந்தன. ஆவேசம் பிடித்து ஓடும் பேய் கொண்ட பெண்களைப் போல் ஆறுகளெல்லாம் கரை மீறிப் பொங்கி ஓடிக் கொண்டிருந்தன. சந்தனமும், செந்தமிழும், மந்தமாருதமும் எந்தப் பொதியமலையில் பிறந்தனவோ அதே பொதியமலையில்தான் பொருநையும் பிறந்தாள். அருவிகளாக விழுந்து காட்டாறுகளாக ஓடி மலையை விட்டுத் தரையில் இறங்கும் வரை பிறந்த வீட்டில் சுதந்திரமாக இருக்கும் கன்னிப் பெண் போலிருந்தாள் அவள். தரையில் இறங்கிய பின்போ, புக்ககம் செல்லும் மணப்பெண்ணின் அடக்கமும், ஒரே நெறியை நோக்கி நடக்கும் பண்பும் அவளுக்கு வந்து விட்டன. கணவன் வீடாகிய கடலை அடைவதற்குமுன் அவள்தான் இரு கரைகளிலும் எத்தனை காட்சிகளைக் காணப் போகிறாள்? விண் முகட்டை நெருடும் கோபுரங்கள், மண்ணில் புதையும் குடிசைகள், பெரிய மரங்கள், சிறிய நாணற்புதர்கள், அழுக்கு நிறைந்த மனிதர்கள்,—இன்னும் எத்தனை எத்தனையோ? போகிற வழியில், குற்றாலத்து மலை முகட்டிலிருந்து குதித்துக் குறும்பலாவை நனைத்து வரும் சித்திரா நதித் தோழி பொருநையைத் தழுவிக் கொள்கிறாள். பொருநைக்குப் போகும் வழிக்குத் துணை கிடைத்து விடுகிறது.

போகிற வழியெல்லாம் பொருநைக்கு நல்ல வரவேற்புத்தான். மலரும், மாலையும் தூவுவோர் மங்கல வாழ்த்தெடுப்போர், வாசனைத் தூள்களை வாரியிறைப்போர், எல்லோரும் அவளைப் போற்றினார்கள். அது புனலாட்டு விழாக்காலம். பருவத்தில் பெய்த அந்த மழையால்தான் எவ்வளவு நன்மைகள். அந்த

மேல் மழை பெய்திராவிட்டால் கொற்கைத் துறையில் முத்துச் சிப்பிகள் விளை வெய்தாமல் போயிருக்கும். சிப்பிகள் விளைவின்றிச் சலாபத்தில் (முத்துக்குளி நடைபெறும் இடம்) முத்துக்குளி நின்று போனால் தென்பாண்டிப் பேரரசுக்கு வருவாய் குறையும். கரவந்தபுரத்து உக்கிரன்கோட்டைக் குறுநிலவேள் தென்பாண்டிப் பேரரசுக்கு அடங்கி நடப்பதாக ஒப்புக் கொண்ட நாளிலிருந்து கொற்கைத் துறையையும், முத்துச் சலாபத்தையும் செவ்வனே செய்யும் பொறுப்பு அவனிடம் அளிக்கப்பட்டிருந்தது.

ஆண்டுதோறும் பொருநையில் புதுப் புனல் பெருகி அந்தப் பாகம் பகுதியெல்லாம் பசுமையும், வளமும் பரவி நிற்கும் நல்ல பருவத்தில் கொற்கை முத்துக்குளி விழா தொடங்கும். அன்று கரவந்தபுரத்துச் சிற்றரசன் தன் பரிவாரங்களோடு கொற்கைக்கு வருவான். சுற்றுப்புறங்களிலிருந்து திரள் திரளாக மக்கள் கூடுவார்கள். உள் நாட்டிலிருந்தும், கடலுக்கு அப்பாலுள்ள நாடுகளிலிருந்தும் பெரிய பெரிய வாணிகர்கள் முத்துக்களை விலை பேசி வாங்கிச் செல்ல வருவார்கள். கொற்கையில் திருவிழாக் கூட்டம் பெரிதாகக் கூடி விடும்.

'கடலாடி மலையேறுதல்' என்று ஒரு பழைய மரபு. கொற்கையில் முத்துக் குளி முடிந்ததும் கரவந்த புரத்தார் பொதியமலைச் சாரல் வரையில் சென்று பொருநையில் நீராடி மீள்வது வழக்கம். பொருநை கடலோடு கலக்கும் இடத்துக்குச் சற்று வடக்கே கொற்கை முத்துச் சலாபம் அமைந்திருந்தது.



கொற்கைத் துறையில் கரையின் மணற்பரப்பே தெரியாமல் கூடாரங்களும், மக்கள் கூட்டமும் நிறைந்திருந்தன. இன்னிசைக் கருவிகள் முழங்கின. வாழ்த்தொலி அதிர்ந்தது. முத்துக் குளிப்பவர்களைக் குறித்த மங்கலவேளையும் வந்தது. துறையின் முன்புறத்தில் சலாபத்துக்கு அருகே கரவந்தபுரத்துச் சிற்றரசன் பெரும்பெயர்ச் சாத்தன் நின்றான். அவன் பக்கத்தில் அவனுடைய பட்டத்தரசி அடக்க ஒடுக்கமாக நின்றாள். அரச பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள் சூழ நின்றார்கள். விலை பேச வந்திருக்கும் பெருஞ் செல்வர்களான வாணிகர்கள் இன்னும் சிறிது தள்ளி நின்றார்கள். பலவிதமான தோற்றத்தோடுகூடிய, பலமொழிகள் பேசும், பல தேசத்து வாணிகர்கள் அங்கே நிறைந்திருந்தனர். கடல் ஓசையும், வாத்தியங்களின் ஒலியும், பல மொழிக் குரல்களும் கலந்து ஓரே ஒலிக் குழப்பமாக இருந்தன. தண்ணீருக்குள் மூச்சை அடக்கும் ஆற்றல் வாய்ந்த கட்டிளங் காளைகளான இளைஞர்கள் வாட்டசாட்டமான தோற்றத்தோடு வரிசையாக நின்றார்கள். அவர்கள் தாம் முத்துக் குளிக்காகக் கடலில் மூழ்கும் பரதவ வாலிபர்கள். பளிங்கால் இழைத்தெடுத்துப் பொருத்தினது போல உடற் கட்டுள்ள அவர்கள் தோற்றம் மனத்தைக் கவர்ந்தது.

சலாபத்துக்குப் பக்கத்தில் இருந்த சிறிய கோவிலில் முத்துக் குளிப்பதற்கு முன் அவர்கள் வழக்கமாக வழிபடும் கடல் தெய்வத்தின் சிலை இருந்தது. முறைப்படி அதை வழிபட்டபின் பரதவ இளைஞர்கள் அரசனை வணங்கிவிட்டு ஒவ்வொருவராகக் கடலில் குதித்தனர்.

அதைப் பார்த்துக் கொண்டிருந்த பெரும் பெயர்ச் சாத்தனின் பட்டத்தரசி, "எவ்வளவு துணிவு இந்த வாலிபர்களுக்கு?" என்று வியப்புடன் தன் கணவனை நோக்கிக் கூறினாள். பெரும் பெயர்ச் சாத்தன் அவள் கூறியதைக் கேட்டுச் சிரித்தான்.

"இப்படிச் சில ஆண்பிள்ளைகள் துணிந்தால்தான் உன்னைப் போன்ற பெண்களின் கழுத்தில் முத்துமாலை இருக்கமுடியும்." அவன் அவள் கழுத்தை வளைத்துக் கிடந்த முத்துமாலையைச் சுட்டிக்காட்டிச் சொன்னான்.

"ஏனோ! பெண்களை மட்டம் தட்டியா பேசுகிறீர்கள்?"

"அப்படி ஒன்றுமில்லை! உலகத்தில் ஆண்பிள்ளைகள் அதிக துன்பத்தின் பேரில் அடைய வேண்டிய பொருள்களெல்லாம் பெண்களின் தேவைகளாயிருக்கின்றன என்றுதான் சொல்ல வந்தேன்."

"ஆ, குள்ளவர்களுக்குத் தானே அழகான பொருள்கள் தேவை?" என்று தன் கணவனைப் பேச்சில் வென்றாள் அந்தப் பட்டத்தரசி. சுற்றிலும் இருந்த உயர்

துர அரசாங்க அதிகாரிகள் அரசனுக்கும், அரசிக்கும் இடையே நிகழ்ந்த இந்த நகைச்சுவைப் பேச்சைச் சிரித்து வரவேற்றனர்.

கடலில் மூழ்கிய இளைஞர்கள் கிடைத்த மட்டில் முத்துச் சிப்பிகளை அள்ளிக் கொண்டு வந்தார்கள். மறுபடியும், மறுபடியும் உடல் அலுப்பு அடைகின்றவரையில் மூழ்கிக் கொண்டே இருந்தார்கள். முத்து வாணிகத்துக்காக வரும் அயல் நாட்டு வாணிகர்களின் கப்பல்கள் மேலும் மேலும் வந்து கொண்டே இருந்தன. துறையில் கப்பல்களை நிறுத்தப் போதுமான இடமின்றி ஒரே நெருக்கமாக இருந்தது. எனவே, கடலில் கண்ணுக்குத் தென்பட்ட தொலைவுவரை கப்பல்களின் பாய்மரக் கூம்புகள் தெரிந்தன. பல நாட்டுக் கொடிகள், பலவிதச் சின்னங்களோடு, பல நிறத்தில் அவற்றின் உச்சியில் பறந்தன. வானில் வட்டமிடும் பறவைக் கூட்டங்களுக்கும், அந்தக் கொடிகளுக்கும் வேறுபாடு தெரியாமல் பார்க்கிறவர்கள் மயக்கமுறும் வண்ணம் அவை அதிகமாயிருந்தன.

ஐந்தாறு நாழிகைகளுக்குப் பின் முத்துக் குளி நின்றது. அது



வரையில் எடுத்த சிப்பிகள் அரசனுக்கு முன்னால் வரிசையாகக் குவிக்கப்பட்டிருந்தன. அவற்றிலிருந்த உயர்ந்த முத்துக்களை அரசனிடம் கொண்டு வந்து கொடுத்து வணங்கினான் ஒரு வயது முதிர்ந்த பரதவன். அது ஒரு வழக்கமான மரியாதை. அந்த முத்துக்களைப் பெற்றுக் கொண்ட அரசன் ஏதோ ஒரு குறிப்பை நினைப்பூட்டும் புன்னகையோடு தன்னுடைய பட்டத்தரசியின் கையில் அவைகளைக் கொடுத்தான்.

"ஆண்பிள்ளைகள் அதிகத் துன்பப்பட்டு அடையும் பொருள்களெல்லாம் பெண்களுக்கே வந்து சேர்கின்றன!" அவன் குறும்பாகப் பேசினான்.

"என்ன செய்யலாம்? உலகம் பரம்பரையாக அப்படிக் கெட்டுப் போய்க் கொண்டிருக்கிறது!" அவன் வருத்தப்பட்டுச் சொல்வது போல் இந்த வார்த்தைகளைச் சொல்லி நடித்தான்.

சுற்றி நின்றவர்கள் சிரிப்பை அடக்க முடியாமல் இரைந்தே சிரித்து விட்டார்கள். பட்டத்தரசி சிறிது நாணத்தோடு தலையைக் குனிந்து கொண்டாள்.

சிப்பிகளை விலை பேசும் நேரம் வந்தது. அதற்காக அமைக்கப்பட்டிருந்த கூடாரத்தில் வாணிகர்கள் நூற்றுக்கணக்கில் கூடினார்கள். பெரும்பெயர்ச் சாத்தனும், அவன் மனைவியும், [illegible]புரத்து அரண்மனையைச் சேர்ந்த மூத்த அதிகாரிகளும் சிப்பிகளுக்கு அருகே இருக்கைகளில் அமர்ந்திருந்தனர்.



மன்னர்களுக்கு ஈடான செல்வச் செருக்குள்ள சில பெரிய வாணிகர்கள் மட்டும் முன் வந்து தைரியமாக விலை கேட்க ஆரம்பித்தனர். அப்படி முன் வந்த பெரிய வாணிகர்களின் தொகை பத்துப் பன்னிரண்டு பேருக்குமேல் இருக்காது. அவர்களில் இருவர் விலை கேட்கத் தொடங்கிய விதம், கேட்கும் போது வார்த்தைகளை வெளியிட்ட முறை, — எதுவுமே மரியாதையாகத் தெரியவில்லை. எடுத்தெறிந்த பேச்சும், குதர்க்கமும் அவ்விருவரும் வியாபாரத்துக்குப் புதியவர்களோ என்று நினைக்கச் செய்தன. எல்லோருடைய கவனமும் அந்த இருவர் மேல் நிலைத்தன. அப்படி நடந்து கொண்டார்கள் அவர்கள். இதையெல்லாம் பார்த்த பெரும்பெயர்ச் சாத்தன் பொறுமையாக இருந்தான்.

"எங்கள் நாட்டிலும் முத்துக் குளிக்கிறோம்! ஆனால் இவ்வளவு அநியாய விலைக்கு விற்றுக்கொள்ளையடிப்பதில்லை."

"நீங்கள் எந்த நாடு?"

"ஏன்? அதைச் சொன்னால்தான் எங்களுக்கு முத்து விற்பீர்களோ?"

"அது இல்லை. முத்துக்களைப் புளியங்கொட்டைபோல் மலிவாக விற்கும் நாடு எது என்று தெரிந்துகொள்ள ஆவலாயிருக்கிறது எனக்கு."

"நாங்கள் இருவரும் சோழநாட்டினர். எங்கள் நாட்டிலும் புகார்த் துறைக்கு அருகில் சில இடங்களில் முத்துக்குளிக்கிறார்கள். தெரியுமா?"

"தெரியும்! சோழநாட்டு முத்துக்களை என்றுமே உலகம் முத்துக்களாக ஒப்புக் கொண்டதில்லை. எங்கள் கொற்கைதான் உலகம் போற்றும் முத்துச் சலாபம். இதை நீங்கள் மறுக்க முடியாது."- சொல்லிவிட்டு அவர்களைப் பார்த்துக் கொஞ்சம் ஏளனமாகச் சிரித்துவிட்டான் கரவந்தபுரத்துச் சிற்றரசன். அது அந்த இருவருக்கும் பொறுக்கவில்லை.

"இதே கொற்கைப் பகுதி இதற்கு முன்பும் பல முறை சோழநாட்டு ஆட்சிக்கு உட்பட்டதுண்டு. இனிமேலும் அப்படி ஆகாதென்று யார் சொல்ல முடியும்? அதை நீங்கள் மறந்து போகிறீர்களோ?"

பெரும்பெயர்ச் சாத்தனுக்குச் சினம் மூண்டது. "நீங்கள் முத்து வாணிகத்துக்கு வந்திருக்கிறீர்களா? அல்லது அரசியல் பே[illegible]ப்பு செய்ய வந்திருக்கிறீர்களா?" என்று ஆத்திரத்தோடு இரைந்து கத்தினான் அவன்.

பெரும்பெயர்ச்சாத்தனது கடுஞ்சொற்களைக் கேட்டதும், இருவரும் கதிகலங்கி விட்டனர். தங்கள் குட்டு வெளிப்பட்டு விடுமோ என்ற கவலை அவர்களைப் பிடித்துக் கொண்டது. அவசரக் கோலம் அள்ளித்தெளித்த கதையாக அங்கிருந்து நழுவி விடுவது என்று சமிக்ஞை மூலம் திட்டமிட்டுக் கொண்டனர். அது இன்னும் சந்தேகத்தை விளைவித்து விடுமே என்று அப்பொழுது அவர்களுக்குத் தோன்றவில்லை. எனவே, அந்த இருவரும் வாணிகர் கூட்டத்திலிருந்து வெளியேறி மெல்ல நழுவி விட்டனர். அவர்கள் நடந்துகொண்ட முறையையும், சொல்லாமல் கொள்ளாமல் நழுவி விட்டதையும் காணப் பெரும்பெயர்ச்

சாத்தனின் சந்தேகம் வலுத்தது. தன் அருகில் நின்ற 'மானகவசன்' என்னும் மெய்காவலனை அழைத்து, இருவரையும் அவர்களுக்குத் தெரியாமல் பின்பற்றிச் சென்று கண்காணிக்குமாறு இரகசியமாகச் சொல்லி அனுப்பினான். அவனுடைய மனத்தில் பலத்த சந்தேகத்தை உண்டாக்கி விட்டுப் போய்விட்டார்கள் அவர்கள். ஏற்கெனவே வட புறம் எல்லைக் காவல்வீரர்களிடமிருந்து அவனுக்குச் சில செய்திகள் வந்திருந்தன. கடந்த இரு வாரங்களுக்குள் சோழ நாட்டு ஒற்றர்களாகச் சந்தேகிக்கப் பட்டவர்கள் இருபது முப்பது பேருக்கு மேல் உக்கிரன்கோட்டைச் சிறைச் சாலையில் அடைக்கப்பட்டிருந்தார்கள். பாண்டி நாட்டு எல்லைக்குள் அந்நியர்களை எச்சரிக்கையாகக் கவனித்து அனுமதிக்குமாறு அங்கங்கே எல்லைப்புறக் காவல் வீரர்கள் ஆணையிடப்பட்டிருந்தார்கள். அப்படியிருந்தும் வாணிகர்களைப்போல், துறவிகளைப் போல், யாராவது வந்துகொண்டுதான் இருந்தார்கள்.

முத்துக்குளி விழாவுக்கு மறுநாள் பொதியமலைச் சாரலில் பொருநை நதியில் புனலாட்டு விழாவுக்குச் சென்றபோது அங்கு அந்த முத்துவாணிகர் இருவரைச் சந்தித்தான் பெரும்பெயர்ச் சாத்தான். மூன்றும் நாள் கரவந்தபுரம் திரும்பியபின் ஒரு மாலைப்போதில் மேல் மாடத்திலிருந்து தெருவைப் பார்த்துக் கொண்டிருந்த பெரும்பெயர்ச்சாத்தானின் பட்டத்தரசி அதே ட்கள் தெருவில் நடந்து சென்றதைக் கண்டதாகக் கூறினாள். பொறுமை இழந்த பெரும்பெயர்ச்சாத்தான், மானகவசனைக் கூப்பிட்டு "இனியும் அவர்களைப் பின்பற்ற வேண்டாம், பிடித்துச் சிறையில் அடைக்க ஏற்பாடு செய்" என்று கடுமையாக உத்தரவிட்டான். ஆனால் அந்த இருவரும் அகப்படவே இல்லை!

கரவந்தபுரத்து எல்லையிலேயே தென்படாமல் மறைந்து விட்டார்கள். பாண்டிய நாட்டு எல்லையோரச் சிற்றூர்களில் சிறு களவுகள், கலவரங்கள், அடிபிடிகள் நடக்கும் செய்திகள் வளர்ந்தன. இந்த அடையாளங்களெல்லாம் எதற்கு முன் அறிவிப்பு என்பது பெரும்பெயர்ச்சாத்தானுக்குப் புரிந்துவிட்டது.

"இனியும் மூடி மறைப்பதில் பயனில்லை. செய்தியை மகாமண்டலேசுவரருக்கும், மகாராணிக்கும் எட்டவிட வேண்டியதுதான்" என்று தீர்மானத்துக்கு வந்தான். அந்தத் தீர்மானத்தை உடனே செயலாற்றியும் முடித்து விட்டான். (தொடரும்)

# டெக் டூத்பிரஷ் வாங்க
# 3 தகுந்த காரணங்கள்

1 மிருதுவான கிட்டன் முடிகள்
ஈறுகளை புண்ணாக்காமல் பற்களை சுத்தம் செய்கின்றன

2 தேர்ந்தெடுக்க 2 வித தலைப்பாகம்
'ஓவல்' மற்றும் 'ஷார்ட் ஓவல்' வடிவங்களில் கிடைக்கும்

3 கைக்கு அடக்கமான பிடி
விஞ்ஞான முறைப்படி பிரத்தியேக வடிவம் கொண்டது

நினைவிலிருக்கட்டும்:
இந்த மூன்று விசேஷ அம்சங்கள் பொருந்தியது புது மாதிரி டெக் ஒன்றே!




ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப் இந்தியா
பிரைவேட் லிமிடெட்

அன்று ஞாயிற்றுக்கிழமை. 'தபால் இலாக்கா'வில் பணி புரியும் என் போன்ற ஆயிரக்கணக்கான ஊழியர்களும்' அப்பாடி!'' என்று ஓய்வு எடுத்துக் கொள்ளும் தினம்.

மேஜையின்மீது கட்டுக் கட்டாகக் கல்யாணப் பத்திரிகைகள் இருந்தன. இன்னும் ஒரு வாரத்தில் கல்யாணம். என் நண்பர்கள் அனைவருக்கும் பத்திரிகை அனுப்ப வேண்டும். அவர்கள் வசதிக்காகவே ஞாயிற்றுக்கிழமையன்று திருமணத்துக்கு ஏற்பாடு செய்தேன். அலுவலகத் தொல்லையின்றி ஆனந்தமாக விருந்து உண்டு நண்பர்களுடன் வேடிக்கையாய்ப் பொழுது போக்கலாமல்லவா? மற்ற நாட்களில் முகூர்த்தம் வைத்தால் ஒரு குவியல் வாழ்த்துத் தந்திகள்தான் வரும். நண்பர்களின் ஆசை ததும்பும் முகங்கள் வர மாட்டா. அதனால் சோதிடரிடம் சண்டை போட்டு, ''ஞாயிற்றுக்கிழமைதான் முகூர்த்தம் வைக்க வேண்டும்'' என்று நான் முடிவு செய்து கொண்டேன்.

நாளையிலிருந்து ஏழு நாட்கள் ''லீவு''. அதற்கு மேல் எனக்கு 'லீவு' கிடையாது. கல்யாணத்துக்கான சகல பொறுப்பான ஏற்பாடுகளையும் நான்தான் செய்ய வேண்டும். என் வயதான தாயார் தவிர என் குடும்பத்தில் வேறு யாருமே கிடையாது.

''அண்ணன் தம்பிகள் இருந்தார்களில்லையே! நீ ஒருத்தனாக அலைகிறாயே?'' என்று அம்மா சொல்லி அலுத்துக் கொள்வாள்.

''ஏனம்மா! எனக்கு உடன் பிறவாத சகோதரர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள், தெரியுமா? நாளை என் 'கணபதி' வந்து விடுவான். அவன் வந்தால் பத்துப் பேர்கள் வந்த மாதிரி'' என்றேன்.

அவனுக்குத் தந்தி கொடு'' என்றாள்.

அவனுக்கு இதோடு மூன்று கடிதங்களும் ஒரு தந்தியும் கொடுத்து விட்டேன். இன்று எப்படியும் வந்து விடுவான்....''

கணபதி என்னுடன் சிறு வயதிலிருந்தே படித்து வந்த என் உயிர் நண்பன். என் அம்மா அவனைத் தன் மூத்த மகனாகவே கருதுவாள். பத்தாம் வகுப்பு பாஸ் செய்தோம், நானும் கணபதியும். எனக்குத் தபால் இலாக்காவில் வேலை கிடைத்தது. கணபதி ரயில்வே இலாக்காவில் நுழைந்து பம்பாய் அருகே சென்று விட்டான். இணைபிரியாதிருந்த நண்பர்கள் உத்தியோகத்துக்காகப் பிரிந்தோம்; சில மாதங்களில் ஓரிரு கடிதங்கள் பரிமாறிக் கொண்டோம். பின்னர் அதுவும் நின்று போயிற்று. இப்போது இரண்டு வருஷங்களாகக் கணபதியிடமிருந்து ஒரு கடிதமும் கிடையாது. இப்போது அவன் விலாசத்தை விசாரித்து அறிவதற்கே எனக்குத் திண்டாட்டமாகிவிட்டது.

கணபதியைப் பற்றிய பேச்சு வந்ததும் அம்மா மனம் குழைந்து விட்டது. ''அடேய், பாலு! உன் நண்பன் கணபதி 'பாலு தான் சீக்கிரம் திருமணம் செய்து கொள்வான். நான் கல்லுப் பிள்ளையார் மாதிரி நித்திய பிரம்மச்சாரிதான்' என்று அடிக்கடி சொல்வானே! 'அப்படியே கல்யாணம் செய்வதாக இருந்தாலும் பாலு வயிற்றில் பிறக்கும் பெண் குழந்தை வளர்ந்து பெரியவளானபின் அவளைக் கல்யாணம் செய்து கொள்வேன். ஏனென்றால் இவ்வளவு பணக்காரனான நம் பாலுவின் மாப்பிள்ளையாக வேண்டும் என்பதே என் வாழ்க்கையின் குறிக்கோளாகும்!' என்று விகடமாகப் பேசுவானே கணபதி?'' என்று நினைவுபடுத்தினாள்.

* * *

''சார், எக்ஸ்பிரஸ் தபால்'' என்ற சத்தம் கேட்டது. வந்தவன் ஒரு கடிதத்தை என் கையில் கொடுத்துக் கையெழுத்து வாங்கிக் கொண்டு போய் விட்டான். கடிதத்தைப் பார்த்தேன். ''பெல்காம்'' முத்திரை யிருந்தது. பின்புறம் திருப்பினேன். பி. கே. கணபதி ஏ. எஸ். எம். என்று குறிப்பிடப்பட்டிருந்தது. ''சபாஷ், கணபதி! நீ பெல்காமிலிருக்க, நான் பம்பாய்க்குக் கடிதமும் தந்தியும் கொடுத்தால் அவை எப்படிக் கிடைக்கும்?'' என்று ஆவலுடன் கடிதத்தைப் பிரித்துப் படித்தேன்.

''அன்புள்ள பாலு,

நெடு நாட்களுக்குப் பிறகு என்னிடமிருந்து இத்தகைய கடிதத்தை எதிர்பார்த்திருக்க மாட்டாய். வாழ்வில் எதிர்பாராத நிகழ்ச்சிகள் எத்தனையோ நிகழ்கின்றன என்பதை நாம் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை.

நான் ரயில்வே இலாக்காவில் சேர்ந்ததும், பூனாவில் மூன்று மாதங்கள் இருந்தேன். பின்னர் 'கான்பாத்' என்ற ஊருக்கு மாற்றப்பட்



டேன். பாலைவனம் போன்ற பொட்டல் பிரதேசத்தில் அது ஒரு சிறிய ரயில் நிலையம். வாழ்வு கொழிக்கும் மற்ற உலகப் பகுதியுடன் எங்கள் ஊரை இணைப்பது அந்த இணைபிரியாத இரண்டு ரயில் தண்டவாளங்கள்தான். ரயில் வந்து நிற்கும்போது 'ஸ்டேஷன்' உயிர் பெற்றுக் கலகலப்பா யிருக்கும். ரயில் போய்விட்டால், காகம் குருவிகூட எட்டிப் பார்க்காது. ஸ்டேஷனிலிருந்து ஒரு பர்லாங் தூரத்தில் 'பீம் நகர்' என்ற சிறிய ஊர். சுமார் நூறு வீடுகள் உண்டு. அங்கே 'ஓடு' தயாரிக்கும் தொழிற்சாலை. அந்தத் தொழிற்சாலையின் அதிபர் பீம்நாத் சேட். அவர் பெயரில் எழுந்தது அந்தச் சிறு ஊர். அங்கேதான் அவளை.....மல்லிகாவைச் சந்தித்தேன். அவள் நம் நெல்லை ஜில்லாவைச் சேர்ந்தவள் என்றும், அவளி தாய் மாமன் அந்த ஆலையில் உதவி இன்ஜினீயராக இருக்கிறார் என்றும் அறிந்தேன். சில நாட்களில் மல்லிகாவின் மாமாவும் நானும் நெருங்கிய நண்பர்களாகி விட்டோம். நானே 'ஸ்டவ்'வைப் பற்றவைத்துச் சப்பாத்தி தயாரித்துக் கையில் சூடு போட்டுக் கொண்டு திண்டாடுவதைக் கண்ட குமார் — அவர்தான் மல்லிகாவின் மாமா — என்னை அவர்கள் வீட்டிலேயே சாப்பிடும்படி கட்டாயப் படுத்தினார். அவர்களுடைய அன்பு உபசரிப்பை ஏற்றுக்கொண்டு வேளா வேளைகளில் அங்கு சென்று சாப்பிடுவேன். அப்போது மல்லிகாவைப் பற்றி அதிக விவரங்கள் தெரிந்து கொண்டேன். தாய் தந்தையரை இழந்த அனாதைப்



# அலைபாயும் உள்ளம்





பெண் என்றும், தாய் மாமாவின் வீட்டிலேயே வேலை செய்துகொண்டு வளர்பவள் என்றும், அத்தையின் குத்தலான பேச்சுக்கும் ஏச்சுக்குமிடையே இருபத்து நான்கு மணி நேரமும் உழைத்து உழைத்து அனுபவப்பட்ட பெண் என்றும் உணர்ந்தேன்.

குப்பை மேட்டிலே குருக்கத்தி வளர்ந்து செழித்து அழகு நிறைந்து பூத்துக் குலுங்குவதைப் பார்க்கிறோம். யார் தண்ணீர் விடுகிறார்கள்? யார் கவனித்துக் கண்காணித்து வளர்க்கிறார்கள்? யாருமில்லை. ஆனாலும் அழகு விம்முகிறது. எழில் கொஞ்சுகிறது அந்தச்சோலையிலே. அதுபோல் மல்லிகாவின் மேனியெங்கும் பருவத்தின் பூரிப்பும் எழிலும் பொன் போலப் பளபளத்தன. கொஞ்சம் கொஞ்சமாக மல்லிகாவுடன் பழகலானேன். நானு பழகினேன்? என் இதயம், என் மூச்சு, என் நரம்புத் துடிப்பு இவை அவளைக் காணும்போது புத்துயிர் பெறலாயின. அவளும் என்னிடம் நெருங்கிப் பழகத் தயங்கவில்லை. நான் மல்லிகாவின் மீது காதல் கொண்டேன். பாலு! நீ என்னைத் தவறாக நினைக்கிறாயல்லவா? மல்லிகாவை நீ ஒரு தரம் பார்த்தால் அப்படி நினைக்கமாட்டாய். உன் நண்பனின் அதிர்ஷ்டத்தை நினைத்து உள்ளம் பூரித்துப் போவாய்.

...யில் தண்டவாளத்தை ஒட்டி வளரும் க...தாழையின் பூவை நீ பார்த்திருக்கிறாயா? உயர்ந்த பூந்தண்டிலே முத்தைப் பழிக்கும் எழிலுடன் இதழ் விரிக்கும் அந்த மலருக்கு உவமையே கிடையாது. ரோஜா மலர் போன்ற உதடுகள், அடுக்கிய பிச்சி மொட்டுக்கள் போன்ற பல்வரிசை, செண்பகப் பூ போன்ற காதுகள், ஏய் பாலு! நான் அவளை வர்ணிப்பதற்கு உன்னைப் போல் எழுத்தாளன் அல்ல! இப்படியே வர்ணனையை நிறுத்திக் கொண்டு மேலே நடந்த விஷயத்தை எழுதுகிறேன்.

ஒரு நாள் நான் அவர்கள் வீட்டுக்குச் சென்றேன். மல்லிகாவைத் தவிர வேறு யாருமில்லை. ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்த மல்லிகாவின் கையிலே ஒரு புகைப்படம் இருந்தது. படத்தில் நாலைந்து பேர்கள் நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தனர். படத்தைப் பார்த்த மல்லிகாவின் நெஞ்சில் பெரிய புயல் உருவாகிக் கொண்டிருப்பதையும், அவள் கண்களின் கன்னங்களின் வழியே கண்ணீர்த் துளிகள் உதிர்ப்பதையும் பார்த்துத் திடுக்கிட்டுப் போனேன்.

என் வரவைக் கண்டதும் மல்லிகா படத்தை அலமாரியில் குப்புற வைத்து விட்டு, கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு புன்னகையை வரவழைத்துக்கொண்டு, "வாருங்கள். எங்கே வராமலிருந்து விடுவீர்களோ?" என்று பயந்து கொண்டிருந்தேன். உங்களுக்குப் பிரியமான சப்பாத்தியும் எனக்குத் துவையலும் செய்திருக்கிறேன்" என்று துள்ளி ஓடிப் போய் எவர்சில்வர் தட்டிலே ஒரு எட்டுச் சப்பாத்தியும், துவையலும் கொண்டு வந்து வைத்தாள். ஜலம் எடுத்து வைத்தாள். நான் திகைப்புடன் ஒன்றுமே பேச முடியாமல். "மாமா எங்கே? அத்தை எங்கே?" என்றேன்.

"ஓஹோ! உங்களுக்கு நான் பரிமாறினால் பிடிக்காதா? நான் தயாரித்த சப்பாத்தி என்றால் ஜீரணமாகாதா? அப்படியானால் இதோ இந்தத் தயிரையும் சேர்த்துக் கொள்ளுங்கள்" என்று கட்டித் தயிரைச் சட்டியிலிருந்து சப்பாத்தி மீது கவிழ்த்துவிட்டு என்னைப் பார்த்துக் கொண்டே நின்றாள். தங்கப் பதுமையின் பாதங்களில் அன்புடன் ஒரு பக்தன் இருந்து அர்ச்சனை செய்வதுபோலிருந்தது அவள் நிற்கவும், அவளருகே தரையில் நான் அமர்ந்து சாப்பிட்டதும்.



பார்லிமெண்டைச் சேர்ந்த ஸ்ரீ கே. எ. மகாதேவன் அமெரிக்க நாடுகளுக்கு ஏர் இந்தியா இண்டர் நேஷனல் விமானத்தில் பிரயாணமானார்.

"அவர்கள் எல்லாரும் எங்கே?" என்றேன்.

"அவர்கள் நாளைக்குத்தான் வருவார்கள். பம்பாய் போயிருக்கிறார்கள். இங்கே இந்தப் 'பப்பாளை' பூனை பிடித்துக்கொண்டு போய் விடாது... பயப்படாமல் சாப்பிடுங்கள்.." என்று கேலி செய்தாள். அவள் பேசிய ஒவ்வொரு சொல்லும் எனக்குக் கற்கண்டாய்த் தித்தித்தது.

"மல்லிகா! நான் ஒன்று கேட்பேன்.. மறைக்காமல் சொல்வாயா?" என்றேன்.

"கேளுங்களேன்! தமிழில் கேட்கலாம். ஹிந்தியிலும் கேட்கலாம். ராஷ்டிரபாஷா படித்திருக்கிறேன். இங்கிலீஷிலும் கேட்கலாம்... இண்டர்பாஸ் செய்திருக்கிறேன். புரியாத பாஷையில் பேசினால் பதில் சொல்ல எனக்குத் தெரியாது" என்று குதூகலத்துடன் பேசினாள். அப்படிப் பேசும்போது அவள் புருவங்களும், இமைகளும், கீழுதடும், கன்னங்களின் குழியும், கண்களின் கருவிழியும் புரியாத பாஷையில் என் விழிகளுடன் பேசி, அனுமதி பெற்று என் விழி வழியே என் நெஞ்சிலே புகுந்து கொண்டன.

தயக்கத்துடன் கேட்டேன்: "மல்லிகா! ஒரு புகைப்படம் உன் கையில் இருந்ததே. யாருடையது அது?"

"அதுவா? நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்" என்று அந்தப் படத்தைக்கொண்டு வந்து காட்டினாள்.

படத்தில் நாலு பேர்கள் வரிசையாக நாற்காலியில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் சுமார் நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்கள்.

"யார் மல்லிகா இவர்கள்? எனக்குத் தெரியக்கூடாதா?" என்றேன்.

"இடப்புறம் இரண்டாவது ஆளைப் பாருங்கள்!" என்றாள் மல்லிகா.

''பார்த்தேன். வழுக்கைத் தலை, கிருதா மீசை, மூக்குக் கண்ணாடி, விசிறி மடிப்பு அங்கவஸ்திரம், கையில் கடிகாரம், காதில் வைரக் கடுக்கன். இன்னும் என்ன?'' என்று அந்தப் படத்தை ஆராய்ச்சி செய்து கொண்டே பேசினேன்.

''தலை நரைத்தாலும் ஆசை நரைக்க வில்லை. வழுக்கைத் தலை மனிதருக்கு முழுக்க முழுக்கக் கல்யாண ஆசை. மூன்று மனைவிகள் இறந்து போயாச்சு. நாலாம் தடவை கல்யாணம் செய்து கொள்ளப் போகிறார்'' என்று கூறி மல்லிகா விம்மினாள்.

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டு மேலும் தொடர்ந்தாள்:

''இவருக்கு நான்காம் தடவை கல்யாணம் செய்து வைப்பதென்று என் அத்தை திட்டமிட்டு விட்டாள். என் தந்தையும் தாயும் அன்று ஹைதராபாத்தில் ஒரே நாளில் புரட்சிக்காரக் காலிகளால் கொல்லப்பட்டுக் கிணற்றுக்குள்ளே தூக்கி வீசப்பட்ட போதுகூட எனக்கு இவ்வளவு துன்பம் நேர்ந்ததில்லை. இந்தக் கிழத்துக்கு என்னைப் பலி கொடுக்கப் போகிறாள் என் அத்தை. என் மாமாவும் ஒப்புக்கொண்டு விட்டார். இனி எனக்கு உயிரோடு சமாதிதான்!'' மல்லிகா மனம் நொந்து பேசினாள்.

''மல்லிகா! நான் உயிருடன் இருக்கும் வரையில் இது ஒரு போதும் நடக்காது. நீ எனக்கு உரியவள். நீ என் உயிர். நீ என் மூச்சு. என் இதயக் கோவிலின் இன்பக்கிளி. உன்னை என்னிடமிருந்து எவராலும் பிரிக்க முடியாது'' என்றேன், உணர்ச்சி பொங்க.

என் வார்த்தைகளை எதிரொலிப்பது போல் திடீரென்று வாசலிலிருந்து கனத்த குரல் வந்தது. ''இந்த அக்கிரமத்தை இனி என்னால் ஒருகணமும் சகிக்க முடியாது...'' என்ற சத்தத்துடன் நுழைந்தார் மல்லிகாவின் மாமா. வெள்ளை முயல் போல் பயந்து நடுங்கிப்போன மல்லிகாவை அடித்து விடுபவர்போல் பாய்ந்தார். நான் அவர் கரங்களைப் பற்றிக் கொண்டேன். எனக்குச் சடச்சடக் கொடுத்தார்.

''மிஸ்டர் கணபதி! என் குடும்ப விவகாரங்களில் தலையிட உமக்கு உரிமையில்லை. நீர் சூதுக்காரர், மோசக்காரர்......போம் வெளியே'' என்று கர்ஜித்தார்.

நான் சட்டென்று அங்கிருந்து வெளியே வந்து விட்டேன்.

நான்கு நாட்களுக்குப் பிறகு மல்லிகா அங்கிருந்து எங்கோ சென்று விட்டாள் என்ற செய்தி கிடைத்துத் துணுக்குற்றேன். அந்த அபலையை ஆதரிக்க, காப்பாற்ற, என் வலிமையும் படிப்பும் தவறி விட்டன. நான் மறைவிடமில்லாத கோழை போல் அந்த ஆட்டுக் குட்டியைச் சிங்கத்தின் கூட்டிலுள் தள்ளி விட்டு ஓடிப் போனவன்தானே? என் நெஞ்சு என்னை நிமிடத்துக்கு ஆயிரம் குத்துக் குத்தி வாட்டலாயிற்று.

இன்று எனக்கு ஒரு நல்ல செய்தி கிடைத்திருக்கிறது. என் மனதைக் கவர்ந்த மல்லிகா நெல்லை ஜில்லாவிலே எங்கோ ஒரு பெண்கள் கல்லூரியில் ஹிந்திப் பண்டிதையாக வேலை பார்க்கிறாள் என்று அறிகிறேன். பாலு, நீ இதை விசாரித்து, மல்லிகாவைச் சந்தித்து, என் வாழ்த்துக்களைக் கூறி அவள் கையால்



சேட்டுப் பாட்டி: ஏண்டா! பகலில் 'பூ' வாணங்களை யெல்லாம் கொளுத்தறீங்க? வெடிகளையெல்லாம் வெடிக்கிறதுதானே?

எனக்கு ஒரு பதில் எழுதச் செய்தால், அது வேதனைப்படும் நெஞ்சுக்கு ஆறுதலளிக்கும்.

அன்பன் கணபதி.''

கணபதியின் கடிதத்தைப் படித்ததும் என் உடம்பெல்லாம் 'குப்'பென்று வியர்த்தது. என் தலை சுழன்றது. அம்மா என் கையில் இருந்த கடிதத்தை வாங்கிப் படித்து விட்டுச் சோர்ந்து போய் விட்டாள்.

''அம்மா! கணபதியை வரவழைத்து அவனுக்கு இந்தத் திருமணத்தைச் செய்து விட்டால் என்ன?'' என்றேன். என் கைகள் மேஜையின் மீது கிடந்த பத்திரிகையைப் பிரித்தன. கண்கள் படித்தன.

''செல்வன் பாலசுப்பிரமணியன், பி.ஏ.க்கு

(குமாஸ்தா தபால் நிலையம்)

செல்வி மல்லிகாவை

(ஹிந்தி பண்டிதை, புனிதமேரி கல்லூரி)

திருமணம் செய்வதாய்ப் பெரியோர்களால் நிச்சயித்து......''

என் நெஞ்சு படபடத்தது. ''இதே மல்லிகாதான் கணபதியின் இதயராணி... அம்மா....என்னம்மா செய்ய?'' என்றேன்.

அம்மாவின் அனுபவம் நிறைந்த வார்த்தைகள் இவை. ''கணபதிக்கு இப்போது இந்த விலாசத்துக்குப் பத்திரிகை அனுப்ப வேண்டாம். 'கல்யாணம் வானுலகில் நிர்மாணம் ஆகிறது' என்ற பழமொழியை நினைத்து, மனத்தைத் திடப்படுத்திக் கொள். ஊரில் எத்தனையோ மல்லிகா உண்டு. இவள் வேறு ஒருத்தியா யிருக்கலாமோ, இல்லையோ?'' என்றாள் அம்மா. என்றாலும் என் மனம் அமைதி இழந்து விட்டது. சஞ்சலம் என் மனத்துக்குள்ளே புகுந்துகொண்டு அங்கே நிலவிய அமைதியை ஓட்டிவிட்டது வெளியே.




# . . . உறுதியளிக்கிறேன்!



இதோ உங்கள் ஓரணா — இலேசாக நினைத்துவிடாதீர்கள் — உங்களையே எடைபோட்டுச் சொல்லிவிடும் நாணயம் அது. எடைகாட்டும் கருவியில் போட்டுப் பாருங்கள், உண்மை விளங்கும். பாரத்திற்கு ஏற்றவாறு கூலிகேட்பது போர்ட்டரின் வழக்கம்; ஆனால் எடைகாட்டும் கருவியின் மீது ஏறி நிற்பவர் வற்றல் பேர்வழியோ, 'கன'வானோ, இருவருக்கும் ஒரே விலை நிர்ணயிக்கும் ஓரணா நாணயத்தின் சமதர்ம சேவையே சேவை! ஆனால் கனம் மிகுந்தோர்க்கு லாபம் அதிகம் என்கிறீர்களா? அப்படியானால் ஏகபோகமாக ஒரு கை பாருங்களேன் — இருக்கவே இருக்கிறது பால், பழம், பச்சைக் கறிகாய்கள் . . .

★ ★ ★

அன்று பாருங்கள், உங்கள் மனம் விரும்பி நண்பர் ஒருவருக்கு, மகா கனம் பொருந்திய தமது 'பூத' உடலின் எடையை அறிந்துகொள்ளும் அவா ஏற்படவே, எடை காட்டும் கருவிமீது 'பாரத்தைப் போட்டுவிட'த் தீர்மானித்துவிட்டார். அவர் பாததூளி பட்ட பலன், மிஷினே உடைந்து போயிற்று: ஆயினும் ஓரணா தொலைந்துபோன வருத்தமே அவருக்கு!



நாணயமோ, நோட்டோ — சிறிதோ, பெரிதோ — விலையாகக் கொடுத்தாலும், கடனாகக் கொடுத்தாலும், அதனதன் பெறுமானம் பண்டமாகவோ, ரொக்கமாகவோ ஈட்டுக்கு ஈடாக, வள்ளிசாகத் திரும்பி வந்தால்தான் மனிதனுக்குத் திருப்தி.

★ ★ ★

கடன்பட்டார் வீடுதேடிக் காதவழி நடக்கிறது கடன் கொடுத்தவரின் செருப்பு; அதே சமயம் தேயாமலும் சக்கிலியரிடம் போகாமலும் இருந்தால்தான் செருப்பின் விலையில் அவருக்குத் திருப்தி!

★ ★ ★

கத்தரிக்காய் நிறுத்து வாங்கும்போதுகூட, தூக்குக் கோலைவிட்டுக் கண்ணை எடுக்காமலேயே காலணா பேரம் பேசும் தீர வாடிக்கைக்காரர்; கடைக்காரரோ காசைப் பன்முறை தட்டிப் பார்த்து வாங்கும் நாணயஸ்தர்!

நாணயங்களின் நாணயம் எப்படியோ, ஆனால் நோட்டுக்கள் மட்டும் " . . . தொகையைக் கேட்ட மாத்திரத்தில் தருவதாக உறுதியளிக்கிறேன்" என்று நாணயமாகக் கூறுகின்றன!

★ ★ ★

இயந்திரங்களும் மனிதர்களும்கூட வாங்கியதைத் திருப்பித் தரத் தவறலாம்; ஆனால் இயற்கையன்னை தவறவே மாட்டாள். நீலக் கடலிலிருந்து கடன் வாங்கிய நீரை மழையாகத் திருப்பித் தருகிறது வானம். மண்ணுக்கு மேலிருந்து கிடைத்த உணவைப் பயிராகத் திருப்பித் தருகிறது வித்து — இது சிறு குழந்தையும் அறிந்த தத்துவம்!

★ ★ ★

உண்மையில் இந்த தத்துவத்தைப் பல நூற்றாண்டுகளுக்கு முன் ஒரு சிறு குழந்தையே அழகுற விளக்கியதாகக் கூறுகிறது இலக்கிய வரலாறு.

DL. 452A-19 TM

"நன்றி ஒருவர்க்கு செய்தக்கால் அந்நன்றி என்று தருங்கொல் எனவேண்டா..." என்று ஒரு புலவர் பாடிய குறை வெண்பாவை அந்த ஆறு வயதுச் சிறுமியான ஔவை பூர்த்தி செய்த விதம் நீங்கள் அறிந்ததே: "...நின்று தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத் தலையாலே தான் தருதலால்" என்ற அப் பொன்மொழிகளிலே, நன்றி மறவாமைக்கு உதாரணமாக இடம் பெற்றுள்ள மரம் நெட்டையான மரம்!



* * *

நெட்டையான பேரீச்சை மரத்தின் படமொன்றைக் காண்பித்து, "இது தென்னையா, ஈச்சையா?" என்று கேட்டால் "பனை" என்று பதிலளிப்போரும் உண்டு. காரணம் அந்த வர்க்கத்தைச் சார்ந்த எல்லா மரங்களும் தோற்றத்தில் ஒத்திருப்பதோடு, தட்டாமல் பலனளிக்கும் பண்பிற்கு ஒவ்வொன்றுமே சின்னமாக விளங்குகிறது. செலாவணி நோட்டைப் போலவே ஈட்டுக்கு ஈடாக, வள்ளிசாகத் "தருவதாக உறுதியளிக்கிறேன்" என்று முழங்கும் அந்தச் சின்னம் பேரீச்சை மரத்திற்கும் பொருந்துமல்லவா?

பிரதிபலன் தரும் பண்புக்கு நல்ல உதாரணம் நமது உடலே. வாய் வழிச்சென்ற உணவின் பிரதிபலிப்பே அங்க வளர்ச்சியும், ஆரோக்கியமும். ஊட்டமளிக்கும் நானாவித உணவுகளும் உடலுக்குத் தேவை என்பது இக்காலத்தில் மட்டுமல்ல, ஆதிகாலத்திலேயே உணரப்பட்ட உண்மை. "பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை நாலும் கலந்துனக்கு நான் தருவேன்" என்று கூறி, அந் நல்லுணவுக்குச் சமனமாகச் "சங்கத் தமிழ் மூன்றும் தா" என்று கேட்கிறார் ஔவை. தமிழ் மூதாட்டியின் கரத்திலிருக்கும் தராசிலே, முத்தமிழைத் தாங்கும் தட்டுக்குச் சரி நிகராக விளங்குகிறது நல்லுணவைப் படைக்கும் தட்டு!

* * *



"அதெல்லாம் சரிதானய்யா. இந்த 20-ம் நூற்றாண்டிலே பாலும் தேனும் இங்கு என்ன ஆறாக ஓடுவதாக ஞாபகமோ?" என்று நீங்கள் கேட்கிறீர்கள். நியாயம்! இன்று நாடு இருக்கும் நிலையில் பாலுக்காக மக்கள் ஓலமிடுவதுதான் காதில் விழுகிறது. (கைக்குழந்தைகளிடமிருந்தே கேட்கிறதே அந்த ஓலம்). உண்மையாக நமது மக்களின் வயிற்றில் பாலை வார்க்க வேண்டுமானால், கிடைக்கும் சொற்ப பாலையும் வெண்ணெய் நெய்யாக மாற்றுவதைக் குறைக்க வேண்டும். நெய்யைத் தவிர வேறு சிறந்த கொழுப்பு வகைகளே இந்த நவீன காலம் நமக்கு வழங்காமற் போய்விடவில்லை.

அவற்றுள் மிகச் சிறந்த சமையல் சாதனம் டால்டா வனஸ்பதி. சுத்தமான புத்தம் புதிய தாவரக் கொழுப்பாகிய 'டால்டா'வில் வைடமின் 'ஏ'யும், நெய்யிலுள்ள அதே அளவு வைடமின் 'டி'யும் சேர்க்கப்பட்டுள்ளன. ஊட்டமளிப்பதுமன்றி எவ்வகை சமையலுக்கும் பயன்படுகிறது அது. விசேஷ வைபவங்களுக்கான இனிப்புப் பட்சணங்கள் முதல், அன்றாட சமையலிலுள்ள கறி, கூட்டு, அப்பளம் வரை சகல உணவுகளையும் சுவையோடு பரிமளிக்கச் செய்வது டால்டா வனஸ்பதி.

* * *

அறுசுவை உணவையும் ஆரோக்கியத்தையும் விரும்பி அவற்றின் விலைமதிப்பை உணர்ந்துள்ளவர் எவரும் தேர்ந்தெடுக்கத் தகுதி வாய்ந்த சமையல் சாதனம் 'டால்டா'தான். 'டால்டா'வின் அடையாளமான பேரீச்சை மரச் சின்னத்தை டின் மீது காணலாம். ஆம், தட்டாது பலன் தரும் அரிய பண்பிற்கு நமது முன்னோர் தந்திட்ட சின்னம் எதுவோ அதே வர்க்கத்தைச் சார்ந்த பேரீச்சை மரம்! ஈட்டுக்கு ஈடாக, வள்ளிசாகப் பலன் "...தருவதாக உறுதியளிக்கிறேன்" என்று உறுதிமொழி கூறும் உன்னதச் சின்னம்!

DL. 492B-19 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய்.



## 80. வரப்புயர

"வரப்புயர" என்று வாழ்த்துக் கூறினாள் தமிழ்ப் பாட்டி.

அரசன் வியப்புற்றான்.

ஒரு அகப்பைக் கூழுக்கு ஆசிநிறைந்த ஒரு முழுப்பாவை உகந்து யாத்திட்ட ஔவைப்பாட்டி மேற்சொன்ன விதம் அரசனுக்குச் சுருக்கத்தில் வாழ்த்து கூறினாள்.

நவராத்திரி பூஜைகளெல்லாம் கழிந்த பிறகு விஜயதசமியன்று அவைக்கூடத்தில் அரச சபை கூடியது. அரசன் புலவர்களையும் கலைஞர்களையும் மற்றும் அறிஞர்களையும் முகமன் கூறி வரவேற்றுப் பரிசுகள் வழங்கும் நன்னாள். ஆஸ்தான கவிகளும், அல்லாதவருங்கூட, அரசனைக் கண்டு ஆசி கூறும் நன்னாள்.

அரசனுக்கு ஆசி கூறுவதா? அதுவும் அவனிடம் பல்லைக் காட்டிப் பரிசுபெற வருபவரா?

அதுதான் ஒரு விசேஷம். "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்று ஒரு பழமொழி. "புலவர்க்கு வேந்தன் புல்" என்பது நடைமுறை வழக்கு. இன்றல்ல; அன்று. ஏன்? பரமனுக்கே 'பல்லாண்டு' கூறிய பக்தன் தமிழ்ப் பரம்பரையில் தானே அவதரித்தான்! ஆண்டவனுக்கே ஆசிகூறும் வாய்ப்பும் உரிமையும் தமிழன் பெற்ற பண்பு. அரசனுக்கு ஆசி கூறுவதில் ஆச்சரியமென்ன? அரசனிடம் துதி பாடிப் பல்லைக்காட்டி வயிறு வளர்த்த நரிக் கூட்டமும் இருந்திருக்கலாம். கங்கையில் சாக்கடை ஜலமும் கலக்கிறது. அதற்காக மஹாத்மாக்கள் கங்கையில் ஸ்நானம் செய்யாமற்சென்று விடுவார்களா? அரசனையும் அவ்விதந்தான் பலதரப்பட்டவரும் அண்டுவர். அவருள் புலவர்களும் இருப்பர். புலவர் அல்லாதவரும் இருப்பர். ஆனால் புலவர்களுக்கு இருக்கும் செல்வாக்கே வேறுதான். அவ்விதம் வந்தவருள் தான் ஔவைப்பாட்டியும் ஒருவர். அவர்தான் மேற்சொன்ன விதம் அரசனுக்கு ஆசி கூறி வாழ்த்தினார்.

ஒவ்வொருவரும் நீண்ட நீண்ட பாக்களால் அரசனுக்கு வாழ்த்து கூறிய வேளையில் ஔவைப் பாட்டி இப்படியொரு புதிய முறையில் ஆசி கூறியதும் இச்சந்தர்ப்பத்தில் அரசன் வியப்புற்றதும் சகஜந்தானே! சபையிலிருந்தவர் யாவருக்குமே ஒருவித ஏமாற்றந்தான்.

அரசனின் முகத்திலிருந்தே அவன் மனத்தை யறிந்த கம்பநாட்டாழ்வார் உடனே எழுந்து, "பேஷ்! பேஷ்! இவ்வளவு பெரிய பொருளைக் குறுக்கி ஒரே சொல்லில் அடக்கிச் சொல்லும் திறன் நம் அன்னை ஔவை மூதாட்டியைத் தவிர வேறு யாரிடம் காணக் கிடக்கும்? அரசே! வரப்புயர வென்று வாழ்த்திய அம்மையின் கவித்திறனே திறன்!

**வரப்புயர நீருயரும்—**
**நீருயர நெல்லுயரும்**
**நெல்லுயரக் குடியுயரும்**
**குடியுயரக் கோலுயரு மன்றே!"**

என்று வெகு அழகாக விரிவுரையாற்றிக் கொண்டே போனார்.

இப்படி ஒரு கதை.

"உறிஞ்சி திறம் பெற" என்று நானும் ஒரு வாழ்த்து மொழியை உடல் மெலிந்தோருக்குச் சொல்லுகிறேன். குடலில் பாயும் அன்ன ரஸத்திலிருந்து பலம் புஷ்டிகளைப் பயக்கவல்ல திறன் குடலிலுள்ள உறிஞ்சிகளுக்கு ஏற்படட்டும். பிறகு உடல் மெலிவு போய் புஷ்டி வருவது எளிதாகும்.

இரைப்பையில் ஜீர்ணமான ஆகாரம் நிதானமாகத்தான் குடல்வழி செல்ல வேண்டும். அப்போதுதான் இந்த உறிஞ்சிகளுக்கு அன்ன ரஸத்திலிருந்து சத்துப் பொருள்களை முழுதும் கிரகிக்க அவகாசம் ஏற்படும். இதைத்தான் பரிணாம சக்தி (Assimilative power) என்பது.

ஆகவே ஜீர்ணம் சரிவர ஆவதற்கும், பரிணாமம் சரிவர ஆவதற்கும், மலம் சரிவர (சத்துப் பொருள்கள் முழுதும் உறிஞ்சிகளால் கிரகிக்கப்பட்ட பிறகு) வெளியாவதற்கும் வாய்ப்பை வகுக்க அஷ்ட சூர்ணம், முஸ்தாதக்ரம், ஆம்ர பல்லவாதிலேஹியம் என்ற மருந்துகளை உபயோகித்தல் நலமென்று கூறினேன். அவற்றைச் செய்யும் முறையை விளக்கிவிட்டால்—வரப்புயர — உறிஞ்சி திறம் பெற — என்ற வாழ்த்து நனவாகும் வாய்ப்பு ஏற்படும்.

**அஷ்ட சூர்ணம் :**—இதை ஹிங்க்வாஷ்ட சூர்ணமென்றும் — ஹிங்க்வாஷ்டக சூர்ணம் என்றும் சொல்வர். ஹிங்கு [பெருங்காயம்] முதலான எட்டு சரக்குகளின் சூர்ணம் என்பது இதன் பொருள்.

பெருங்காயம், சுக்கு, திப்பிலி, மிளகு, ஓமம், இந்துப்பு, ஜீரகம், கருஞ்ஜீரகம் என்பவைதான் இதிலுள்ள எட்டு மருந்துச் சரக்குகளும் ஆகும்.

பெருங்காயத்தை ஒரு சொட்டு நெய் விட்டுப் பொரித்து எடுத்துப் பொடித்துக் கொள்ள வேண்டும். இந்துப்புவை வறுத்துப்பொடித்துக் கொள்ளவேணும்.

மிச்சமுள்ள மருந்துகளைத் தனித்தனியாக இடித்துப் பொடித்துச் சலித்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

இப்படித் தனித்தனி தயாரித்த எட்டு சரக்குகளிலின்றும் ஓரளவாக நிறுத்தெடுத்து ஒன்ருகக் கலந்து வைத்துக்கொண்டதுதான் அஷ்ட சூர்ணமெனப் படுவது. உபயோகம், உபயோகிக்கும் விதம் இவற்றை ஏற்கெனவே விளக்கி விட்டேன். அன்னத்தின் முதல் கவளத்தில் ஒரு சொட்டு நெய்யுடன் கூட்டிப் பிசைந்து இச் சூர்ணத்தைச் சாப்பிடலாம். ஆகாரத்துக்கு முன்னே ஆகாரத்துக்குப் பிறகோ ஒரு அவுன்ஸ் மோரில் கலக்கிச் சாப்பிடலாம். ஜீர்ணமும் பரிணமமும் நல்லபடியாகும். உறிஞ்சிகளுக்குச் சத்துப் பொருள்களை கிரகிக்கச் சகல வாய்ப்புகளும் ஏற்படும்.

"இந்த வயத்திலே 'காஸ்' தொந்தரவு சார்! இத்துனூண்டு சாப்பிட்டாலே வயிறு முட்டி விடுகிறது" என்று சொல்லிக் கொண்டு வருகிறார்களே! அவர்களைச் சிலகாலம் இந்த அஷ்ட சூர்ணத்தை அன்னத்துடனாவது — அல்லது அதற்குப் பிறகு கொஞ்சம் வெந்நீருடனாவது சாப்பிட்டு வரச் சொல்லுங்கள். 'காஸ்' எல்லாம் பறந்து போய் விடும். வயிறு 'கலகல'வென்று இலேசாகிவிடும்.

**முஸ்தாதக்ரம்** :—கோரைக் கிழங்கு என்பது எல்லோருக்கும் தெரிந்த சரக்கு. கோரைப் புல்லின் அடியில் இருக்கும் ஒரு கிழங்கு. சாதாரணமாக ஒரு கடலை அளவு முதல் மணிலாக்கொட்டையின் பருப்பு அளவு வரையில் இது இருக்கும். தோட்டக் கால்களிலிருந்து இதைப் பறித்துவரச் செய்தால் நல்லது. சுக்கு, இப்பிலி விற்கும் கடைகளிலும் கோரைக் கிழங்கு கிடைக்கும். ஆனால் கடையில் கிடைப்பதைச்சுத்தமானதாகப் பார்த்து வாங்க வேணும்.

இந்தக் கோரைக் கிழங்கைத் தண்ணீரில் ஊறப்போட்டு, கல்லின்மேல் தேய்த்துக் கழுவி எடுத்துச் சிறிது நசுக்கி எடுத்து ஒரு கஷாயம் வைத்துக்கொள்ள வேணும்! சாதாரணமாக ஒரு பலம் கோரைக்கிழங்குடன் நாலு ஆழாக்கு ஜலம் விட்டு ஒரு ஆழாக்கு கஷாயமாகக் காய்ச்சிக் கொண்டால் போதும்.

வீட்டில் தயாரான பசுவின் தயிர். அதுவும் இளங்கன்று மாட்டின் பாலைக் காய்ச்சித் தோய்த்த தயிரானல் ரொம்பவும் நல்லது. இந்தத் தயிரின் மேலுள்ள ஆடையை ஒரு ஸ்பூனால் எடுத்து வேறுபடுத்தி விடவும். பிறகு அந்தத் தயிரில் கோரைக் கிழங்கின் கஷாயத்தை விட்டு மத்தினால் கடைந்து மோருண்டாக்கவும். இதுதான் முஸ்தா தக்ரம் எனப்படும். (முஸ்தா—கோரைக் கிழங்கு தக்ரம்—மோர்) இதைத் தனியாகவே குடிக்கக் கொடுப்பதாலோ, அன்னத்துடன் சேர்த்துச் சாப்பிடுவதாலோ ஜீரணம் பரிணமம் இரண்டும் நன்னிலை பெறும். உறிஞ்சிகளுக்குச் சத்துப் பொருளைக் கிரகிக்கப் போதுமான அவகாசம் உண்டாகும். மலம் கெட்டிப்பட்டுச் சரியாகப் போகும்.

**ஆம்ரபல்லவாதி லேகியம்** :— மாவின் துளிர், மாம்பழுப்பின் நடு நரம்பு, மாதுளம்பழத்தின்முத்துக்கள் மேற்புறத் தோல் தவிர இடையிலுள்ள சதைப் பற்று, கரும்பு, இஞ்சி, நெற்பொரி, வில்வ வேர்...இவற்றை வகைக்கு 16 தோலா வீதம் எடுத்து இடித்து 16 படி ஜலம் விட்டு 4 படி கஷாயமாகக் காய்ச்சி, மருந்துகளைக் கசக்கிப் பிழிந்து விட்டுக் கஷாயத்தை வடிகட்டி அதில் வெல்லம் 2 வீசை, அஸ்கா சர்க்கரை அரை வீசை, இவற்றைக் கரைத்து மறுபடியும் வடிகட்டி அடுப்பிலேற்றிக் கம்பிப் பாகாகக் காய்ச்சிக் கொள்ளவும்.

பிறகு, கோரைக்கிழங்கு, தனியா, ஜீரகம், ஏலரிசி, லவங்கப் பட்டை, சிறு நாகப்பூ, சுக்கு,மிளகு, திப்பிலி ஆகியவை வகைக்கு 2 தோலா வீதம் பொடித்துச் சலித்த அல்லது வஸ்திரகாயம் செய்த சூர்ணத்தைத் தூவிக் கிளறிக் கிண்டி எடுத்துக் கொள்ளவும். இதுதான் ஆம்ரபல்லவாதி[ஆம்ரம்-மா; பல்லவம்-துளிர் முதலியவை] லேஹியம். இதில் வயதுக்குத் தக்கபடி ஒரு புளியங்கொட்டையளவு முதல் 1 டீஸ்பூன் அளவு வரையில் தினம் 2 வேளை கொடுத்து வரவும்.

# எச்சரிக்கை!

## உங்கள் ஜலதோஷம் அபாயகரமாகக் கூடும்!

கடும் வியாதி ஆரம்பிக்கு முன்னரே, இந்த நல்ல, சக்தி மிகுந்த ஆயின்மெண்ட்டால், சளி உபாதைகளை ஒழியுங்கள்

2 விதங்களில் ஜலதோஷத்திலிருந்து நிம்மதி தருகிறது.



**1** மூக்கின் வழியாக வேலை செய்கிறது

நீங்கள் சுவாசிக்கும் பொழுதெல்லாம், விக்ஸ் வேபோரப்பின் தீவிர ஔஷத ஆவிகள் மூக்கிலும், தொண்டையிலும் உள்ள சளி உபாதைகளை சமனப்படுத்துகிறது.



**2** சருமத்தின் வழியாக வேலை செய்கிறது

விக்ஸ் வேபோரப்பின் சுகம் தரும் உஷ்ணம் சருமத்தினூடே சென்று, உங்கள் மார்பகத்தை உடைத்தெறிகிறது!







**விக்ஸ் வேபோரப்**

மார்பிலும், முதுகிலும், தொண்டையிலும் தேய்த்தாலே போதும்!

327 A TMI

---





# இதோ! பாமாலிவ்—

## இந்தியாவின் மிகப்பிரசித்தியுற்ற அழகுத் தைலங்களினுல் செய்தது

### உங்கள் வனப்பைக் காக்க

*இந்த இருகுண அழகு முறையை இன்றுமுதல் கையாளுக!*

1. சுத்தம் பெறுக பாமாலிவ்வின் நிறைந்த நுரையினுல், அது சருமத்தை அணைத்து அழுக்கை இருந்த இடம் தெரியாமல் அகற்றுகிறது.

2. அழகு பெறுக பாமாலிவ்வில் உள்ள சுத்தமான, மணக் கமழும் எண்ணெய்களைத் தேய்ப்பதன்மூலம், பாமாலிவ் உங்கள் சருமத்தை மிருதுவாக, வழ வழப்பாக, இளமை ததும்ப வைக்க உதவட்டும்.



# பாமாலிவ்

**பியூடி சோப்**

புதியது! நீடிக்கும், புஷ்பம்போன்ற புதுமை மணம்!

P6D/6/128

# சிம்பான்ஸி

டார்ஜான் என்ற ஆங்கிலப் படங்களில் 'சீட்டா' என்ற ஒரு குரங்கு பலவேடிக்கைகள் செய்வதைப் பார்த்திருப்பீர்கள். சில காலத்துக்கு முன்பு நமது தமிழ் சினிமா படமொன்றில்கூட 'ஜிப்பி' என்ற ஒரு குரங்கு நடித்ததை மறந்திருக்க மாட்டீர்கள். இந்த 'ஜிப்பி' அந்தச் சீட்டா எல்லாமே சிம்பான்ஸி என்ற குரங்கு இனத்தைச் சேர்ந்தவைதான்.

கொரில்லாவுக்கு அடுத்தபடியான உருவ அமைப்பும் அத்துடன் பலவிதங்களில் நெருங்கிய தொடர்பும் உடையது சிம்பான்ஸி. ஆப்பிரிக்காவின் அடர்ந்த காடுகளில்தான் இதுவும் வசிக்கிறது. வெகு காலம் வரையில் ஆராய்ச்சியாளர்கள் கொரில்லா, சிம்பான்ஸி இரண்டுமே ஒரே குரங்குக்குள்ள வெவ்வேறு பெயர்கள் என்று நினைத்து வந்தனர். பிறகு தான் இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் தெரிய வந்தது.

சிம்பான்ஸி கொரில்லாவைவிடக் கொஞ்சம் குட்டையானது. நன்கு வளர்ந்த 'சிம்ப்' ஐந்து அடிக்கு மேல் இருப்பதில்லை. இது கொரில்லாவைப் போல் பார்ப்பதற்கு அத்தனை கோரமாகவும் பயங்கரமாகவும் இருக்காது. கொரில்லாவைப் போல் மூர்க்க குணம் படைத்ததில்லை. சுலபமாகப் பழக்கி விடலாம். அதுவும் குட்டிகளில் இதை எடுத்து வளர்த்துப் பழக்கினால் ஆச்சரியமான முறையில் சகல விஷயங்களையும் கற்றுக் கொள்ளும்.

மனிதக் குரங்கு வகைகளிலேயே சிம்பான்ஸி தான் பார்ப்பதற்குக் கிட்டத்தட்ட மனிதனைப் போலக் காணப்படும். மிகுந்த புத்திசாலியானது. எதையும் சொன்னபடி கேட்கும் சுபாவமுடையது.



சிம்பான்ஸிகள் விளையாடுவது ரொம்பத் தமாஷாக இருக்கும். குட்டி 'சிம்ப்'கள் சாதுவானவை. அவைகளிடம் அன்பு பாராட்டி நல்லவிதமாக நடத்தினால் நாம் சொல்வது எதையும் சுலபமாகக் கற்றுக் கொண்டு விடும்.

ஆப்பிரிக்காவின் மத்திய பகுதிகளிலும், மேற்கு பகுதிகளின் உஷ்ணக் காடுகளிலும் சிம்பான்ஸி காணப்படுகிறது. அநேகமாக இவை தரையிலேயே தான் வசிக்கும். உணவுக்காகக் காய்கனிகளைப் பறிக்கவும் தூங்குவதற்கும்தான் மரங்களின் மீது ஏறும். குழந்தைகளின் பாதுகாப்புக்காக மரங்களின் மீது கிளைகள் இலை தழைகளைக் கொண்டு மேடை போல் அமைக்கும். சிறு சிறு கூட்டமாகத்தான் இவை வாழும். இவை போடும் கூச்சல் கர்ண கடூரமாக இருக்கும். பகல் வேளைகளிலும் இரவு நேரத்திலும் ஒன்றையொன்று இவை இத்தகைய விநோதமான சத்தத்தினால் கூவி அழைத்துக் கொண்டே இருக்கும்.

பழத் தோட்டங்களைக் கண்டு விட்டால் சிம்பான்ஸிகள் பெருங் கூட்டமாகச் சேர்ந்து கொண்டு படையெடுக்கும். தோட்டத்துக்குள் ஒரு கூட்டம் வயிறாரத் தின்று கொண்டிருக்கும் போது வெளியே ஒரு கூட்டம் காவல் காத்துக் கொண்டிருக்கும். யாராவது மனிதர்களோ மற்ற மிருகங்களோ தங்களைத் தாக்க வருவதை அறிந்ததும் உணவருந்திக் கொண்டிருக்கும் கூட்டத்துக்குச் சத்தமிட்டு எச்சரிக்கும். அந்தச் சத்தம் எப்படி இருக்கும் தெரியுமா? ஆபத்தில் சிக்கிக் கொண்டுள்ள மனிதன் எப்படி வேதனையுடன் ஓலமிடுவானோ அப்படி இருக்கும். இந்தச் சமிக்ஞையைக் கேட்டதும் தோட்டத்திலுள்ள சிம்பான்ஸிகள் நிமிஷத்தில் தோட்டத்தை விட்டு மறைந்து விடும்.

சிம்பான்ஸி மிக பலம் பொருந்தியது. மத்திய ஆப்பிரிக்காவில் வசிப்போர் இதன் பலத்தைப் பற்றிப் பலவிதமான கதைகள் சொல்லுகிறார்கள். இரண்டு பேர்கள் சேர்ந்து மிக்க சிரமத்துடன் வளைக்கக் கூடிய உறுதியான இரும்பை ஒரு சிம்பான்ஸி மிகச் சுலபமாக வளைத்து விடுமாம்.

சிம்பான்ஸி ஆபத்தான மிருகமல்ல. முதலில் இதைத் தாக்கினால்தான் இது தன்னைக் காத்துக் கொள்ளத் திருப்பித் தாக்கும். அப்போது மூர்க்கமாகப் போராடும். சில சமயங்களில் சிம்பான்ஸிகள் வேங்கை, சிறுத்தை இவைகளைக்கூடக் கடித்துக் குதறிக் கொன்று விடுமாம். அத்தனை உறுதியாகக் கடிக்கக் கூடியது. உடைகள் அணிந்து கொள்ளுவதில் இவற்றுக்கு மிகுந்த ஆசை உண்டு. —மூர்த்தி

# மூன்று நண்பர்கள்



வாண்டு மாமா

## 14. கிட்டு சிரித்தான்

ரங்கசாமி மணியின் வீட்டின் அருகே காரை நிறுத்தி, "மணி! நீ இங்கேயே இரு. இதோ வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனான்.

பட்டுவுடன் தனிமையில் விடப்பட்ட மணிக்கு இன்னமும் மௌனமாக உட்கார்ந்திருப்பது என்னவோ போலிருந்தது. "பட்டு! உன் உடல் நிலை இப்போது எப்படி இருக்கிறது?" என்று பேச்சைத் துவக்கினான்.

ஆயாசத்துடன் அரைக்கண் மூடிப் படுத்திருந்த பட்டு மணியைப் பார்த்துப் புன்சிரிப்புடன், "எனக்கு ஒன்றுமில்லை, மணி! உன் விஷயம் என்ன? மேற்கொண்டு நிலவறைக்குள் நீ பார்த்த அந்த மனிதரைப் பற்றி ஏதாவது தகவல் தெரியுமா? பிறகு ஏதாவது நடந்ததா?" என்று கேட்டாள்.

மணி போலியாகச் சிரித்தான். இதற்கு மேல் நடக்க என்ன இருக்கிறது என்று அவன் உள்ளம் எண்ணியதோ என்னவோ? "நீயும் கிட்டுவும் புலித்தேவன் தோப்புக்குப் போன பிறகு எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன. நேற்றைய இரவை நம் வாழ்நாளில் மறக்கவே முடியாது, பட்டு! ஆனால் எல்லாம் ஒழுங்காகி விட்டன. விவரமாகப் பிறகு சொல்லுகிறேன்" என்று கூறினான்.

பட்டுவுக்கு மயக்கம் தெளிந்ததே தவிர மருந்தின் காரம் இன்னும் அவள் உடலை விட்டுப் பூராவாக நீங்கவில்லை. தூக்கம் கண்களைச் சுழற்றியது. கொட்டாவியாக வந்தது. "கிட்டு வீட்டுக்குத் திரும்பிவிட்டானா?" என்று கேட்டாள் பட்டு. இதற்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் விழித்த மணியின் பார்வை வெளியே சென்றது. அங்கு அவன் வீட்டின் பின்புற வாசற்படியில் ரங்கசாமியோடு கிட்டு நிற்பதைக் கண்டதும் மகிழ்ச்சியும் திகைப்பும் ஒரே சமயத்தில் தோன்றத் திக்குமுக்காடிப் போனான் மணி.

தன் கேள்விக்குப் பதில் வராததைக் கண்ட பட்டு கண்களை அகலத் திறந்து, "என்ன மணி?" என்றாள். சட்டென்று தன் நினைவு பெற்ற அவன் "ஒன்றுமில்லை, பட்டு! உன் அண்ணா பத்திரமாக இருக்கிறான் வீட்டில்......நீ......அதிகமாகப் பேசாதே கண்களை மூடியபடி படுத்திரு. இதோ வந்து விட்டேன்" என்று கூறி எழுந்திருந்து நண்பன் கிட்டுவைச் சந்திக்கக் காரிலிருந்து கீழே இறங்கினான் மணி. இதற்குள் ரங்கசாமி காரை நோக்கி வரவே, "என்ன ரங்கசாமி?" என்று கேட்டான். அந்தக் கேள்வியில் கிட்டுவைப் பற்றி அவன் கேட்க நினைத்த அத்தனை விஷயங்களும் அடங்கி இருந்தன.

"நான் நினைத்தபடியே தான் நடந்திருக்கிறது. கிட்டு உன் வீட்டில், உன் படுக்கையில், நிம்மதியாக இரவு முழுதும் தூங்கிக் கொண்டிருந்திருக்கிறான்! உன் அம்மாவை எழுப்பித் தொந்தரவு கொடுக்க வேண்டாம் என்று நீ படுத்துக் கொள்ளும் அறை ஜன்னல் மீது நான் சிறு கற்களை எடுத்து வீசினேன். நான் சந்தேகப் பட்டபடியே கிட்டுவின் தலை எட்டிப் பார்த்தது!" என்றான் ரங்கசாமி தனது காரில் சாய்ந்தபடி நின்றுகொண்டே.

"உனக்கு எப்படி அவன் என் வீட்டில் இருப்பான் என்ற விஷயம் தெரிந்தது?" என்று கேட்டான் மணி.

"ஏதோ ஒரு சந்தேகம், அதையும் பார்த்து விடலாமே என்று முயற்சி செய்தேன். நினைத்தபடியே கிட்டு உன் வீட்டில் பத்திரமாக இருந்திருக்கிறான்" என்றான் ரங்கசாமி.

"ஏன், எப்படி?" என்று புரியாமல் குழப்ப நிலையிலிருந்த மணியின் தோளில் ஓங்கி ஒரு அடி விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பிய மணி அருகிலே கிட்டு சிரித்த முகத்துடன் நிற்பதைக் கண்டான்.

"என்னடா, சூரப்புலி! என்ன சமாசாரம்?" என்றான் கிட்டு.

"கேலி இருக்கட்டும், கிட்டு! இரவு நான் படுக்க வராததற்காக அம்மா என் மீது ரொம்பக் கோபமாக இருக்கிறாளா?" என்று கேட்டான் மணி.

"உன்னுடைய அம்மாவை நான் சந்திக்கவே இல்லையே?"

''என்ன—?'' கத்தி விட்டான் மணி.

''அப்படியானுல்...?''

''நான் எப்படி உன் அறையில் போய்ப் படுத்துக் கொண்டேன் என்று தானே கேட்கிருய்? புலித்தேவன் தோப்பிலிருந்து தோல்வியுடன் திரும்பும் வழியில் பட்டுவை வீட்டுக்குப் போகச் சொல்லி விட்டு நான் உன் அம்மாவிடம்போய், 'உன்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்' என்று சொல்லி விட்டு வரலாம் என்று உன் வீட்டுக்கு வந்தேன். கதவைத் தட்டலாமென்று கை வைத்த போது கதவு தாஞகத் திறந்து கொண்டு விட்டது...''

நான் எங்கேயாவது வெளியில் சென் றிருந்தால் அம்மா கதவைத் தாளிடமாட் டாள். வெறுமனே சாத்திதான் வைத் திருப்பாள். அவள் அயர்ந்து தூங்குவதே இடையாது'' என்ருன் மணி.

'மெள்ள உள்ளே நுழைந்த என்னை அதட்டிக் கேட்கவும் ஆளில்லாதுபோகவே ஒரு வேளை உன்னை எதிர் கொண்டழைத்து வரவேற்பளிக்க உன் அம்மா உன் அறையில் இருக்கலாம் என்று மெதுவாக உன் அறைக்குள் புகுந்தேன் உன் அம்மா இல்லை உன் படுக்கையைப் பார்த்ததும் எனக்குத் தூக்கம் கண்களைச் சுழற்றியது. என் படுக்கையை விட உன் படுக்கையில் சுகமான தூக்கம் கிடைக்கும் என்று எண்ணி அங்கேயே படுக்கத் தீர்மானித்த போது உன் அம்மாவின் குரல் கேட்டது. 'ஏ தறிதலை! ஏண்டா இத்தனைநேரம்?மணி என்ன தெரியுமா?' என்ருள். குரல் ஒலித்த விதத்திலிருந்து உன் அம்மா எங்கோ சற்றுத் தள்ளிப் படுத்திருக்கிருள் என்பதை யூகித்துக் கொண்டேன். உன்னைப் போலவே குரலை மாற்றிக் கொண்டு ஏதோ பதில் சொன்னேன். உன் அம்மா எழுந்து வராமலேயே 'சரி! சரி! படுத்துக் கொள். காலையில் பேசிக் கொள்கிறேன்' என்ருள்.

படுத்ததுதான் தெரியும், சொகுசான மெத்தை, சுகமான தூக்கம்! அது சரி, வீரரே! நீர் இரவு என் வீட்டில் நன்ருகத் தூங்கினீரா?'' என்று கேட்டான் கிட்டு.

மணியும் ரங்கசாமியும் ஒருவரையொரு வர் அர்த்த புஷ்டியுடன் பார்த்துக் கொண்டு முறுவலித்தார்கள். அதே சம யம் இத்தனை நேரம் தன்னை மறந்த உத் சாகத்தில் பேசிக் கொண்டிருந்த கிட்டு வின் கவனம் மோட்டாரின் பின் சீட்டில் பதிந்தது. அங்கே அசையாமல் பேசாமல் படுத்துக் கொண்டிருந்த தன் தங்கை பட்டுவைக் கண்டதும், அவன் முகம் சாக்பீஸாக வெளுத்துப்போய் விட்டது

''பட்டு...!' என்று கத்தி விட்டான்

''கிட்டு பதருதே...பட்டுவுக்கு ஒன்று மில்லை. வீட்டுக்குப் போகும் வழியில் உனக்கு எல்லாம் விவரமாகச் சொல்லு கிறேன் நீ குறட்டை விட்டுக் கொண்டு தூங்கியபோது மணி வெடிகுண்டைத் தூக்கிக் கொண்டு ஓடிஞன்'' என்ருன் ரங்கசாமி கண் சிமிட்டியபடி.

இமைகளை மூடியபடி சித்திரம் போலப் படுத்திருந்த தன் தங்கையின்மீது பதித்த பார்வையைச் சிறிதும் திருப்பாமலேயே கிட்டு பேசிஞன்.

''வெடிகுண்டா? என்னடா, மணி? விளக்கமாகத்தான் சொல்லேன்'' என் ருன். அவன் குரலில் கவலையும் கலவர மும் கலந்திருந்தன.

மணி இடுக்கிட்டுத் தான் விழித்துக் கொண்டதிலிருந்து வெடிகுண்டை வீசி எறிந்ததுவரையில் எல்லா விஷயங்களையும்



கீழேயுள்ள படத்தில் ஆறு கண்ணாடித் தம்ளர்கள் இருக்கின்றன, இல்லையா? அதில் மூன்று தம்ளர்களில் தண்ணீரும், மூன்று காலியாகவும் இருக்கின்றன. இப்போது இவைகளை, ஒரு தண்ணீருள்ள தம்ளரும் ஒரு காலித் தம்ளருமாக மாற்றி மாற்றி வரும்படி அமைக்க வேண்டும். என்ன பிரமாதம் என்கிறாயா? நிபந்தனை ஒன்றிருக்கிறது. அதைக் கேட்டு விட்டுப் பிறகு சொல். மாற்றி அமைக்கும்போது ஏதாவது ஒரு தம்ளரைத் தான் தூக்கவோ, தொடவோ, நகர்த்தவோ செய்ய லாம். இப்போது சொல், முடியுமா?




விஸ்தாரமாகச் சொன்னான் தன் நண்பன் கிட்டுவிடம்

டைம் பாம்' பற்றிச் சொன்னதுமே 'அடப் பழி' என்ற கிட்டு, மணி தன் கதையை முடித்ததும் வயிற்றைப் பிடித்துக் கொண்டு விழுந்து விழுந்து சிரித்தான். தங்கை பட்டுவுக்கு நேர்ந்த விபத்தை எண்ணி ஏற்பட்ட அதிர்ச்சியில் திடீரென்று அவன் மூளை கலங்கிவிட்டதோ என்று பயந்து போய் விட்டார்கள். மணியும ரங்கசாமியும். சிரித்துச் சிரித்து இனி சிரிக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டதும் கிட்டு, "டேய், மணி! 'அரண்டவன்கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்ற பழமொழியைக் கேட்டிருக்கிறேன். ஆனால் பலே சூரன் என்று வீரம் பேசும் நீ கூட ஏமாந்து விட்டாயேடா!" என்றான்.

'ஏமாந்தேனா? யார் நானா? என்னடா பேத்தறெ?" என்றான் மணி

'பேத்தல்லெ, பிரதர்! நீதான் பதற்றத்திலே பட்டாசை, 'பாம்' என்று நினைத்துப் பீதியடைந்து போய் விட்டாய்!"

பட்டாசா? டேய் கிட்டு உனக்கு மூளை ஒன்றும் கலங்கிவிடவில்லையே புலித்தேவன் தோப்புப் பங்களாவைப் போய்ப் பாரு. அப்போ தெரியும், நான் தூக்கிக் கொண்டு போனதும், வீசி எறிந்ததும் வெடிகுண்டா இல்லெ பட்டாசா என்று."

'ஆமாம் கிட்டு. அந்தச் சதிகாரர்களின் கார் அப்படியே வெடித்துப் புரண்டு தீப் பிடித்துப் பஸ்பமாகிப் போய் விட்டதே!" என்றான் ரங்கசாமி.

"பட்டாஸ் பெட்டின்னு அதிலிருந்து 'டிக் டிக்' என்ற கடிகார ஒலி வருவானேன்? சந்தேகமே இல்லாமல் அது 'டைம் பாம்'தான் அதைப்பற்றி 'பூனை வாத்தியார்' சொல்லி இருக்கார். எனக்கு நன்னா ஞாபகம் இருக்கு" என்று அடித்துப் பேசினான் மணி நிதானமாக.

"அதிலிருந்து 'டிக் டிக்' ஒலி வந்ததற்குக் காரணம் அதனுள் ஒரு ஓடிசல் 'அலாரம் டைம்பீஸ்' கிடந்தது தான்" என்றான் கிட்டு.

"என்ன...... என்ன?" என்று குழப்பத்துடன் கேட்டான் மணி.

'விவரமாகச் சொன்னால்தான் உனக்கு விளங்கும் என் வீட்டிலுள்ள சாமானைப் பற்றி எனக்குத் தானே தெரியும் அது ஓட்டை, உடைசல், தேவையற்ற சாமான்களைப் போட்டு வைக்கும் பெட்டி. அதில் இல்லாத பொருளே கிடையாது. குண்டூசியிலிருந்து ஸ்குரு, நட், ஆணி, இப்படிப் பல பொருள்களும் கிடக்கும். தீபாவளிக்கு வெங்காய வெடி வாங்கினேன். பட்டாணி வெடி, மாப்பிள்ளை வெடி என்று கூடச் சொல்வார்களே. ஆள்மீது தூக்கி எறிந்தால் 'படார்' என்று வெடிக்குமே! அதில் கொஞ்சம் கார்த்திகைக்கு இருக்கட்டும் என்று ஒரு பொட்டலத்தில் கட்டி அதற்குள் வைத்திருந்தேன். நேற்றுக்காலையில்தான், என் அறையில் உள்ள அலாரம் டைம்பீஸ் மக்கர் செய்யவே அதை ரிப்பேர் செய்ய நினைத்தேன். 'நம்ம 'மெக்கானிசம்' அதற்குப் புரியவில்லை. கோபத்துடன் அதையும் அந்தப் பெட்டிக்குள் தூக்கிப் போட்டேன். அதுதான் அப்படிக் கோபித்துக் கொண்டு 'டிக் டிக்' ஒலி எழுப்பியிருக்கும். அதில் இருந்த பழைய மின்சாரக் கம்பிகளையும் 'டிக் டிக்' ஒலியையும் ஒன்று சேர்த்துப் பெட்டிக்குள் இருப்பது 'டைம் பாம்' என்று முடிவு கட்டிவிட்டாய். நம் நாட்டிலாவது டைம் பாமாவதடா? இன்னும் அந்தளவுக்கு நாம் முன்னேறவில்லை, தம்பி! உன் மாமாவைச் சந்தித்தது. கத்தி பாய்ந்தது ஆகிய இந்தக் கலவரத்திலும் பீதியிலும் உன் மூளை ரொம்பத் தீவிரவேகத்திலே பலவிதமாக எண்ண ஆரம்பித்து விட்டது" என்றான் கிட்டு.

"அப்படியானால் கார் வெடித்துத் தீப் பற்றி எரிவானேன்?" என்றான் மணி.

"பெட்டிக்குள்ளேதான் வெங்காய வெடிப் பொட்டலம் இருந்தது என்றேனேடா, மறந்து விட்டாயா?"

'அப்படியும்இருக்கலாமோ? பீதியில்நாம் தான் வெறும் சாமான் பெட்டியை 'டைம்பாம்' என்று பிரமாதப்படுத்தி விட்டோமோ?" மணிக்கு எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. இரவு முழுதும் தூங்காத அசதி தலையை வலித்தது. (தொடரும்)

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

DCG/24 R2

---

# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!

CCHO/C/3

# உங்கள் அழகே உங்களுக்கு ஆபரணம்...;

## உங்கள் முக சருமத்தை மென்மையாயும் அழகாயும் வைக்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

## உபயோகியுங்கள்

மிருதுவானதும், குளுமையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்பு அளித்து, அதை அழகுடனும், இளமையுடனும் வைக்கும்! இது எண்ணெய்ப் பசையற்றது. மற்றும் முகத்தில் தடவிய சிற்சில விநாடிகளில் மறைந்து விடுகிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.



### சருமத்தை சுத்திகரிக்கும் அற்புதமான க்ரீம்

தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் முகத்தில் தடவுங்கள். அது சருமத்தை சுத்தம் செய்து, சருமம் மிருதுத்தன்மையற்றுப் போவதையும், சருமத்துவாரங்கள் வரண்டு போவதையும் தடுக்கிறது. அத்துடன் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உபயோகித்து, உங்கள் அழகுக்கு தகுந்த பாதுகாப்பு அளியுங்கள்.




### இலவசப் புத்தகம்

"LOVELIER WITH POND'S" என்ற அழகு இலவச புத்தகத்தை வரவழையுங்கள். இதில் அழகு பராமரிப்புக்கு உபயோகமான குறிப்புகள் அடங்கியுள்ளன. பி. ஓ. பாக்ஸ் 1612, [illegible] 1 என்ற விலாசத்திற்கு [illegible] அனுப்புங்கள்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

வெள்ளித் திரை

# பாபி

காந்தன்

குடும்பத்துக்கேற்ற குதூகலக் கதைப் போக்கைக் கொண்ட ''குலதெய்வம்'' படம் ஏ. வி. எம். புரொடக்‌ஷன்ஸுக்கு அமோக வெற்றியைத் தேடித்தந்தது.

இப்பொழுது அதே படத்தை ஏ. வி. எம். புரொடக்‌ஷன்ஸ் ''பாபி'' (அண்ணி) என்ற பெயரில் ஹிந்தியில் தயாரித்திருக்கிறார்கள். தமிழ்ப் படத்தை டைரக்ட் செய்த கிருஷ்ணன் — பஞ்சுதான் இந்தப் படத்தையும் டைரக்ட் செய்திருக்கிறார்கள்.

''குலதெய்வம்'' என்ற படத்தின் பெயரைத்தான் ''அண்ணி'' என்று மாற்றியமைத்திருக்கிறார்கள்.

''குலதெய்வ''த்தில் சாந்தாவாக நடித்த பண்டரிபாய் ஹிந்தியிலும் அதே பாத்திரத்தை ஏற்று நடிக்கிறார். தமிழைப்போலவே ஹிந்தியிலும் சரளமாகப் பேசி மிகவும் அழகாக நடித்திருக்கிறார்.

தமிழ்ப் படத்தில் எஸ். வி சஹஸ்ரநாமம் ஏற்று நடித்த மூத்த சகோதரன் பாகத்தைப் பிரபல ஹிந்தி நடிகரான பால்ராஜ் ஸாஹினி ஏற்றிருக்கிறார். பாவம் ததும்ப அவர் பேசும் ஒவ்வொரு வார்த்தையும் செவியில் இன்னும் ஒலிக்கிறது. அவருடைய உருக்கமான நடிப்பு எல்லோரையும் உருக்குகிறது.

மூத்த சகோதரனுக்கு அவ்வளவு நல்ல நடிகரைப் போட்டு விட்டு மற்றச் சகோதரர்களுக்கு உதவாக்கரை ஆட்களைப் போட்டிருப்பது வருந்தத் தக்கது மட்டுமல்ல; வெட்கப் பட வேண்டியதுமாகும்.

சிறுவன் மீட்டுவாக நடிக்கும் பேபி டெய்ஸி இரானியின் நடிப்பு பிரமாதம்.

நன்றியுள்ள நாயின் பாகத்தை ஏற்று நடிக்கும் நாய் பிரமாதமாக நடித்திருக்கிறது. கொட்டும் மழையில், இரவு நேரத்தில், தெருவில் விழுந்துவிட்ட எஜமானனுடைய கைப்பிரம்பைக் கவ்விக் கொண்டு வீட்டுக்கு வந்து நிகழ்ந்ததை அறிவித்து, வாயில் அரிக்கேன் விளக்குடன் அவர்களுக்கு வழி காட்டிய நாயின் திறமையான நடிப்புக்கு ரசிகர்களின் கரகோஷம் அமோகமாகக் கிடைக்கிறது.

''குல தெய்வ''த்தில் வரும் கட்டபொம்மன் நாடகத்தில் சந்திரபாபுவை மறக்க முடியாது. ஹிந்தியில், அந்த நாடகத்துக்குப் பதிலாக ''லைலா—மஜ்னூ'' காட்டப்படுவது அதிசயம்தான்! ஹிந்தி ஹாஸ்ய நடிகர் ஆகா லைலாவாக வருகிறார். எல்லோரும் சிரிக்க வேண்டும் என்பதற்காக அவர் என்னென்னவோ கோணங்கிச் சேஷ்டைகள் செய்கிறார். ஆனால் யாரும் சிரிக்கவில்லை! ஆகா! அதற்கு ஆகா என்ன செய்வார்?

''குலதெய்வம்'' படத்தின் பாடல்கள் நினைவில் நின்ற மாதிரி ''பாபி''யின் பாட்டுக்கள் இல்லை. ஆனால், படத்தயாரிப்பு, ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு எல்லாம் குறைகூற இடம் வைத்துக் கொள்ளவில்லை.

தமிழ்ப் படத்தின், தமிழ் நடிகர்களின் உயர்வை எடுத்துக் காட்டும் இந்த ஹிந்திப் படத்தை மனப்பூர்வமாய் வரவேற்கிறேன்!

# வாழ்க



டாரிப் கமிஷன் நிர்வாக அதிகாரி ஸ்ரீ டி. கே. எஸ். மணி அவர்களின் புதல்வி சௌ. மாலதிக்கும் திரு எம். வி. நடேசனுக்கும் பம்பாயில் திருமணம் நடந்தது.



ஆந்திர சர்வகலாசாலை ஆங்கிலப் பேராசிரியர் திரு கே. ஆர். சீனிவாச அய்யங்காரின் புதல்வி சௌ. பிரேமாவுக்கும் திரு எம். எஸ். நந்தகுமாருக்கும் விவாகம் நடந்தேறியது.



ஸாஹு-எண்டர்ப்ரைஸைச் சேர்ந்த ஸ்ரீ ராஜகோபாலய்யர் குமாரி சௌ. சகுந்தலாவுக்கும் திரு ஜி.வி. ஜயராமன் எம். ஏ.க்கும் திருமணம் நடந்தது.



யாழ்ப்பாணம் எழுத்தாளர் திரு தேவன் அவர்களின் சகோதரி இ. சோமாம்பிகைக்கும் திரு கணேஷனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



திருவல்லிக்கேணி சரஸ்வதி கான நிலையம் பிரின்ஸ்பால் திருமதி கே. லலிதா அவர்களின் மாணவி சௌ. சங்கநாயகியைத் திரு ஜயராமன் மணந்தார்.



பிரின்ஸ்பால் திருமதி கே. லலிதாவின் மாணவி சௌ. சகுந்தலாவுக்கும் திரு பி. ராமச்சந்திரனுக்கும் அதி விமரிசையாக விவாகம் நடைபெற்றது.

# மணமக்கள்



டி. ஜே. மேர் கம்பெனியைச் சேர்ந்த திரு பி. ஜே. செல்வராஜுக்கும் சௌ. சந்திராபாய்க்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது.



மட்டக்களப்பு சிவானந்த வித்தியாலய ஆசிரியர் திரு எஸ். வி. கணபதிப் பிள்ளை அவர்களுக்கும் சௌ. சுந்தரலட்சுமிக்கும் திருமணம் நடைபெற்றது.



பம்பாய் லைப் இன்ஷுரன்ஸ் கார்ப்பரேஷன் உதவி அதிகாரி திரு எஸ். நாராயணனுக்கும் சௌ. சம்பாவுக்கும் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.



ஆம்பூர் கன்கார்டியா உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் திரு எஸ். டி. வி. நரசிம்மனுக்கும் சௌ. சந்திர பிரபாவுக்கும் பொள்ளாச்சியில் திருமணம் நடந்தது.



நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனைச் சேர்ந்த திரு எஸ். வெங்கட சுப்பிரமணியனுக்கும் சௌ. சீதாலட்சுமிக்கும் திருமணம் நடைபெற்றது.



கல்கத்தா பர்ன் அண்ட் கம்பெனி ஸ்ரீ டி. ஆர். எஸ். மணி அவர்களின் புதல்வி சௌ. அன்னபூர்ணாவுக்கும் திரு வி. ராஜாமணிக்கும் விவாகம் நடந்தேறியது.

# பொங்கிவரும்

நான்காம் அத்தியாயம்

## குற்றச்சாட்டு!

பிரான்ஸ் தேசத்திலே மக்களின் நலனில் அக்கறையில்லாமல் மன்னர்கள் கொடுங்கோல் ஆட்சி நடத்திய போது, பசியினல் வாடி வருந்திய பிரஜைகள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அரண்மனைக்கு முன்னல் போய் நின்று கூக்குரலிட்டார்கள்.

ராணி 'மேரி அன்டோனியட்'டினல் அந்தக் கூச்சலைச் சகிக்கவே முடியவில்லை. அருகே இருந்த சேவகனைக் கூப்பிட்டு, "ஏன் இப்படிக் காட்டுக் கத்தலாகக் கத்துகிருர்கள்?" என்று கேட்டாள்.

"அவர்களுக்குப் பசிக்கிறது, மகாராணி! அதனல்தான் கத்துகிருர்கள்" என்ருன் அந்தச் சேவகன்.

ராணி சிரித்தாள்: "அட அசட்டு ஜனங்களே! பசிக்கிறது என்ருல் சாப்பிட வேண்டியது தானே? இதற்குப் போய் இப்படிக் கத்துவார்களோ?" என்று கூறினள்.

சேவகனல் புன்சிரிப்பை அடக்க முடியவில்லை. "மன்னிக்க வேண்டும், மகாராணி! அவர்களுக்கு உண்பதற்கு ரொட்டி இல்லையே?" என்ருன்.

"பூ! ரொட்டி இல்லா விட்டால் 'கேக்' சாப்பிட்டால் போகிறது! இது கூடத் தெரியால் அமர்க்களம் பண்ணுகிருர்களே? முட்டாள் ஜனங்கள்!" என்ருன் அந்தக் கெட்டிக்கார ராணி.

அதற்கு மேல் அவளிடம் பேசினல் தனக்குப் பைத்தியம் பிடித்து விடும் என்று பயந்து ராணி சொன்னதை அப்படியே ஒப்புக் கொண்டு போய் விட்டான் சேவகன்!

சுகுமாரனைப் பற்றி நினைத்தபோதெல்லாம் மணிசேகரனுக்கு இந்தக் கதைதான் நினைவுக்கு வந்தது. கதையில் கண்டது போல அவ்வளவு மோசமான நிலையில் அவர்கள் இல்லை. அகோரப் பசிக்காகப் போராடா விட்டாலும் கொள்கைகளுக்காகவும் நீதி, நேர்மைக்காகவும் போராட நினைத்தார்கள். அதைப் பற்றிப் பேசினல் சுகுமாரன் அந்த ராணியைப் போலத்தான் எதையும் புரிந்துகொள்ளாமல் பதிலளித்தார்.

'அறிவு கெட்ட மனிதர்! போகும் போது பின்னேடு கட்டி எடுத்துக் கொண்டா போகப் போகிருர்?' மனத்துக்குள் நினைத்தபடியெல்லாம் சுகுமாரனை அன்பு மேலீட்டினல் திட்டினன் மணி. 'அவருடைய நன்மைக்குத்தான் சொல்கிறேன் என்பதைப் புரிந்து கொள்ளாமல் என்னை விரட்டி விரட்டி அடித்தார். பிரச்னைகளைப் பற்றி யோசித்தே பார்க்காமல் எரிந்து விழுந்தார். அதன் பலன் இன்று ஸ்டுடியோவே தீப்பற்றி எரியப் போகிறது. தொழிலாளர்களில் ஆத்திரம் கொண்ட எவனே ஒருவன் ஸ்டுடியோவுக்கே நெருப்பு வைக்க முயன்று விட்டான்!'

திரைப் படங்கள் உருவாகும் 'ஸ்டேஜ்'களில் ஒன்றுக்குத் தீ வைத்து விட்டு ஓடும் அந்த உருவத்தைப் பின் தொடர்ந்து சென்று பிடிப்பதா? அல்லது நீண்டு வளரும் தீ நாக்குகள் ஸ்டுடியோ முழுதையுமே சாம்பலாக்குவதற்கு முன்னர் அதை அணைப்பதில் தன் கவனத்தைச் செலுத்துவதா?

மணி அதிக நேரம் தயங்கவில்லை. நெருப்பை அணைப்பதுதான் தன் முதல் கடமை என்ற முடிவுக்கு வந்தான் அவன். சுவரில் மாட்டப்பட்டிருந்த தீயணைக்கும் கருவியை எடுத்து வந்து உபயோகித்த பின்னர் போதாக்குறைக்கு இரண்டு வாளி மண்ணையும் தண்ணீரையும் கொண்டு வந்து கொட்டிக் காலாலும் மிதித்து, தீ நன்ருக அணைந்து விட்டது என்று நிச்சயப்படுத்திக் கொண்டான்.

அதற்குப் பிறகுதான் ஓடிச் சென்ற ஆசாமியைப் பற்றி நினைக்கத் தோன்றியது. ஸ்டுடியோவை இரண்டு முறை சுற்றி வந்தும் ஒருவரையும் காணமல் போகவே துயரத்துடன் பழைய இடத்துக்கே வந்து நின்ருன்.

'இந்தப் பயல்களுக்கும் மூளையே கிடையாது! இப்படியா வெறிச் செயல்களில் ஈடுபடுவது? நாளைக்கு இதைச் சாக்கிட்டு எல்லோரையுமே வீட்டுக்கு அனுப்பி விடுவாரே சுகுமாரன்? அப்



# பெருநிலவு

போது எந்த முகத்தைக் கொண்டு அவரிடம் உரிமை பற்றிப் பேசுவது? நியாயம், நேர்மை, நீதி என்றெல்லாம் வாதாட முடியுமா? இந்தச் செயலில் ஈடுபட்ட மனிதனை யாவது பிடித்து விட்டேனானால் அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கச் செய்யலாம், மற்றவர்கள் பிழைப்பார்கள். இல்லையானால் எல்லோருக்குமே ஆபத்துத்தான் !'

கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு குனிந்த தலைநிமிராமல் சுற்றிச் சுற்றி வந்து யோசித்தான் மணி. 'போலீஸ்'க்குத் தெரிவிப்பதா? வேண்டாமா? சுகுமாரனுக்கு உடனே டெலிபோன் செய்து விஷயத்தைச் சொல்ல வேண்டுமா? அல்லது ஒரேயடியாக எல்லாவற்றையும் மூடி மறைத்து விடுவதா?' தரையைப் பார்த்துக் கொண்டே நடந்த மணி, அங்கே நிலவொளி பட்டு மின்னிய ஒரு கறுப்புக் கண்ணாடியைப் பல முறை கவனித்தான். கீழே விழுந்த அதிர்ச்சியில் கூட்டிலிருந்து சிறிது வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது அது. சிந்தனையில் ஈடுபட்டிருந்த மணிக்குப் பளபளக்கும் அந்தப் பொருளை நான்காவது முறையாகப் பார்த்தபோது தான் அதைக் கையில் எடுக்க வேண்டுமென்று தோன்றியது.

அந்தக் கறுப்புக் கண்ணாடி யாருடையது என்று உணர்ந்து கொண்டதும் ஏற்பட்ட அதிர்ச்சியில் தேள் கொட்டியவன் போல் கையை உதறி அதை நழுவ விட்டான் அவன்.

சற்று நிதானப் படுத்திக் கொண்டு அதை மறுபடியும் கையிலெடுத்தான். அவசரம் அவசரமாக ஆபீஸ் அறைக்குள் சென்று சுகுமாரனை டெலிபோனில் கூப்பிட்டான். அவர் வீட்டில் இல்லை என்று அறிந்ததும் மல்லிகாவின் வீட்டுக்கு போன் செய்தான். அங்கேயும் அவரைக் காணவில்லை என்று அறிந்ததும் தன் ஜாகைக்குத் திரும்பி நிம்மதியாகப் படுத்துத் தூங்கினான்

இரவு நீண்ட நேரம் கண்விழித்ததால், மறுநாள் காலையில் நேரம் கழித்தே எழுந்தான் மணிசேகர

எழுந்ததும் விடுவிடென்று அவன் ஸ்டுடியோவை அடைந்த போது சுகுமாரன் தம்முடைய அறையில் இருந்தார்.

கி. ராஜேந்திரன்

அவருடன்கூட மல்லிகாவும் சேகரும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

உள்ளே நுழைந்த அவனை ஏற இறங்கப் பார்த்தார் சுகுமாரன்.

"இத்துடன் பத்து தடவைகள் உன்னை அழைத்து வருவதற்கு ஆள் அனுப்பி விட்டேன், தெரியுமா? இவ்வளவு நேரம் கழித்தா வருவது?"

"நேற்று இரவு வீட்டுக்குத் திரும்ப ரொம்ப நேரம் ஆகிவிட்டது, ஸார்!" என்ருன் மணி பரிதாபமாக.

"ஓ! அப்படியா? நேரமாகும்படி இங்கே என்ன வேலே? உன்னுடைய வழக்கமே அதுதானே? இருக்க வேண்டியபோது இங்கே இருப்பதில்லை. தேவையில்லாத சமயங்களில் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாய்! ஒருவேளை யூனியனில் கூட்டம் நடத்தினீர்களோ? யூனியன் அப்பால் போனதும் எலிகள் சேர்ந்து கூட்டம் போட்டுக் கொட்டம் அடித்தனவோ?" என்று கேட்டுக் கேலிச் சிரிப்பு சிரித்த சுகுமாரன், சேகர் பக்கமாகத் திரும்பினுர். "சேகர்! இவனைத் தெரியுமல்லவா? ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் இவனிடம். இவன்தான் சர்வ வல்லமையுள்ள மகாகனம் பொருந்திய யூனியன் தலைவர் அவர்கள்!" என்ருர்.



"அப்பா! அவர் பொறுமையாக இருக்கிருர் என்பதாலேயே அதிகமாகக் கேலி செய்து சோதிக்கிறீர்கள். எனக்குக்கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை" என்ருள் மல்லிகா.

நன்றி நிறைந்த கண்களால் அவளை ஏறிட்டுப் பார்த்தான் மணி.

"மல்லிகா! உனக்கு இவர்களைப் பற்றி ஒன்றும் தெரியாது, அம்மா! என்ன செய்தாலும் குறைப்பட்டுக் கொண்டேதான் இருப்பார்கள். திருப்தியே இல்லாத ஜனங்கள்.

"அயர்லாந்திலே ஒரு சமயம் என்ன நடந்ததாம் தெரியுமா? மக்களுக்கு நன்மை புரியும் நோக்கத்தோடு பஸ் கட்டணத்தைச் சரிபாதியாகக் குறைத்தார்களாம். உடனே அதற்குப் பெரிய கிளர்ச்சியும் போராட்டமும் நடந்தனவாம். 'இது என்ன அசட்டுத்தனம்? பஸ் கட்டணத்தைக் குறைத்தால் சந்தோஷப் படுவதை விட்டுப் போராட்டம் நடத்துவானேன்?' என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா? அதைக் கேட்டதற்கு என்ன பதில் சொன்னர்களாம் தெரியுமா? 'முன்பு நடந்து சென்ருல் மிச்சம் பிடித்த தொகையில் பாதி அளவுக்குத்தானே இப்போது மிச்சம் பிடிக்க முடியும்?' என்று புலம்பினர்களாம்! எப்படி இருக்கிறது கதை?

"அதைப் போலத்தான் இவர்களுடைய போராட்டமும். அர்த்தமற்ற பிதற்றல்! நான் வேலையை விட்டு அனுப்பிய காமிராமேனே அதைப் பற்றிக் கவலைப்படுவதாகக் காணும். இவர்களுக்குப் பொத்துக் கொண்டு வந்து விட்டது. யூனியனில் சேர்ந்துள்ள ஒருவனை அநியாயமாக வீட்டுக்கு அனுப்பி விட்டேனும். இரவு முழுதும் ரகசியமாய்க் கூட்டம் போட்டு ஆலோசிக்கிருர்களாம். மறுநாள் நேரம் கழித்து வேலைக்கு வருகிருர்களாம்!"

மணி பதில் பேசவில்லை. அவனுடைய மௌனம் தன்னுடைய வெற்றியாகக் கருதிய சுகுமாரன், பேசிய ஆயாசம் தீர நாற்காலியைச் சுவரில் பதியுமாறு பின்னல் சாய்த்துக் கொண்டார்.

"முடித்து விட்டீர்களா?" என்று கேட்டான் மணி.

சுகுமாரன் சடாரென்று நிமிர்ந்து உட்கார்ந்தார். அவனுடைய துணிச்சல் அவருக்கு வியப்பையளித்தது. "இல்லை, மணி! இன்னும் முடிக்கவில்லை. நாளைக்கு நானும் மல்லிகாவும் சேகரும் பம்பாய்க்குப் புறப்படுகிருேம், ஹிந்திப் படத்தின் வெளியீட்டுக்காக. நான் திரும்பும் வரை இங்கே எந்தவிதமான சலசலப்பும் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு. ஏதாவது தாறுமாருக நடந்து கொண்டார்களானுல் உன்னைத்தான் கேட்பேன் ஜாக்கிரதை!" என்ருர்.

"இப்போது நான் பேசலாமா?" என்று கேட்டான் மணி.

மேஜையை ஓங்கி அறைந்தார் டைரக்டர் சுகுமாரன். "உனக்கு வர வரத்

யிர் அதிகமாகிக் கொண்டே வரு கிறது. நீ பேசுவதற்கு என்ன இருக் கிறது?" என்று கேட்டார்.

"நிறைய விஷயங்கள் இருக்கின்றன. நீங்கள் சொன்னது போல் நேற்று இரவு யூனியன் கூட்டம் எதுவும் நடக்கவில்லை. நேற்று இரவு இங்கேதான் என் அறை யில் நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தேன். உங்கள் மீதுள்ள அன்பினாலும் அபிமா னத்தினாலும் அடையாள வேலை நிறுத் தம் நடைபெற்றதில் வருத்தமடைந்து உட்கார்ந்திருந்தேன். ஸ்டூடியோவில் இப்போது நிலவி வரும் சூழ்நிலைக்கு நீங்கள்தான் காரணம் என்பதை எப்படி உணரச் செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

"நேற்று இரவு மட்டும் நான் இங்கு இல்லாமல் இருந்திருந்தால் இந்த ஸ்டூ டியோ சாம்பலாகி யிருக்கும்."

"என்ன? என்ன?" என்று மூவரும் ஒரே சமயத்தில் கேட்டார்கள்.

"நேற்று இரவு ஸ்டூடியோவுக்குத் தீ வைக்க முயற்சி நடந்தது என்கிறேன்."

சுகுமாரன் நாற்காலியை விட்டு எழுந்து வந்தார். "அயோக்கியப் பயல்கள்! அப்படியா செய்தார்கள்? யூனியனில் சேர்ந்த ஒவ்வொருவர் பெய ரையும் போலீஸ்"க்குக் கொடுத்து விசா ரிக்கச் செய்கிறேன் பார்! அத்தனை பேரையும் உடனே வேலையை விட்டு நீக்கி விடுகிறேன்!"

"நான் ஒருவன் இருக்கும் வரை அப்படியெல்லாம் நடக்க முடியாது" என்றான் மணி, அனல் தெறிக்க.

"யாரோ ஒருவன் செய்த குற்றத்துக் காக அனைவரையும் பழி வாங்க நான் அனுமதிக்க மாட்டேன். இந்த இழி செயலில் ஈடுபட்டது யார் என்பது எனக் குத் தெரியும். அவனைக் கொண்டு வந்து உங்கள் எதிரே நிறுத்துகிறேன். அவனைத் தண்டியுங்கள். வேண்டுமானால் வேலையை விட்டும் அனுப்புங்கள். சரி தானே?" என்றான்.

சுகுமாரன் பதில் பேசவில்லை. சட் டைப் பையைத் துழாவிச் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தார்.

மணிசேகரனின் கண்கள் குறுகின. நாசிகள் அகன்று அதிகமான காற்றை உள்ளுக்கு இழுத்தன. "தீ வைக்க முயன் றது யார் என்று சொல்லட்டுமா?" என்று கேட்டுக் கொண்டே சுகுமாரனை நெருங்கி நெருங்கி வந்தான்.

மல்லிகா முகவாயில் கையைவைத்துப் பற்களால் விரல்களைக் கடித்துக் கொண்டு ஒரு விதப் பயத்தோடு மணி யைப் பார்த்தாள்.

சேகர் கழுத்தைநீட்டி மணி சொல்லும் வார்த்தைகளில் ஒன்றைக்கூடக் கேட்கா மல் இருந்து விடக் கூடாது என்பதற் காகக் காதைத் தீட்டி வைத்துக் கொண்டு காத்திருந்தான்.

சுகுமாரன் தான் பற்ற வைத்த சிக ரெட்டைத் திருகி அணைத்தார்.

அவருக்கு மிக அருகே வந்து விட்டான் மணி. ஆள் காட்டி விரலை அவர் மார்பின் ஐந்து முறை இலேசாகக் குத்தினான்.

"நீங்கள்தான் அந்தப் படுபாதகமான செயலைப் புரிந்தீர்கள் என்று குற்றம் சாட்டுகிறேன்!" என்றான் நிதானமாக.

## ஐந்தாம் அத்தியாயம்

# வெடித்த எரிமலை

சேகர் கூறிய வார்த்தைகளுக்கு மதிப்பு கொடுக்க வில்லை' நடராஜன். சொற்களாகிய வெளிப்பூச்சைச் சுரண்டி எடுத்து விட்டு உள்ளே இருந்ததை அவ னுடைய மனம் சோதனையிட்டது. கொடிய நஞ்சாகிய கருத்தைத் தீண்டிய உடனே அவன் உடலெல்லாம் பதற ஆரம்பித்தது.

காரை ஓட்டவே அவனால் முடிய வில்லை. கதவை உடைத்தெறியும் மனோ வேகத்தோடு அடித்ததில் விரல்களின் ஒவ்வொரு சிறிய அசைவிலும் தாங்க முடியாத வேதனை உண்டாயிற்று.

'உனக்கு வேண்டுமடா நடராஜா! இது வும் வேண்டும், இன்னமும் வேண்டும்! உன்னை யாரும் வக்கீலாக இருக்கும்படி கேட்டுக் கொள்ளவில்லை. உன்னை நீயே வக்கீலாக அமர்த்திக் கொண்டாய். வழக்கு தொடுத்தாய். ஜூரர்களாக இருக்கும்படி உன்னை ஒருவரும் அழைக்க வில்லை. உன்னை நீயே ஜூரராகவும் பாவித்துக் கொண்டாய். ஒரு முடிவுக்கு வந்தாய். நீதிபதி பதவியை உனக்கு ஒருவரும் அளிக்கவில்லை. நீயே நீதிபதி யாகவும் மாறித் தீர்ப்பு கூறினாய். நீ ஒருவன்தான் பரம யோக்கியன் போல் சேகரை ஏசினாய். மனம் போனபடி திட்டினாய். அநீதி நடக்கக் கூடாது என்ற நோக்கத்தினால் அல்ல; உன்னுக் குள்ளேயே புகையும் பொறாமை உணர்ச் சிப் பெருக்கினால் என்ன யோக்கியதை இருக்கிறது உனக்கு?'

ஒன்றன்பின் ஒன்றாக எழுந்த எண்ணங் களில் பதைபதைக்கும் மனத்துடனும்

தளிர்ந்த நடையுடனும் நர்ஸிங் ஹோமுக்குள் நுழைந்தான் நடராஜன்.

நர்ஸ் நிர்மலா அவனைப் பார்த்த பார்வையில் சந்தேகம் நிறைந்திருப்ப தாக அவனுக்குத் தோன்றியது. நர்ஸ் பவானியின் முகத்திலே என்றுமில்லாத கடுகடுப்பும் சிடுசிடுப்பும் காட்சியளித் தன. 'அரண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பது போல அவன் நாடி பிடித்துப் பார்த்த நோயா ளிகூட அவன் கவனிக்காதவாறு ஏளனப் புன்னகை புரிந்ததாக நினைத்தான்.

அவர்களிடமிருந்து தப்பிச் சென்று தன் அறையில் கதவைத் தாளிட்டுக் கொண்டான். என்ன செய்தாலும் அவ னுடைய மனப் பிரமை மட்டும் அடங்க வில்லை. அவன் எதிரே பத்து, நூறு, ஆயிரம் என்று ஊராரின் எண்ணிக்கை நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. எல்லாரும் அவ னைச் சுட்டிக் காட்டி, 'அவன்தான், அவன்தான்' என்றார்கள். 'அவமானம் அவமானம்' என்று கூக்குரலிட்டார்கள்.

இத்தனை குழப்பங்களுக்கிடையேயும், அவற்றை நீக்க ஒரு யோசனையும் உருவா யிற்று. கண்டிப்பாக அதைக் காரியத்தி லும் நிறைவேற்றுவது என்று தீர்மா னித்த பிறகுதான் அவனால் சற்று நேரம் அமைதியாக உட்கார முடிந்தது. அப் படி அமர்ந்ததில், பயங்கர யுத்தகளத் தில் போரிடும் வீரனைவிட அதிகமான நெஞ்சுரத்தைத் திரட்டிக் கொண்டான். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு வீட்டுக்குச் சென்றான்.

**வா**சலிலேயே சுவரில் சாய்ந்து கொண்டு அத்தான் தன் கண்களிலே கண்ட அணையாத தீபச் சுடர்களைப் பற்றிய எண்ணத்திலே இனிய பண்ணி சைத்துக் கொண்டிருந்தாள் விமலா. அத்தானைக் கண்டதும் அவனை வர வேற்க நகர ஆரம்பித்தாள். தான் சொல்ல வந்ததைக் கூறி முடிப்பதற்கு முன்னால் அவள் அகன்று சென்று விடு வாளோ என்று பயந்தவன் போலப் பாய்ந்து சென்று அவளுக்கு இருபுறமும் சுவரில் கைகளை ஊன்றி அசைய முடி யாமல் மடக்கினான் நடராஜன்.

பயந்து போனவள் விமலாதான். அத்தானுடைய அந்தப் புது வேகத் தைக் கண்டு சிறிது அதிர்ச்சி அடைந்த அவள், உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு விட்டாள். அன்று போல் இன்றும் அசட்டுத்தனமாகப் பேசக் கூடாது. அத்தானுக்குப் பிடித்த மாதிரி யாக ஏதாவது சொல்ல வேண்டும் என்று தீர்மானித்தவளாய், "நீங்கள் என் கண் களிலே ஏற்றிவைத்த தீபச்சுடர் அணைய வில்லை, அத்தான்! அதை நிச்சயப் படுத்திக் கொள்ளத்தானே வந்தீர்கள்? நன்றாகப் பாருங்கள்" என்று கூறிக் கொண்டே தன் கமலக் கண்களை அகல விரித்தாள் அவள்.

நடராஜன் இரும்பாக்கிக் கொண்ட இதயம் 'குபுக்'கென்று மேலே எழும்பி, அவன் தொண்டையை அடைத்தும் கொண்டது. வெறும் வாயை மென்று விழுங்கி அதை மீண்டும் உள்ளே தள்ளி னான். "விமலா! நீ பேசாதே. நான் பேசி முடிக்கும்வரையில் நீ பேசவே கூடாது!" என்று உத்தரவு போட்டான். வேடிக் கையாக விரிந்த விமலாவின் கண்கள் இப்போது இனம் தெரியாத பயத்தினால் அகன்று விரிந்தபடியே இருந்தன.

"மல்லிகாவைப் பார்க்கப் போனேன், விமலா! அவள் சேகரைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகத் தீர்மா னித்து விட்டாள். அங்கிருந்து சேகரைக் காணச் சென்றேன். 'கட்டிய மனைவி யையும் குழந்தைகளையும் உதறி விட்டு வேறொருத்தியை மணக்க உனக்கு வெட்கமாக இல்லையா?' என்று கேட் டேன். திமிர் பிடித்துக் கேட்டதற்கு அவன் கூறிய பதில் என் கொட்டத்தை அடக்கி விட்டது.

"நீ இந்த வீட்டில் இருப்பதற்குத் தவறாக அர்த்தம் கற்பித்து விட்டான், விமலா! இன்று அவன் பேசிய பேச்சை நாளை ஊர் முழுவதும் பேசுவார்கள். நீ உடனே இந்த வீட்டை விட்டுப் போய் விடு. உன் அம்மாவையும் அழைத்துக் கொண்டு சென்று விடு." அதிகமாகப் பேசி விடாவிட்டாலும் நடராஜனுக்கு இறைத்தது. உடல் முழுவதும் வியர்த்து விருவிருத்துப் போய் விட்டது.

நடராஜன் தன் உள்ளத்திலே ஏற்றி வைத்த சுமையைத் தாங்காமல் சுவரில் சாய்ந்திருந்தபடியே விமலா மெல்லச் சரிந்து விழுந்தாள். அவள் மயங்கிவிட்ட தாக எண்ணி, "விமலா! விமலா!" என்று குரல் கொடுத்துக் கொண்டே தூக்கப் போனான் நடராஜன்.

அவன் விரல்கள் தோள்களைப் பற்றிய தும் உதறிக் கொண்டு அப்பால் பாய்ந் தாள் விமலா. "அத்தான்! என்னைத் தொடாதீர்கள். ஊரார் ஏதாவது சொல்லுவார்கள்!" என்றாள் உள்ளங் கையை அவனுக்குக் காட்டி அசைத்த வாறே. அவளை நோக்கி நடந்தான் நடராஜன் பாரம் சற்று இறங்கியவனாக.

"அத்தான்! என்னை நெருங்காதீர்கள்! தூரத்திலேயே இருங்கள்! சேகர் பார்த்து விட்டால் அவதூறு சொல்



இல்லாளுக்கு

நம்பிக்கை

ஊட்டுவது

# சுடர்

தீப்பெட்டிகள்






தயாரிப்பாளர் :

**அரசினர் தீப்பெட்டி தொழிற்சாலை**

பெரம்பூர், சென்னை

கிடைக்குமிடம்:

**தொழில் இலாகா விற்பனை நிலையம்**

166-ஏ, மவுண்ட் ரோடு, சென்னை-2

615TAS-MM-8

ஆரோக்கியம்
மிளிரும்
டீக்கான
தோற்றமளிப்பது









# ஆஷா

லவெண்டர்

ப்ரில்லியண்டைன் — லானொலின் அடங்கியது

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

மெஸர்ஸ் ஜே. எல். மாரிசன் சன் அண்டு
ஜோன்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
கண்ட்ராக்டர் பில்டிங்ஸ், நிக்கல் ரோடு
பல்லார்டு எஸ்டேட் - - பம்பாய்-1

தயாரிப்பாளர்கள் :

ஐடியல் இன்ஸ்டிடியூட் பிரைவேட் லிமிடெட்
பம்பாய் 8

வார்!'' என்று சொல்லிக் கொண்டே அங்கே யிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு சிரித்தாள்.

இவ்வளவு சுலபமாகத் தான் சொன்னதை ஏற்றுக் கொள்வாள் என்று எதிர்பாராத நடராஜன் வியப்படைந்து போய் நின்றான்.

விமலா கன்னத்தில் விரல்களைப் பதித்துக் கொண்டு, ''ஒரு விஷயத்தைக் கவனித்தீர்களா, அத்தான்? ராமரைப் போல் உங்கள் தகப்பனார் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதற்காகவாவது என்னை மணப்பதாக அன்று கூறினீர்கள். என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறீர்களோ இல்லையோ, ராமனைப் போலவே ஊரில் எவனோ ஒரு மடையன் எதையோ உளறினான் என்பதற்காகச் சீதையைக் காட்டுக்கு அனுப்பியது போல் என்னை வீட்டை விட்டு வெளியேற்றுகிறீர்கள்! நல்ல வேடிக்கைதான்!'' என்று சொல்லி விட்டுக் கடைக் கண்ணால் நடராஜனைப் பார்த்தாள்.

இதையெல்லாம் தமாஷாகப் பேசுகிறாளா? ஏளனம் செய்கிறாளா? என்று புரியாமல் அசட்டுச் சிரிப்பு சிரித்தான் நடராஜன்.

சட்டென்று எழுந்து நின்று அவனைக் கம்பீரமாகப் பார்த்து, ''சிரிக்காதீர்கள், அத்தான்!''

# கோவையில் கலை விழா



காவியங்களும் கலைஞர்களும் காட்டிய உண்மையைத் தெய்வமாகப் போற்றி மனித இனம் வாழ அன்னை பராசக்தியை ஆடியும் பாடியும் வழிபடுவதே கலைவிழா என்னும் உயரிய கருத்தில் சென்ற இரண்டு ஆண்டுகளாகக் கோவையில் கலைவிழா கொண்டாடி வருகிறார்கள். ஸ்ரீ பித்துக்குளி முருகதாஸ் அவர்களும் ஸ்ரீ கே. ஆர். ராதாகிருஷ்ணன் அவர்களும் பெரு முயற்சி செய்து கொண்டாடும் இந்தக் கலைவிழா சென்ற மாதம் பத்து தினங்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. இந்தக் கலைவிழாக் காட்சிகள் சிலவற்றைப் படத்தில் காணலாம். 1. பராசக்திக்கு அலங்காரம் செய்து பக்தியோடு பண் இசைத்துப் பாடுகிறார்கள். 2. விழாவைத் துவக்கி வைத்த திரு டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் நாகஸ்வர வித்வான் திரு டி. பி. சுப்பிரமணியபிள்ளை அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டுகிறார். 3. ஒவ்வொரு நாளும் திரளாக வந்து கலைவிழாவில் கலந்து கொண்டு சிறப்பித்த கூட்டத்தில் ஒரு பகுதி.

என்று உரக்கக் கட்டளை யிட்டாள் விமலா. "நீங்கள் சிரிப்பதற்காக நான் இதையெல்லாம் சொல்லவில்லை. உள்ளத்தினுள்ளே குமுறிக் கொண்டிருக்கும் வேதனையின் பிரதிபலிப்பு இந்த வெறுப்புப் பேச்சு. சீதா தேவியுடன் என்னை நானே ஒப்பிட்டுக் கொண்டேன். அது தவறு, அத்தான்! சூழ்நிலை ஒப்பிட்டுப் பார்க்கச் சொல்கிறது. ஆனால் அவள் தெய்வப் பிறவி. நான் மானிட ஜன்மம். அவள் பொறுமையே உருவானவள். நான் அப்படியில்லை. என் பொறுமைக்கு ஒரு எல்லை உண்டு. அமைதியாக இருக்கும் எரிமலை என்றாவது ஒரு நாள் சீறுகிறது. அனலைக் கக்குகிறது. பொறுமையுடன் இருக்கும் பூமாதேவியும் என்றைக்காவது ஒருநாள் தன்மீது நடக்கும் அக்கிரமங்களைச் சகியாமல் பொறுமை இழக்கத்தான் செய்கிறாள்! அன்று பூமி கோபத்தினால் நடுங்கி வெடித்தும் விடுகிறது! அதைப் போலத்தான் அத்தான் நானும்! எத்தனை நாட்கள் என்னை உயிரோடு வதைப்பதைப் பொறுத்துக் கொண்டுஇருக்கமுடியும்?என்னைஅனுப்பி விடுங்கள். தொலைந்து போகிறேன். உங்கள் அருகிலேயே இருந்து மனம் வாடிச் சாவதைவிட எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஒழிந்து போகிறேன். என் தலைவிதியை நினைத்து நொந்து கண்ணீர் விட்டுக்கொண்டு காலங் கடத்துகிறேன்! ஏன் சும்மா நிற்கிறீர்கள்? கன்னத்தில் நாலு அறை வைத்துத் துரத்தி அடியுங்கள் என்னை. சாகும்வரையில் உங்கள் விரல் படிந்த வடு மறையக் கூடாது! அதைத் தடவிக்கொண்டே என்னுடைய கடைசி மூச்சை விடுவேன்!

"ஏன் அத்தான் அசைய மாட்டேன் என்கிறீர்கள்? நானாகவே போய் விடுவேன் என்ற எண்ணமா? மாட்டேன், அத்தான்! முடியவே முடியாது. என் தலைமயிரைப் பிடித்து முறுக்கி வெளியே கொண்டு போய்த் தள்ளினால் ஒழிய, போக மாட்டேன். என்னை விரட்டுங்கள் அத்தான். வீட்டைவிட்டு வெளியேற்றுங்கள்!" என்று அலறினாள் விமலா.

திடீரென்று அவளுடைய கூச்சல் அடங்கி விட்டது. சில விநாடிகள் வரை அங்கே நிலவிய அமைதியை அவளுடைய விம்மலும் அழுகையும் குலைத்தன. நிற்கவும் சக்தியற்று அத்தான் கால்களில் துவண்டு விழுந்தாள்.

"அத்தான்! என்னை மன்னித்து விடுங்கள். நான் கத்தியதெல்லாம் தப்புத்தான். கோபித்துக் கொள்ளாதீர்கள். தயவுசெய்து என்னை வீட்டை விட்டு அனுப்பிவிடாதீர்கள். உங்களைத்தொடக் கூடாது என்றால் தொடவில்லை. அருகே நெருங்கக் கூடாது என்றால் தூரத்திலேயே இருக்கிறேன். பேசக் கூடாது என்று உத்தரவு போட்டால் ஊமையாகி விடுகிறேன். ஆனால் உங்களைப் பார்க்கக்கூட முடியாதபடி துரத்தியடித்துவிடாதீர்கள், அத்தான்! உங்களை மன்றாடிக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். ஒரு வேலைக்காரியைப் போலவாவது இந்த வீட்டிலே இருந்து விட்டுப் போகிறேன், அத்தான்!"

விமலாவுடைய கைகளை முரட்டுத்தனமாகப் பற்றித் தூக்கி நிறுத்தினாள், அவன் தாயார் மரகதம்மாள். "நானும் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். சட்டென்று இப்படிக் கோழையாக மாறிவிடுவாய் என்று எதிர்பார்க்கவில்லை. நமக்கு மட்டும் மானம் மரியாதை கிடையாதா என்ன? இந்தா உன் பெட்டியைப் பிடி. நட, சொல்கிறேன்!" என்று கத்தினாள்.

பெட்டியை ஒரு மூலையில் வீசி எறிந்தாள் விமலா. "நான் வரமாட்டேன், அம்மா! என் அத்தானை விட்டு விட்டு என்னால் வரமுடியாது" என்று சொல்லிக் கொண்டே, நடராஜனின் கால்களைக் கட்டிக் கொண்டாள்.

மரகதம்மாள் இடது கையில் பெட்டியை எடுத்துக் கொண்டாள். வலது கையால் விமலாவின் கையைப் பிடித்துத் தரதரவென்று வேகமாக இழுத்துக் கொண்டு போனாள்.

உள்ளேயிருந்து இரைக்க இரைக்க ஓடிவந்த பொன்னம்மாள், "மரகதம்! மரகதம்! இது என்ன அசட்டுத்தனம்? குழந்தைகள் ஏதோ சண்டை போட்டுக் கொண்டால் நாமும் அறிவிழந்து நடந்து கொள்வதா? இங்கே வாயேன், சொல்கிறேன்" என்று அழைத்துப் பார்த்தாள். மரகதம்மாளின் காதில் அவளுடைய வேண்டுகோளெல்லாம் விழுந்ததாகவே தெரியவில்லை.

சிலையாக நின்ற நடராஜனை ஏதோ ஒரு அருவருக்கத் தக்க அற்பப் பொருளைப் பார்ப்பது போல் வெறுப்புடன் பார்த்து விட்டு உள்ளே திரும்பிப் போனாள் பொன்னம்மாள்.

அம்மா இழுத்துச் செல்ல அத்தானைப் பார்த்தவாறே பின்னோக்கி நடந்து கொண்டிருந்தாள் விமலா. அவளுடைய கண்களிலிருந்து இரண்டு தீபச் சுடர்கள் கிளம்பி நடராஜனை நெருங்கி நெருங்கி வந்தன. மார்புக்குள் புகுந்து சென்று இரும்பாக்கிக் கொண்ட அவன் இதயத்தைச் சூழ்ந்து உருக்கித் துன்புறுத்த ஆரம்பித்தன. (தொடரும்)

# தமிழ் கூறும் நல்லுலகம்

பூலோரி திருவிழா சங்கத்தின் ஆதரவில் அக்டோபர் 14-ந் தேதி யன்று கான்பூர் சகோதரிகளும், ஸ்ரீதரன் நாயர் அவர்களின் செல்விகளுமான குமாரிகள் ரீனு ரங்கநாதன், ஜூலி ரங்கநாதன் ஆகியவர்களின் பரதநாட்டியம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. மத்திய உள்நாட்டு மந்திரி ஸ்ரீ கோவிந்த் வல்லப பந்த் தலைமை வகித்துச் செல்விகள் நாட்டியத்தைப் பாராட்டினார்.

★

பம்பாய்க்குச் சமீபமுள்ள டோம்பிவில்லியில் தாக்குர்லி பஜனை சங்கத்தார் கடந்த அக்டோபர் 9, 10, 11 தேதிகளில் ஸத்குரு போதேந்த்ர ஆராதனையை வழக்கம்போல் வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். பம்பாயிலுள்ள பஜனை சங்கத்தார் எல்லோரும் வந்து இந்த வைபவத்தை நடத்தினார்கள். வைபவம் ராமநாமம், உஞ்ச விருத்தி, ஆராதனை, திவ்யநாம சங்கீர்த்தனத்துடன் முடிவடைந்தது. ஸத்குருவின் வரலாற்றைத் திருப்புகழ் பாப்பா அவர்கள் எடுத்துரைத்தார்.

★

சிங்கப்பூரிலுள்ள நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தண்டாயுதபாணி கோவிலில் இவ்வாண்டு நவராத்திரி விழாவை இசை, நடன நிகழ்ச்சிகளுடன் விமரிசையாகக் கொண்டாடினர். 13-10-58 தேதியன்று கோவில் நிர்வாகஸ்தர் திரு சுவாமிநாதன் செட்டியார் விழாவைத்துவக்கிவைத்துப் பேசினார். பல ஆண்டுகளுக்கு முன் சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்ட இவ்விழா ஆண்டுதோறும் வளர்ச்சி பெற்று இவ்வாண்டு ஒரு பெரிய கலைவிழாவாக நடக்கவிருப்பது பற்றிப் பெருமைப்படுவதாகவும், பயன் கருதாது இசை, நடன நிகழ்ச்சிகளில் பங்கு பெறும் கலைஞர்களைப் பாராட்டுவதாகவும் கூறினார். பின்னர் நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. ஒவ்வொரு நாளும் இரவு 7-மணி முதல் 11-மணி வரை விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் இசைமணிகளின் பாட்டுக்கச்சேரியும், நடனமணிகளின் நாட்டியங்களும், வாத்தியக் குழுவினரின் வாத்திய இசையும் நடைபெற்று வந்தன. குறிப்பாக, தஞ்சாவூர் ஹரிகதாவாணி திருமதி கமலாபாயின் கதாகாலட்சேபமும், காரைக்குடி வித்துவான் இசைக்கொண்டல் திரு மணிராஜன் அவர்களின் கச்சேரியும் செவிக்கினியதாக இருந்தன. ஒவ்வொரு நாளும் சுமார் இரண்டாயிரத்துக்கு அதிகமான மக்கள் கலந்துகொண்டனர். மலாயா முழுவதுமிருந்து ரஸிகப் பெருமக்கள் வந்திருந்தது குறிப்பிடத் தக்கது. விஜயதசமி யன்று சுவாமி நன்கு அலங்கரிக்கப்பட்டு வெள்ளிக்குதிரை வாகனத்தில் எழுந்தருளினார்.

சிங்கப்பூரில் நவராத்திரி விழா வெகு விமரிசையாக நடைபெற்றது. அவ்விழாவில் 'ராதா-கிருஷ்ணன்' நடனமாடிய செல்விகள் ராஜகுமாரி-ஜெயலட்சுமியைப் படத்தில் காணலாம்.



★

திருவனந்தபுரம் தமிழ் மாணவர் சங்கத்தின் சார்பாக அக்டோபர் 27-ந் தேதி மாலை ஒரு மணிக்குப் பல்கலைக் கழகக் கல்லூரி மன்றத்தில் தமிழகத்து அமைச்சர்கள் திரு சுப்பிரமணியம், திரு பக்தவத்ஸலம் அவர்களுக்கு மருத்துவக் கல்லூரி முதல்வர் டாக்டர் ம. தங்கவேலு அவர்கள் தலைமையில் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது.

குமாரிகள் ஜானகி, உமா தமிழ் வணக்கம் பாடக் கூட்டம் ஆரம்பமாகியது. சங்கத் தலைவரும் மகளிர் கல்லூரி விரிவுரையாளருமான ரா. சீதாலட்சுமி அமைச்சர்களுக்கு வரவேற்புரை வழங்கினார்கள். பல்கலைக் கழகக் கல்லூரித் தமிழ்ச் சங்கம், மார்இவானியஸ் தமிழ்ச் சங்கம் இவைகளின் சார்பாக அமைச்சர்களுக்கு மலர்மாலைகள் வழங்கப்பட்டன.

★

உலக மகாகவி ஸ்ரீ சுப்பிரமண்ய பாரதியாரின் விழா 26-10-58 ஞாயிற்றுக்கிழமை யன்று அமராவதி தென்னிந்திய கலாசார சங்கத்தின் சார்பில் "ஜோஷி ஹால்"ல் சங்கத்தலைவர் டாக்டர் ஏ. வி. மதனகோபால் தலைமையில் நடைபெற்றது. பாரதியின் அருமை பெருமைகளைப் பற்றி ஸ்ரீ பி. டி. சேஷன், ஸ்ரீ கே. எஸ். எஸ். மணி ஐயர், ஸ்ரீ எஸ். எம். சுப்பிரமணியம் முதலியவர்கள் பேசினார்கள். ஸ்ரீ பாலாசாகேப் மராட்டே பாரதியின் திருஉருவப் படத்தைத் திறந்து வைத்துக் கவியின் மகத்துவத்தைப் பற்றி உரை நிகழ்த்தினார். திருவாளர்கள் கோபால கிருஷ்ணன், ராஜேந்திர பிரசாத் ஆகியவர்களும் குமாரிகள் ரஜனி சுப்பிரமணியம், நிர்மலா சுப்ரமண்யம், ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி முதலானோரும் இசை விருந்தளித்தனர்.

# பண்பு தந்த பரிசு

முழங்கால் மூக்கில் படும்படி முடங்கிக் கிடந்தான் வடிவேலு. கம்பளம் போர்த்திக் கொண்டிருந்தும் கூடத் தாங்க முடியாத குளிர். விநாயகம் அருகில் வந்து வாஞ்சையோடு அவன் தலையைக் கோதினான். பட்டுப் போன்ற தன் மகனின் கன்னத்தை வருடினான் விநாயகம். ஜில்லென்ற அவன் கை பட்டதும் உடலைச் சிலிர்த்துக் கொண்டான் வடிவேலு. அவன் தூங்கவில்லை. திரும்பித் தந்தையைப் பார்த்தான்.

காக்கிச் சட்டை, கழுத்திலே கம்பளித் துண்டு. வடிவேலுவின் நெஞ்சு படபடத்தது. 'அப்படியானால் நேற்றிரவு பேசிக்கொண்டிருந்தபடி அப்பா கிளம்பத் தயாராகி விட்டாரா?' தந்தையின் முகத்தை உற்றுப் பார்த்தான். நான்கு மாதங்களாகக் காணாத ஒரு மலர்ச்சியைக் கண்டான் அந்த முகத்தில். ஏதோ கேட்க நினைத்தபோது கவரில் மாட்டி இருந்த அவனுடைய சட்டையை எடுத்துக் கொடுத்துப் போட்டுக் கொள்ளும்படி சொன்னான் விநாயகம். சட்டைப் பையிலிருந்து 'டிங்' என்று ஏதோ ஒரு பொருள் தரையில் விழுந்தது. பளபளக்கும் அதைச் சட்டென்று கையில் எடுத்த விநாயகத்தின் விழிகள் வியப்புடன் விரிந்தன. "பத்திரமாக வைத்திருக்கிறாயா?", என்றான் தன் மகனைப் பெருமையுடனும் புன்னகையுடனும் பார்த்துக் கொண்டே.



பாரதியார் விழாவிலே பாஞ்சாலி சபதத்தை ஒப்பித்ததற்காக வேலுவுக்குக் கிடைத்த பரிசு அது. அரைப் பவுன் மதிப்புள்ள தங்க மெடல். ஜில்லா கலெக்டர் வேலுவின் சட்டையிலே அதைக் குத்திய போது விநாயகம்தான் அத்தனை பெரிய கூட்டத்தில் 'தட் தட' வென்று முதலில் கைதட்டினான். எல்லோரும் கரகோஷம் செய்து ஓய்ந்த பிறகும்கூட அவன் தன் கைத்தட்டலை நிறுத்தவில்லை. தன் மகன் தங்கமெடல் பரிசு பெற்றதில் அத்தனை பெருமை அவனுக்கு. என்ன கஷ்டம் வந்தாலும் அதைத் தன் மகனிடமிருந்து வாங்கி விற்பதில்லை என்று அப்போதே உறுதி செய்து கொண்டான் விநாயகம். வேலுவும்



அதை ஒரு கணமும் பிரிவதில்லை. எப்போதும் அது அவன் சட்டைப் பையிலோ அல்லது அவன் நண்பன் ஆசைநாதனின் கழுத்திலே தொங்கும் சிலுவையைப் போலக் கழுத்திலே கட்டித் தொங்கவிட்டபடியோ இருக்கும். அப்படி அதைப் பாதுகாத்து வந்தான் வடிவேலு.

தகப்பனாரிடமிருந்து அதை வாங்கித் தன் டிராயர் பையில் போட்டுக் கொண்டான் வடிவேலு.






"'ஷெட்டு' வரை என்னோடு வாடா, தம்பி!'' என்று முன்னால் நடந்தான் விநாயகம். உதகையில் குளிருக்குப் பெயர் போன நவம்பர் மாதத்து விடியற்காலை. நாலு மணி இருக்கும். தெரு விளக்குகளை வெறும் புள்ளிகளாக்கிக் குமைந்து கொண்டிருந்தது மூடுபனி. கடுமையான குளிர். நிசப்தமான அந்த இரவிலே, விறைத்துக் கிடந்த வீதியைத் தங்கள் பூட்ஸ் கால் ஒலியால் உலுப்பி விட்டு நடந்து கொண்டிருந்தார்கள் அப்பாவும் பிள்ளையும்.

"வேலு, நான் கோயம்புத்தூருக்குப் போகிறேன், தெரியுமில்லே?''

"ம்...'' கொட்டினான் வேலு—கம்பளிக்குள் இறுகக் கட்டிக் கொண்டிருந்த கைகளைப் பிரிக்காமலே நடந்து கொண்டிருந்த அவன்.

"இரண்டு மூன்று நாட்களில் திரும்பி விடலாம் என்று நினைக்கிறேன்.''

வேலுவுக்கு அதுவும் தெரியும். அதற்கு மேலும் தெரியும். கொஞ்ச தூரம் மௌனமாக நடந்துசென்ற விநாயகம் சிந்தனையுடன் "வேலு, நான் திரும்பி வரும்வரை என் இடத்தில் நீ இருந்து இந்த வீட்டைக் கவனித்துக் கொள்ள வேண்டும்'' என்றான்.

"ஆகட்டும், அப்பா!''

"அம்மாவையும் குழந்தைகளையும் கவனித்துக் கொள்''

"சரி, அப்பா ..''

"அம்மா எங்கேயாவது கடைக்குப் போகச் சொன்னால் முடியாதென்று சொல்லாதே. நான் வரும் வரை நீ சினிமாவுக்குப் போகக் கூடாது என்ன? அம்மாவுக்கு உடம்பு சரியில்லே. ஆகவே நீ எப்போதும் அவளுடன் இருக்க வேண்டும்.''

"நீங்கள் வீட்டைப் பற்றிய கவலை இல்லாமல் போய் வாருங்களப்பா'' என்றான் வேலு. விநாயகத்தின் நெஞ்சம் கர்வத்தால் விம்மியது. பெருமையோடு மகனை அருகே இழுத்து அணைத்துக் கொண்டான். ஷெட் வாசலில் சரக்கை ஏற்றிக் கொண்டு லாரி தயாராக இருந்தது. அதில் ஏறி டிரைவர் ஆசனத்தில் உட்கார்ந்துகொண்ட விநாயகம் "சரி, வேலு நீ போய் வா!'' என்று விடை கொடுத்தான். "வரேனப்பா'' என்று சொன்னபோது ஏனோ அவன் குரல் கம்மியது. இனமற்ற ஒரு துக்கம் அந்தக் குழந்தை உள்ளத்தைக் கவ்விக்கொண்டது. திரும்பிப் பார்க்காமல் வீட்டை நோக்கி நடந்தான்—இல்லை, ஓடினான்.

உள்ளே நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொள்ளும் வரைதான் அவனால் அழுகையைக் கட்டுப்படுத்த முடிந்தது. கதவின் ஓசை கேட்டு உள்ளே படுத்திருந்த மரகதம் 'வடிவேலுவா?' என்றாள். 'ம்' என்றான்

வேலு. 'படுத்துக்கடா தம்பி......லாரி கிளம்பிட்டுதா?' என்ற கேள்விக்கும் 'உம்' கொட்டி விட்டுப் படுக்கையில் போய் விழுந்ததும்தான் அவன் அழுகை விக்கல்களாக வெளிப்பட்டது. எதற்காக அழுகிறோம் என்றே அவனுக்கு விளங்கவில்லை. இதுவரை விநாயகம் தன் குழந்தைகளை விட்டு ஒரு நாள்கூட எங்கும் பிரிந்து போனதில்லை.

* * *

விநாயகம் ஒரு கார் டிரைவர். கார் ஓட்டுவதிலே நிகரற்றவன் என்று பெயர் பெற்றதினால்தான் ஆண்டர்சன் துரை தன் 'கெடிலாக்' காரை அவன் கையில் ஒப்படைத்தார். திருச்சியிலிருந்த விநாயகம் துரையின் டிரைவராகிக் குடும்பத்துடன் உதகமண்டலத்துக்குக் குடியேறி ஒரு வருஷம் தானாகிறது. தனக்கு நிகரில்லை என்ற பெருமிதத்தோடு வாழ்ந்து வந்த விநாயகத்தின் வாழ்வை விதி எட்டிப் பார்த்தது. இல்லாவிட்டால் துரையை ஆபீசில் கொண்டு விட்டுத் திரும்பும் வழியில் அந்த விபத்து ஏற்படுவானேன்? இத்தனைக்கும் விநாயகம் அந்தத் திருப்பத்தில் மெதுவாகத்தான் ஒடித்து வளைத்தான். ஆனால் கண் மண் தெரியாமல் காற்றைப் போல் சைக்கிளில் ஒரு பையன் வருவானென்று அவன் எதிர்பார்க்கவில்லை. தவறு என்னவோ விநாயகத்தின் பேரிலில்லை. அந்த எதிர்பாராத சமயத்திலும்தான் எப்படிப் பிரேக்கைப் போட்டான்? என்ன செய்துதானென்ன? பெற்றவர்களைக் கதற வைத்து விட்டுப் போய்விட்டான் பையன். அல்பாயுசு! அதற்கு விநாயகம் என்ன செய்வான்? ஆனால் சட்டம் இந்தத் தத்துவங்களை ஏற்குமா?

போலீஸ், கேஸ், கோர்ட் விசாரணை எல்லாம் முறைப்படி நடந்தன. இறந்த பையனோ ஒரு எஸ்டேட் முதலாளியின் மகன். துரையின் நண்பரும் கூட. ஆகவே துரை இதில் வெளிப்படையாக விநாயகத்தின் பக்கம் வாதாடவில்லை. நல்ல வக்கீல்களை வைத்து ஏதோ அவரால் முடிந்ததைச் செய்தார். விநாயகம் ஜெயிலுக்குப் போகாமல் தப்பினான். ஆனால் 'டிரைவிங் லைசென்ஸை' ஒரு வருஷத்துக்குப் பிடுங்கிக் கொண்டது அரசாங்கம். அதாவது விநாயகத்தை உலகத்தில் உலவ விட்டுவிட்டுப் பட்டினி போடத் திட்டமிட்டது. இவன் அதிர்ஷ்டம் துரையும் பம்பாய்க்குக் கிளம்பிப் போய்விட்டார். கையிலிருந்த பணமும், துரை பம்பாய்க்குப் போகும்போது விநாயகத்தின் நிலைக்கு இரங்கிக் கொடுத்த சன்மானத் தொகையும் மூன்று மாதங்களுக்குக் கூடக் காணவில்லை விநாயகத்துக்கு. மதிப்பாக வாழ்ந்து விட்டவன். பிறரிடம் போய் உடலைக் குறுக்கிக் கொண்டு நின்று பழக்கமில்லை. என்ன செய்வது? குடும்பமோ பெரிது. வடிவேலுதான் மூத்த பையன். அவனுக்குப் பன்னிரண்டு வயது. தம்பி மாணிக்கத்துக்கு எட்டு வயது. கடைக்குட்டி வசந்தாவுக்கு மூன்று வயது. அடுத்தது பிறக்கப் போகிறது.

குழந்தைகள் கேட்கும் அல்ப ஆசைகளைக் கூடப் பூர்த்தி செய்ய முடியாமல் வீட்டில் வியாபித்துக் கொண்டிருக்கும் வறுமையின் பல கோலங்களைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கவும் அவனால் முடியவில்லை. செய்யக் கூடாது என்று பல நாட்களாகப் பலரின் வற்புறுத்தலைத் தட்டிக் கழித்து வந்தவன் முடிவில் அதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்தான். 'டிரைவிங் லைசென்ஸ்' இல்லாமலே திருட்டுத்தனமாகக் கார் ஓட்டுவது என்று தீர்மானித்துவிட்டான்.

இஸ்மாயில் ராவுத்தருக்கு உதகமண்டலத்தில் ஏராளமான தோட்டங்கள். முட்டைகோஸ், காலிபிளவர், பீட்ரூட் முதலிய சீமைக் கறிகாய்களைக் கொண்ட பெரிய மண்டி. 'சீஸனி'ல் ஏராளமான சரக்குகள் வந்து குவிந்து விடும். அவைகளை வெளியிடங்களுக்கு அனுப்பினால்தான் ராவுத்தருக்குக் காசு. இல்லாவிட்டால் கோஸ் ஆனை 'அபேஸ்' பண்ணிவிடும். ராவுத்தரிடம் இரண்டு லாரிகள் இருந்தன. ஆனால் டிரைவர் ஒருவன்தான். அவனுக்கும் ஏதோ உடல் நலமில்லை என்று வைத்தியத்துக்குக் கோயம்புத்தூருக்குப் போய்விட்டான். மண்டியிலோ சரக்குக் குவிந்து அழுக ஆரம்பித்தது. ராவுத்தர் தவித்தார் — எப்படியாவது சரக்கை வெளியேற்றிவிட வேண்டும்.

மலைப் பாதையில் ஏறுவதைவிட இறங்குவதற்கு மிகுந்த சாமர்த்தியம் வேண்டும். திறமை வாய்ந்த டிரைவர்களினால்தான் வளைந்து வளைந்து செல்லும் பல திருப்பங்களையுடைய அந்தப் பாதையில் லாரியை லாகவமாக ஓட்டிச் செல்ல முடியும். விநாயகத்தின் திறமை ராவுத்தருக்குத் தெரியும். அவனிடம் டிரைவர் லைசென்ஸ் கிடையாது என்பதும் தெரியும். விநாயகத்தைத் தவறான வழியில் செல்வதற்குத் துணிவூட்டினார் ராவுத்தர். ஆசை வார்த்தைகளால் அவனை ஆட்கொண்டு விட்டார் அவர்.

கணவனின் முடிவைக் கேட்ட மரகதம், "லாரி ஓட்டுவது இலேசான காரியமில்லையே? அதுவும் பனி மூடிய இரவு வேளையில், மலைப் பாதையில், சட்ட விரோதமாக ...?" என்று தவித்துப் போனாள். ஆனால் விநாயகம் தன் முடிவை மாற்றிக்கொள்ளவில்லை.

* * *

பொழுது புலர்ந்தது:

புதிய எண்ணங்களுடன் எழுந்திருந்தான் வடிவேலு. 'குடும்பத்தைத் தன் பொறுப்பில் விட்டுச் சென்றிருக்கிறார் அப்பா' என்ற எண்ணமே அவன் வயதில் பத்து வருஷத்தை அதிகமாக்கி விட்டது. பள்ளிக்கூடம் போகுமுன் ஓடியாடிக் காரியங்களைச் செய்தான். அடுப்பை மூட்டி வெந்நீர் போட்டான். தம்பி மணிக்குக் குளிப்பாட்டி விட்டான். தங்கச்சியை டாக்டரிடம் அழைத்துப் போய் முழங்கால் புண்ணுக்குக் களிம்பு தடவிக் கொண்டு வந்தான். மரகதத்துக்குப் பெருமை பிடிபடவில்லை. வடிவேலுவுக்கு இத்தனை பொறுப்பு எப்படி வந்தது என்று வியந்து போனாள்.

இரண்டு நாட்கள் ஓடிவிட்டன. மூன்று வது நாளும் கழிந்து விட்டது. சொன்னபடி விநாயகம் வரவில்லை. மரகதம் என்னென்னதெல்லாம் எண்ணிக் கவலைப்பட்டாள். 'கணவனைப் போலீஸார் பிடித்து விட்டார்களோ' என்று நினைக்கும் போதெல்லாம் அவள் நெஞ்சு தவித்தது. அப்படி ஏதாவது நேருமானால் அவள் நிலை, குழந்தைகளின் கதி?

நிறை மாதக் கர்ப்பிணியான அவளுக்குச் சிறு கவலையும் ஆயாசத்தைக் கொடுத்தது.

'அம்மா ஏன் இப்படிக் கவலைப்படுகிறாள்? நானில்லையா?' என்று எண்ணி வந்த வேலுவுக்குக் கூட அப்பா வராதது என்னவோ போலிருந்தது. தீபாவளியை எதிர்பார்த்து ஊரே குதூகலத்துடன் காத்துக் கிடந்தது. வேலுவோ தகப்பனாரை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தான்.

அன்று காலை வேலு பழைய அமுது சாப்பிட்டுக் கொண்டே தன் தம்பியிடம் "மணி! நாம் கடைவீதிக்குப் போயி பட்டாஸ் கடைகளை எல்லாம் வேடிக்கை பாத்திட்டு வரலாம், வரியா?" என்றான். மணி உற்சாக'துடன் 'போகலாம்' என்று குதித்தான்.

வேலு சாப்பிட்டுக் கை கழுவிக் கொண்டதும் மரகதம் "வேலு! நீ இப்போ வேடிக்கை பார்க்கப் போகக் கூடாது" என்றாள். வேலுவின் முகம் கன்றி விட்டது.

'ஏம்மா நான் என்ன காரியம் செய்யணும்?" என்றான்.

"கடைக்குப் போகணும்...."

"எந்தக் கடைக்கு.....?"

"பங்காரு செட்டியார் கடைக்கு."

வேலுவுக்கு ஆத்திரமாக வந்தது. இரண்டு நாட்கள் முன்பு கரிக் கடை வீராசாமி கடைக்குக் கால் மூட்டை கரி வாங்கப் போய் அவன் உதாசீனமாக ஏசிப் பேசியதை நினைத்தபோது அவன் உடல் குன்றிப் போயிற்று. பாக்கியைக் கொடுக்காமல், யார்தான் மேலும் சாமான் கொடுப்பார்கள்? தன் முன்னால் அப்பாவைப் பற்றிக் கேவலமாகப் பேசுவதை அவனால் கேட்க முடியவில்லை. "என்னாலே போக முடியாதம்மா" என்றான் கடுப்புடன். பங்காரு செட்டியார் கடைக்கும் ஏகமாகப் பாக்கி தர வேண்டும்.

"வீட்டிலே ஒரு சாமான் இல்லேடா, தம்பி! விடிஞ்சா தீவிளிப் பண்டிகை. உங்கப்பாரு போனவரைக் காணோம். கோடி உடுத்திக் கிட்டுக் கொண்டாடத்தான் இந்த வருசம் கொடுத்து வைக்கல்லே. குழந்தைகளுக்குப் பாயசம், பட்சணமாவது பண்ணவேணுமா?" மரகதத்தின் குரல் கரகரத்தது. கண்களில் நீர் பளபளத்தது. வேலுவுக்குத் தர்மசங்கடமாக இருந்தது.

"மணியைப் போகச் சொல்லம்மா. இத்தத் தடவை அவன் போகட்டும். வேண்டிய சாமானைக் காகிதத்தில் எழுதிக் கொடுத்து அனுப்பு" என்றான் வேலு.

மரகதம் தன் மகனின் முகத்தைப் பார்த்தாள். "சரி வேலு, நானே போறேன். நீ வசந்தாவைப் பார்த்துக்கிட்டு வீட்டிலேயே இரு. குழந்தைங்க இருக்கிற வீட்டிலே பண்டிகைங்களை ஒளிக்கக் கூடாதுன்னு பெரியவங்க சொல்லுவாங்க" என்று தள்ளாடியபடி நடந்து உள்ளே சென்றாள்.

வேலுவுக்கு அம்மாவின் மீது ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "இவள் போகிறாளாமே. வயிறும் பிள்ளையுமாக எங்காவது வெளியில் போகலாமா? அதுவும் செட்டியார் கடை கிட்டவா இருக்கு? அப்பாவுக்கு இது தெரிந்தால்? தம் ஸ்தானத்தில் என்னை இருக்கும்படி கேட்டுக் கொண்டாரே?" திடீரென்று அப்பாவின் மீதும் கோபம் வந்தது.

மரகதம் வாங்க வேண்டிய சாமானுக்குப் பட்டியல் தயாரித்துக் கொண்டிருந்தாள். 'நான்தான் போகவேண்டும்' என்று சொல்லிக் கொண்டான் வேலு. 'நானே போகிறேன்' என்று அவள் சொன்ன அந்த ஒரு வார்த்தையே அவனைப் போகும்படி செய்து விட்டது. தன்னையே போகும்படி செய்து விட்ட தாயாரின் மீது கோபம் கோபமாக வந்தது. கடுத்த முகத்துடன் பையை எடுத்துச் சுருட்டிக் கொண்டான். அம்மாவின் கையிலிருந்த சாமான் பட்டியலை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டான். விருட்டென்று வெளியேறினான்.

மகனின் செய்கையைக் கண்ட மரகதத்துக்குச் சிரிப்புத்தான் வந்தது. ரத்தம் செத்துக் கிடந்த தன் உதடு மலரப் புன்னகை செய்தாள். "ஜாக்கிரதையாப் போய் வா, வேலு!" என்றாள் சற்று உரக்கவே. வடிவேலு பதில் பேசாமல் நடந்தான்.

செட்டியாரின் கடையில் ஒரே கூட்டம். நவராத்திரி கொலுவில் கடைசிப் படியில் வைக்கப்பட்டிருக்கும் பொம்மையைப் போலவே காட்சியளித்தார் பங்காரு செட்டியார். ஆனால் ஒரு வித்தியாசம். இவருக்கு வழுக்கைத் தலையல்ல. முகத்திலே முறுக்கி விட்ட பிடி மீசை. கையிலே தங்கக் காப்பு. காதிலே வைரக் கடுக்கன். முகத்திலே கடு கடுப்பு. வேலுவைப் பார்த்தும் பார்க்காதது போல வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார் செட்டியார். அவர் பார்வையைச் சந்திக்க, சந்தித்ததும் முறுவலிக்கத் தயாராக இருந்தான் வேலு. ஆனால் அவர் இவனைக் கவனிக்கவே இல்லை. அவர் கட்டி வைக்கும் பொட்டலங்களை அதற்கு உரியவரிடம் எடுத்துக் கொடுத்து உதவிக் கொண்டிருந்தான் வேலு. எப்படியாவது செட்டியாரின் நன்மதிப்பைச் சம்பாதிக்க வேண்டும் என்பது அவன் எண்ணம்.

ஒரு மணி நேரமாயிற்று. வேலு கவனிக்கப்படவேயில்லை. அவனுக்குப் பின்னால் வந்தவர்களுக்கெல்லாம் சாமான் கொடுத்து அனுப்பி விட்டார் செட்டியார். வேலுவும் அவர் கவனத்தைக் கவர என்னென்னவோ செய்து பார்த்தான். செட்டியார் பேசவே இல்லை. அவர் கருணையை எதிர்நோக்கி அப்படி அங்கு காத்திருப்பது அவனுக்கு வேதனையாக, வெறுப்பாக இருந்தது. ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "செட்டியாரே! நான் எத்தனை நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் சற்று உரக்கவே. செட்டியார் திரும்பி இமைக்காமல் அவனை விழித்துப் பார்த்தார். வேலு பலவந்தமாகச் சிரிப்பை முகத்தில் பூசிக் கொண்டு "என்னையும் கொஞ்சம் கவனிச்சீங்கன்னு தேவலாம்" என்றான் தணிவாகத் தயவை எதிர்பார்த்து.

"கடன்காரர்களைக் கவனிக்க இது நேரமில்லே" என்றார் மிடுக்காகச் செட்டியார் திரும்பாமலேயே.

இத்தனை நேரம் காத்துக் கொண்டிருந்ததற்குப் பலன் இதுதானா? ஆத்திரத்தையும் அவமானத்தையும் அடக்கிக் கொண்டான் வேலு. "அஞ்சுபடி அரிசி, அரை வீசை சீனி,

கால் படி முனை...'' என்று தன் பட்டியலை எடுத்துப் படித்தான். அவன் படிக்கும் விழிகளோடு செட்டியார் அவன் கையிலிருந்த காகிதத்தை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டார். ''சீனி, ரவை, நெய், முந்திரிப் பருப்பு, திராட்சைப் பழம் போதுமா? ஒரு தூசி கூடக் கொடுக்கமாட்டேன். மூணு மாசமா பாக்கிகொடுபடல்லே. மறுபடியும் பட்டியல் தயார் பண்ணி அனுப்பிச்சுட்டான் பரதேசிப் பயல். போ...போ...''என்று எரிந்து விழுந்தார்.

சாமான் வாங்க நின்று கொண்டிருந்த அத்தனை பேரும் தன்னையே பரிதாபத்துடன் பார்ப்பதை உணர்ந்தான் வேலு. அவன் உடல் அவமானத்தினால் குன்றியது. அழுகையும் ஆத்திரமும் கலந்து கொப்பளிக்கக் குமுறிக் கொண்டிருந்தது. அந்த நிலையிலும் நிதானமாக, ''எங்கப்பா கோயம்புத்தூர் போயிருக்கார். திரும்பி வந்ததும் உங்க பாக்கியைப் பைசா இல்லாமே தீர்த்திடுவார்'' என்றான் துக்கம் தொண்டையை அடைக்க.



புதுடில்லி லேடி இர்வின் கல்லூரியில் பி.எஸ்ஸி. பரீட்சையில் முதன்மையாகத் தேறிய குமாரி ஸ்ரீ. சொர்ணாவுக்கு அமெரிக்க கலிபோர்னியா சர்வகலாசாலை எம். எஸ்ஸி. மேற்படிப்புக்கு ஸ்காலர்ஷிப் வழங்கிக் கௌரவித்திருக்கிறது. குமாரி சொர்ணா சென்ற மாதம் அமெரிக்காவுக்கு விமானமேறினார்.

செட்டியார் ஆவேசத்தோடு திரும்பினார். வேலுவின் முகத்துக்கு நேரே குனிந்து கொண்டு ''பெரிய சீமான் மகன் உன் அப்பன்? கோயமுத்தூரிலே என்ன புதையல் எடுக்கப் போயிருக்கானோ...இனி அவன் எங்கே திரும்பி வரப்போறான்? பொண்டாட்டி புள்ளைகளைக் காப்பாத்த வழி இல்லாம ஓடிப் போயிருப்பான். கையாலாகாத பய. வெட்டிப் பய. பாக்கி வராமே நான் ஒரு சாமானும் கொடுக்க மாட்டேன்'' என்று கர்ஜித்தார்.

''எங்கப்பாரு ஒண்ணும் வெட்டிப் பய இல்லே. கையாலாகாதவரில்லே. மரியாதையாகப் பேசுங்க, செட்டியாரே! மரியாதையாகப் பேசுங்க'' என்று கத்தினான் வேலு. தன் தகப்பனாரை இழிவாகப் பேசிய அவரை என்னென்ன வெல்லாமோ சொல்லித் திட்ட வேண்டுமென்று கொதித்தது அந்தக் குழந்தை உள்ளம். ஆனால் நாலு பேர்கள் முன்னிலையில் அப்படிப் பேச அவன் விரும்பவில்லை.

சட்டென்று சட்டைப் பொத்தானைக் கழற்றினான். உள்ளே கையை விட்டுக் கழுத்திலே தொங்கிக் கொண்டிருந்த தன் உயிர்போல் நேசித்து வந்த மெடலை வெடுக்கென்று இழுத்து அறுத்தெடுத்தான். செட்டியாரின் முன்னாலுள்ள கல்லாப் பெட்டியின் மீது அந்த அரைப்பவுன் மெடலை வீசி எறிந்தான்.

''எங்கப்பா கையாலாகாதவரு இல்லே. கடன்காரரு மில்லே. உங்களைப் போலப் பொய்க் கணக்கை எழுதிச் சம்பாதிக்கிறவரு மில்லே. கொள்ளை லாபம் வைத்து ஏமாத்திப் பிழைக்கிறவருமில்லே. இது அரைப் பவுன் பெறும். உங்க பாக்கியையும் எடுத்துக்கிட்டு எனக்குச் சாமானும் கொடுங்க. இனிமேல் நான் காத்துக்கிடக்க முடியாது'' என்றான் வேலு. அவன் முகம் சிவந்து விட்டது. பொங்கி வரும் அழுகையை உள்ளுக்குத் தள்ளினான். ஆனாலும் அவன் கன்னத்தில் வழி வகுத்துக்கொண்டு வெள்ளமாக ஓட ஆரம்பித்துவிட்டது கண்ணீர்.

வேலுவின்பேச்சும், அவன் வீசியெறிந்த பவுன் காசும் செட்டியாரைத் திகைக்க வைத்து விட்டன. பிரமித்துப் போனார். கல்லாப் பெட்டி மீது விழுந்துகிடந்த மெடலையும் கண்ணீர் ஒழுக விம்மியபடியே நிற்கும் வேலுவையும் மாறி மாறிப் பார்த்தார். அங்கு கூடியிருந்த அத்தனை பேரும் பேச்சற்றுப் பிரமித்துப் போய் விட்டார்கள். தன்னை எல்லாரும் குற்றவாளியாகப் பார்ப்பது போல் இருந்தது செட்டியாருக்கு. பையனின் மனம் புண்படப் பேசி விட்டோமே என்ற பச்சாத்தாபமும் கழிவிரக்கமும் ஏற்பட்டன. வேலு கொண்டு வந்திருந்த பட்டியலை உள்ளே சாமான் கட்டும் பையனிடம் கொடுத்துச் சாமான்களைக் கொண்டுவரும்படி உத்தர விட்டார். அவருக்கு ஒன்றுமே ஓடவில்லை. வியாபாரத்தைக் கவனிக்கவும் தோன்றவில்லை. வேலு விக்கி விக்கி அழுது கொண்டிருந்தான். செட்டியார் அவன் வீசியெறிந்த மெடலைக் கையில் வைத்துக் கொண்டு திருப்பித் திருப்பி அதையே பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு அதன் கதை தெரியும். தன் மகன் பரிசு பெற்றதைப் பெருமையாக எல்லோரிடமும் சொல்லிக் கொண்ட விநாயகம் செட்டியாரிடமும் கூறியிருந்தான்.

பையன் சாமான்களைக் கட்டி வந்து வேலு கொண்டு வந்திருந்த பையில் போட்டு வைத்தான். வேலு பையை எடுத்துக் கொண்டு கிளம்பத் தயாரானான். அவன் கண்ணீர் உலர்ந்து விட்டது. ''தம்பி! இந்தா. இதை வைத்துக் கொள். உங்கப்பாருக்குப் பணம் வந்ததும் கொண்டு வந்து கொடுக்கச் சொல்லு. போ'' என்று மெடலை அவனிடம் நீட்டினார். ஆனால் வேலு அதை வாங்கிக் கொள்ளவில்லை. தன்மானம் அவன் தலையை நிமிர்த்தியது.

''தேவையில்லே. அதைப் பணமாக்கி உங்களுக்குச் சேர வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள். மீதி இருந்தால் அப்பா கணக்கில் வரவு எழுதிக் கொள்ளுங்கள். இன்னும் கொடுக்க வேண்டியிருந்தால் அப்பா வந்ததும் கொடுத்து விடுவார்'' என்று பதிலுக்குக் காத்திராமல் வேகமாக நடந்தான் வேலு. தன் உடலின் ஒரு பகுதி போன்ற மெடலை இழந்த ஏக்கம் ஒருபுறமிருந்தாலும், அதற்கும் மேலான ஒன்றை அடைந்து விட்ட நிம்மதி

யோடு, தகப்பனாரின் கௌரவத்தைக் காத்து விட்டோம் என்ற கர்வத்தோடு நடந்தான்.

வாசற்படியிலே காத்துக் கொண்டிருந்த மரகதம் வேலுவிடமிருந்து பையை வாங்கிக் கொண்டாள். "செட்டியார் ஏதாவது பணம் கேட்டுத் தகராறு பண்ணினாரா வேலு?" என்று கேட்டாள்.

'இல்லை' என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விட்டு வெளியே ஓடினான். அவன் மனம் கனத்துக் கிடந்தது.

இருட்டிய பிறகுதான் வேலு வீட்டுக்குத் திரும்பினான். வழி நெடுக ஒவ்வொரு வீட்டிலும் பட்டாசு, வாணம் கொளுத்தி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள், இவன் வயதுப் பையன்கள். அதை யெல்லாம் காணவே பிடிக்கவில்லை அவனுக்கு: மௌனமாகச் சாப்பிட்டு விட்டுப் போய்ப் படுத்துக் கொண்டான்: தம்பியும் தங்கையும் கேட்ட ஆயிரம் கேள்விகளுக்கோ, அம்மாவின் வார்த்தைகளுக்கோ அவன் பதிலே பேசவில்லை.

தனியாகப் போய்ப் படுத்துக் கொண்ட வேலுவுக்குத் தூக்கமா வந்தது? அதுவும் இல்லை. கண்களை மூடினால் அந்த மெடல் தான் முன்னால் வந்து நின்று சிரித்தது. அதை இழக்கக் காரணமாக இருந்த செட்டியாரிடம் கோபம் கோபமாக வந்தது அவனுக்கு.

ஏதோ மனோராஜ்யத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த வேலுவைக் கூடத்தில் எழுந்த குரல் நினைவுலகுக்குக் கொண்டு வந்தது.

"அம்மா! அப்பா வந்து விட்டாரு!"

அம்மா மகிழ்ச்சி பொங்கப் பேசினாள்; தம்பி மணி, "அண்ணா! அண்ணா! இங்கே வாயேன், அப்பா உனக்கு எனக்கு எல்லாருக்கும் வேட்டி, சொக்காய் எல்லாம் வாங்கி வந்திருக்காரு. பட்டாசு, மத்தாப்பு, வாணம், வெடி எல்லாம் கட்டுக் கட்டாய்க் கொண்டு வந்திருக்காரு" என்று கூச்சல் போட்டது காதில் விழுந்தது. ஆனால் வேலு எழுந்திருந்து தகப்பனாரைப் பார்க்க ஓடவில்லை. அவர் மீது அவனுக்குக் கோபம். தனது அருமைப் பொக்கிஷமான மெடலை இழப்பதற்கு அவர் தானே காரணம் என்று எண்ணினான் அவன்: ஆடாமல் அசையாமல் படுக்கையில் கிடந்தான் வேலு. காதுகள் கூடத்தில் நடக்கும் பேச்சை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தன. அவன் அப்பா அவனைப் பற்றி ஒரு வார்த்தைகூடக் கேட்காதது அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சிறிது நேரம் வீடே சலனமற்றுக் கிடந்தது. வேலுவோ நெஞ்சு தாளமிடப் படுத்துக் கிடந்தான்.

மெல்லக்கேட்ட காலடி ஓசையை அடுத்துக் 'கிரீச்'சென்று அறைக்கதவு திறந்தது. கூடத்து வெளிச்சம் உள்ளே புகுந்து பரவியது. வேலு வருவது யார் என்று புரிந்து கொண்டான். சட்டென்று குப்புறப் படுத்துத் தூங்குவது போல் பாவனை செய்யலானான்.

அப்பா தன் அருகில் வந்து தலைமாட்டில் உட்காருவதை அவனால் உணர முடிந்தது. அவன் தோள்களைப் பற்றி 'வேலு' என்று கூப்பிட்டான் விநாயகம். அந்தக் குரலில் தான் எத்தனை வாஞ்சை? தூங்குவதாக நடிக்க இருந்த வேலு அவனையுமறியாமல் 'உம்' கொட்டி விட்டான். ஆனால் திரும்பி எழுந்து உட்காரவில்லை.

"தம்பி, வேலு! கண்ணே, அப்பாவைப் பார்க்க உனக்கு இஷ்டமில்லையா?" என்றான் விநாயகம் குரல் கம்ம.

அதற்கு மேல் அவனால் தகப்பனாரைப் பார்க்காமல் படுத்திருக்க முடியவில்லை. சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

"நீ ரொம்பப் பொறுப்பா வீட்டைக் கவனிச்சுக்கிட்டதாக அம்மா சொன்னாள்." வேலு இதற்குப் பதில் சொல்லவில்லை. தலைகுனிந்தபடி உட்கார்ந்திருந்தான். "வேலு! ராவுத்தர் எனக்குத் தீபாவளிக்காக நூறு ரூபாய் கொடுத்தார்" என்றான் விநாயகம்.

'நூறு கொடுத்தால் என்ன, ஆயிரம் கொடுத்தால் என்ன? என் அருமை மெடல் திரும்பியா வரப் போகிறது?' என்று எண்ணியது வேலுவின் உள்ளம்.

"இனி வாரத்தில் இரண்டு தடவை நான் கோயமுத்தூர் போக வேண்டியிருக்கும் வேலு. என்னை நிரந்தரமாகவே தனது டிரைவராகக்கூட எடுத்துக் கொள்வதாகச் சொல்லியிருக்கிறார் ராவுத்தர். என்னுடைய லைசென்ஸை அடுத்த வாரமே கொடுக்கும்படி சிபாரிசு செய்திருக்கிறாராம் துரை. கேள்விப் பட்டேன். எனக்குக் கார் ஓட்டற லைசென்ஸும் திரும்பி வந்திடும். இனி நாம் கஷ்டப்படவே வேண்டாம் வேலு. கடனுக்குச் சாமான் வாங்கவும் வேண்டாம்" என்றான் விநாயகம்.

வேலு தகப்பனாரை நிமிர்ந்து பார்த்தான்.

விநாயகம் தன் சட்டைப் பைக்குள் கையை விட்டான், எதையோ எடுக்க. தனக்காகத் தான் தகப்பனார் ஏதோ வாங்கி வந்திருக்கிறார் என்று ஆவலோடு அவன் எடுப்பதைப் பார்த்தபடியே காத்திருந்தான் வேலு.

"வரும் வழியிலே பங்காரு செட்டியாரு கடைக்குள் நுழைந்தேன். பண்டிகைக்கு அம்மா ஏதாவது சாமான் வாங்கினாளோ இல்லையோ! நாம் ஏதாவது வாங்கிக்கிட்டு வரலாம்னு....."

வேலுவின் நெஞ்சுத் துடிப்பு இன்னும் அதிகமாயிற்று.

"செட்டியாருக்குச் சேர வேண்டிய பாக்கி பூராவையும் கொடுத்து விட்டு இனிமேல் எனக்கு நல்ல காலம் பொறந்திட்டுதுங்கிற நல்ல சேதியையும் சொல்லிவிட்டு வந்தேன்." வேலு தலை குனிந்து உட்கார்ந்திருந்தான்; பதிலே பேசவில்லை. "செட்டியார் சொன்னார், 'விநாயகம் இந்த உலகத்திலேயே உன்னைப் போல் பாக்கியசாலி யாரும் இருக்க மாட்டாங்க, அப்படீன்னு." இதைச் சொல்லிக் கொண்டே விநாயகம் தன் மகனின் வலக் கையை எடுத்து அவன் உள்ளங் கையில் எதையோ வைத்து மூடினான். அது தன் உயிருக்கும் மேலான மெடல் என்பதை அதன் ஸ்பரிசமே உணர்த்தியது வேலுவுக்கு;

'வடிவேலுவைப் போல ஒரு மகனை அடைந்த நான் பாக்கியசாலிதான். செட்டியாரே' என்று சொல்லி விட்டு வந்தேன்" என்ற போது அவன் குரல் கரகரத்தது. தன் அருமை மகனை இழுத்து அணைத்துக் கொண்டான். இருவர் கண்களிலும் நீர் மல்கியது.

எங்கோ யாரோ கொளுத்திய அவுட்டு ஆகாயத்தில் வர்ணப் பூக்களை வாரி இறைத்து விட்டுச் சிரித்தது;



# தசை வலியா ?

# நோபெயின்

வலியை வேகமாக நிவர்த்திக்கிறது



ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

நோபின் புதிய ரிஜிஸ்டர்டு டிரேட்மார்க் விரைவில் அறிமுகப்படுத்தப்படும்

தென்னிந்திய ஆபீஸ் : 6/149, பிராட்வே, சென்னை - 1

---





ஒரு
ராலேயை
நீங்கள்
சொந்தமாக
வைத்திருப்பதில்
பெருமை
யடைவீர்கள்



# ராலே



SRC 51 TM




வாசலையே வெறித்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள் விசாலம். எங்கெங்கோ எல்லாமோ சிதறிக் கிடந்த சிந்தனைகள் அத்தனையும் அவள் மனத்தைக் கிளறி விட்டிருந்தன. உள்ளே இருந்த கடிகாரம் நான்கு முறைகள் அடித்து ஓய்ந்தது. மாலதி வருவதற்கு இன்னும் ஒரு மணி நேரம்தான் இருந்தது.

மாலாவுடன் அவள் ஆபீஸ் மானேஜரும் இன்று வரப் போகிறார்.

மாலதியுடன் வேலை பார்க்கும் வசந்தா ஒரு வாரத்துக்கு முன் சொன்னது அவள் காதில் ஒலித்துக் கொண்டிருந்தது.

"மாமி! மாலதியின் மேல் மானேஜர் உயிராக இருக்கிறார். அவளைத் தம்முடைய அந்தரங்கக் காரியதரிசியாகப் போட்டுக் கொண்டிருக்கிறார். எதுவாயிருந்தாலும் மாலதி, மாலதி என்றுதான் கூப்பிடுகிறார்!" என்று கூறினாள்.

விசாலத்துக்கு இது கொஞ்சமும் பெருமையாகவே படவில்லை. இந்தப் பெண் மீது எதற்காக அவர் அன்பு செலுத்த வேண்டும்? எத்தனையோ பெண் குமாஸ்தாக்கள் இல்லையா? இவள் மட்டும் என்ன உயர்த்தி!

மாலதியின் அசாதாரண அழகுதான் அதற்குக் காரணமோ? தாய் மனம் வேதனையால் துடித்தது. ஆனால் இதை எப்படி மாலதியிடம் கேட்பது?

அன்று வழக்கத்துக்கு மாறாக மாலதி நேரம் கழித்துத்தான் வந்தாள். அவள் முகத்தில் மகிழ்ச்சியின் பெருக்கு பொங்கியது. நடையில் சந்தோஷத்தின் துள்ளல் அடிபோட்டது.

அடுப்பில் காப்பி தயாரித்துக் கொண்டிருந்தாள் விசாலம். மாலதி ஒரே துள்ளலில் விசாலத்தின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். விசாலம் சற்றுப் பயந்தே விட்டாள். கையிலிருந்த காப்பி சற்றுச் சிந்திவிட்டது.

"என்ன மாலதி! சதா என்ன ஓட்டமும் நடையும்? நீ என்ன இன்னும் சின்னக் குழந்தையா? வயது ஆக ஆக உன்னைக் கொஞ்சம் திருத்திக் கொள்ள வேண்டும்!" என்றாள் விசாலம் படபடப்பாக.

மாலதியின் முகம் கன்றி விட்டது. சட்டென்று தகர்ந்து கொண்டாள். "நான் என்னம்மா பண்ணிவிட்டேன்? இப்போதெல்லாம் நீதான் மாறிவிட்டாய். என்னோடு சரியாகக் கூடப் பேசுவதில்லை. ஆபீசில் என்னை மானேஜர் தமது காரியதரிசியாகப் போட்டுக் கொண்டிருக்கிறார். இந்தச் சந்தோஷ சமாசாரத்தை உன்னிடம் சொல்ல ஓடி வந்தால் நீ பெரிதாகக் கோபித்துக் கொள்கிறாயே?" என்றாள்.

விசாலம் பெண்ணை ஏற இறங்கப் பார்த்தாள். மாலதியின் முகம் வாடுவதைப் பார்க்க அவளால் முடியவில்லை.

"உங்கள் ஆபீசில் எத்தனையோ பேர்கள் இருக்கும்பொழுது உன்னை மட்டும் ஏன் காரியதரிசியாகப் போட்டுக் கொண்டார்?" என்று கேட்டாள்.

முத்துப் பற்கள் தெரியும்படி சிரித்தாள் மாலதி. "ஐயோ! அம்மா! இதென்ன அசட்டுக் கேள்வி? அது என் அதிர்ஷ்டம்! ஆபீசில் அத்தனை பேருக்கும் என் மீது ஒரே பொறாமை. அதென்னவோ மானேஜருக்கு என் மீது அலாதி அன்பும் ஆசையும் இருக்கின்றன. அவர் இந்த ஊருக்கு வந்து பதினைந்து நாட்கள்தானே ஆயிற்று? அதற்குள் எனக்கு உத்தியோக உயர்வு கொடுத்திருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளேன்!" என்றாள் சந்தோஷத்தோடு.

நெஞ்சில் அடைத்துக் கொண்டிருந்த கேள்வி வாயில் வந்தே விட்டது விசாலத்துக்கு. "அவருக்கு வயதென்ன இருக்கும்?"

மாலதி திடுக்கிட்டுத் தாயாரைப் பார்த்தாள். அவள் தாயாரா அவளைப் பார்த்து இந்தக் கேள்வியைக் கேட்பது?

படித்த பண்புள்ள பெண்ணைப் பற்றித் தாயாரே சந்தேகப் பட்டால் ஆபீசில், ஊரில், உலகத்தில் எத்தனை பேசுவார்கள்? மாலதியின் மனம் வேதனையால் விண்டது.

"இன்னும் மூன்று மாதங்களில் வேலையிலிருந்து ஓய்வு பெறப் போகிறாராம். ஆகையால் தான் வடக்கேயிருந்து சொந்த ஊராகிய சென்னைக்கே அவர் வந்து விட்டாராம்!" என்று சொல்லிவிட்டு மாலதி விருட்டென்று எழுந்து போய் விட்டாள்.

அன்று முழுவதும் விசாலமும் மாலதியும் மனத்தை விட்டுப் பேசிக் கொள்ளவே இல்லை.

மறுநாள் மாலதி ஒன்பதரை மணிக்குச் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குக் கிளம்பத் தயாரானாள்.

"மாலதி! நீ இன்னும் சின்னக் குழந்தை இல்லை. நீ வேலை பார்த்துத்தான் ஆக வேண்டுமென்பதும் இல்லை. காலாகாலத்தில் கலியாணம் செய்து கொண்டு நீ குடியும் குடித்தனமுமாகி விட்டால் நான் கவலையில்லாமல் இருப்பேன்!" என்று கூறினாள் விசாலம்.

மாலதி தாயாரை உற்றுப் பார்த்தாள். இரண்டு நாட்களாக அம்மாவின் போக்கு அவளுக்குப் புரியாத புதிராகத்தான் இருந்தது. "அம்மா! நீ சொன்னது போல் நான் சின்னக் குழந்தை இல்லை. அதனால் என்னைப் பாதுகாத்துக் கொள்ள எனக்குத் தெரியும். உன் பெண் மீது உனக்கு நம்பிக்கை வேண்டும். அவ்வளவுதான்; நீ மண வாழ்க்கையில் அடைந்த சுகத்தைக் கண்டா என்னைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்கிறாய்?" என்று சொல்லி விட்டு ஆபீசுக்குப் போய் விட்டாள்.

விசாலத்துக்கு மாலதியின் வார்த்தைகள் நெஞ்சில் வாள் கொண்டு அறுப்பது போல் வேதனையைக் கொடுத்தன.

'நேற்றையப் பெண் என்ன வார்த்தை சொல்லிவிட்டாள்? தன் மண வாழ்க்கையைச் சுட்டிக் காட்ட அவளுக்கு என்ன உரிமை இருக்கிறது? துடுக்குக்காரப் பெண்!'



அதே மாலதியின் வயதில், தான் துடுக்காகப் பேசியதன் பயனைத்தான் இப்போது அவள் அனுபவித்துக் கொண்டிருந்தாள்! அவளது நினைவு இருபத்தைந்து வருஷங்களுக்குப் பின்னோக்கிச் சென்றது.

சாலம் பெரிய வக்கீலின் பெண். சீரும் சிறப்புமாக வந்தவள். புக்ககத்தினரும் பிறந்தகத்தினரும் அருமையாக அவளைக் கொண்டாடி வந்தனர்.

வள் கணவன் விசுவநாதன் ஆஸ்பத்திரியில குமாஸ்தாவாக இருந்தான். தன் கணவனுக்குச் சிறிய வேலை என்பதில் விசாலத்துக்குக் கொஞ்சம் மனத்தாங்கல்தான். அவனுக்குப் பூர்வீகச் சொத்து இருந்ததால் ரொம்பவும் காட்டிக் கொள்ளவில்லை.

தே ஆஸ்பத்திரியிலிருந்த நர்ஸ் நளினா வு ம அவன் அடிக்கடி வீட்டுக்கு வருவாள். நளினாவை விசாலத்துக்கு அறிமுகப் படுத்திக் கூட வைத்தான். நாளடைவில் விசாலத்துக்குக் கணவன்மீது சந்தேகம் வந்து, அது வலுத்தும் விட்டது.

'இனி இந்த நளினாவுடன் உங்களைப் பார்த்தால் அந்த நிமிஷமே நான் பிறந்தகம் போய் விடுவேன்!" என்று பயமுறுத்தினாள்.

விசுவநாதன் சிரித்தான்.

"என்ன சிரிக்கிறீர்கள்? உங்களுக்கு வரும் சம்பளத்தில் நர்ஸுடன் உலாவல் வேறு!" என்று கடுமையாகக் கேட்டாள்.

"ரொம்பவும் வார்த்தைகளைப் பேசாதே, விசாலம்! ஒரு ஆண்பிள்ளையை ஒரு பெண்ணோடு பார்த்த மாத்திரத்தில் விகல்பமாகப் பேசிவிடாதே! அவளும் உன்னைப்போல் ஒரு பெண்தான் என்பதை நினைவு வைத்துக் கொள்!" என்றான் கோபத்தோடு.

"என்னைப் போல் அவளும் ஒரு பெண் என்பது நன்றாகத் தெரிந்துதான் சொல்கிறேன்!" என்றாள் அழுத்தந் திருத்தமாக.

விசுவத்துக்குக் கட்டுக்கடங்காத கோபம் வந்து விட்டது. "ரொம்பவும் பேசாதே! இனி இந்தமாதிரி பேசினால் இதுதான் கிடைக்கும்!" என்று தன் ஆத்திரத்தை வெல்லாம் ஒருங்கே திரட்டி விசாலத்தின் கன்னம் இரண்டிலும் மாறி மாறி அறைந்துவிட்டான்.

அந்தச் சமயம் பார்த்துத்தானா விசாலத்தின் தகப்பனார் ஊரிலிருந்து வந்து உள்ளே நுழைய வேண்டும்?

இந்தக் காட்சியைக் கண்டு பெற்றவர் பதைபதைத்து மனம் வெகுண்டார்.

"அடப் பாவி! இப்படி அடிக்கவா உனக்கு என் கண்மணியைக் கலியாணம் செய்து வைத்தேன்? என் மூன்று பிள்ளைகளோடு அவளும் ஒரு பிள்ளையாக இருந்துவிட்டுப் போகிறாள்!" என்றவர் தம் பெண்ணைக் கரகரவென்று கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு, தாம் வந்த வண்டியிலேயே ரயில் நிலையத்துக்குப் புறப்பட்டு விட்டார்.

திக்பிரமை அடைந்து செய்வதறியாது நின்றான் விசுவம். கண்டதெல்லாம் கனவோ என்று கூட நினைத்தான். கட்டிய கணவனுக்கு மனைவியைக் கண்டிக்க உரிமை இல்லையா? அடிக்கத்தான் பாத்தியமில்லையா?

விசுவத்தின் தகப்பனார் அப்பொழுது கோயிலுக்குச் சென்றிருந்தார். தாயார் அடுப்பங்கரையில் காரியமாக இருந்தாள். "விசாலம்!" என்று அடுக்களையிலிருந்து குரல் கொடுத்தாள் விசுவத்தின் தாயார்.

"அம்மா! விசாலம் அவள் அப்பாவோடு பிறந்தகம் போய் விட்டாள். இனி இங்கு வரமாட்டாள்!" என்று அடிவயிற்றிலிருந்து உணர்ச்சி பொங்க இரைந்து கத்தினான் விசுவம்.

"எப்போ பார்த்தாலும் விளையாட்டுப் பேச்சுத்தானா? இந்தச் சமயத்தில் அப்படியெல்லாம் சொல்லாதேடா! குழந்தைக்குக் 'கெடு' தப்பி இருக்கிறது. 'மெய்யோ, பொய்யோ' என்று இருக்கிறது. நன்றாக இருக்கிறது, உன் பேச்சு!" என்று பிள்ளையைக் கடிந்த வண்ணம் சமையலறையிலிருந்து வந்தாள் தாயார்.

பிள்ளையின் பேயறைந்த முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டாள். விசாலத்தின் ஊருக்குச் சென்று விசாலத்தை அழைத்து வருவதற்குக் கிளம்பினர், தாயும் தந்தையும் விஷயத்தைத் தெரிந்து கொண்டு.

விசாலத்தின் தகப்பனார் அவளை மீண்டும் புக்ககத்துக்கு அனுப்பக் கண்டிப்பாக மறுத்து விட்டார். விசாலத்தின் மாமியார் தன் கௌரவத்தைக் கூடப் பார்க்காமல் விசாலத்




னிடமே பலவாறு புத்திமதி சொல்லித் தன் கூட வரச்சொல்லிக் கெஞ்சாத குறையாக வேண்டினாள்.

"உங்கள் பிள்ளைக்கு நர்ஸ் நளினிதான் இருக்கிறாளே, நான் என்னத்துக்கு?" என்றாள் வெடுக்கென்று விசாலம்.

வயதான மாமியாரும் மாமனாரும் இந்தத் துடுக்கான பதிலைக் கேட்டு உடல் குன்றிப்போனார்கள். மறு நிமிஷமே அவ்விடத்தை விட்டுக் கிளம்பி விட்டார்கள்.

விசுவத்துக்கு உடலே குறுகிப் போன உணர்ச்சி மிகுந்தது. ஆஸ்பத்திரி வேலையை ராஜிநாமா செய்துவிட்டு, ஊரில் இருந்த நில புலன்களையும் விற்றுக்கொண்டு, தாய்தந்தையரையும் அழைத்துக் கொண்டு சொல்லாமல் எங்கோ சென்று விட்டான்.

விசாலம் விசுவத்தின் பிரிவைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. பிறந்தகம் வந்த ஏழுமாதங்களுக்கெல்லாம் மாலதி பிறந்தாள். செல்வக் குழந்தை, பணக்காரத் தாய் தந்தையின் அரவணைப்பு எல்லாம் அவளுக்குத் தெம்பை ஊட்டின. கணவன் வடக்கே பெரிய அந்தஸ்தில் இருக்கிறான் என்றும் அவன் தாய் தந்தை இருவரும் காலமாகி விட்டார்களென்றும் பராபரியாகக் காதில் விழுந்தும் அவள் லட்சியம் செய்யவில்லை!

விசாலத்தின் தாயார் மட்டும் குழந்தைக்குத் தாயைப் போல் தந்தையின் அன்பு இல்லாமல் வளருகிறதே என்று ஏங்குவாள்.

விசாலத்தின் தந்தை பிள்ளைகளைப்போலவே அவளுக்கும் ஒரு பங்கு சொத்து எழுதி வைத்து விட்டுத்தான் இறந்தார். கணவரைப் பிரிந்த ஏக்கத்தில் தாயாரும் அவரைப் பின் தொடர்ந்தாள்.

விசாலத்துக்குத் தமையன்மார்களுடனும் அவர்களது மனைவிமார்களுடனும் ஒத்துக் கொள்ளவில்லை. மாலதியுடன் தனியே வசிக்க ஆரம்பித்தாள். அவள் தந்தை வைத்த சொத்து பெண்ணையும் படிக்க வைத்துக் கவலையில்லாமல் இருக்கும்படி செய்தது.

மாலதிக்குக் குழந்தையிலிருந்தே அவள் தந்தை ஒரு வஞ்சகன், தன்னைக் கொடுமைப் படுத்தி விரட்டினான் என்று சொல்லி வைத்திருந்தாள் விசாலம்.

மாலதி பி. ஏ. பாஸ் செய்தாள். பெரிய வடநாட்டு ஏற்றுமதி இறக்குமதிக் கம்பெனி ஒன்றில் உத்தியோகமும் ஆயிற்று.

மாலதிக்கு வயதான பிறகுதான், தன் கணவனை விட்டுப் பிரிந்த கஷ்டம் விசாலத்துக்குத் தெரிந்தது. மாலதியை யார் கலியாணம் செய்து கொள்வார்கள்? வாழாவெட்டியின் பெண் என்று தூரத்துவார்களே என்ற அச்சம் மெல்ல மெல்ல மனத்தை வாட்டியது.

மாலதிக்கோ விவாகம் என்ற நினைவே இல்லை. அம்மாவைக் கொடுமைப்படுத்திய அப்பாவை நினைத்த மாத்திரத்திலேயே அவளுக்குக் கலியாணம், கணவன் என்ற சொற்கள் வேம்பாகக் கசந்தன.

விசாலத்துக்கு மட்டும் பழைய நினைவுகள் மீண்டும் மீண்டும் மனத்தை வேதனைக் குள்ளாக்கின. அற்ப விஷயத்துக்கு, கண்ணால் பார்க்காத விஷயத்துக்கு அநியாயமாய்க் கணவனைச் சந்தேகப்பட்டோமே என்று மனம் வருந்தத் தொடங்கினாள். அதுவும் எப்பொழுது? இருபது வருஷங்களுக்குப் பிறகு!

விசுவம் இருக்கும் திக்கு திசைகூடத் தெரியாத நிலையில் வருந்திப் பயன் என்ன?

அதே தவறை மீண்டும் செய்கிறாய் என்று அவளை அவள் மனச்சாட்சி குத்தியது.

மாலதியின்மீது அவள் மானேஜர் பிரியமாக இருக்கிறார் என்றதும் தாயாரின் மனத்தை ஏதேதோ எண்ணச் செய்தது.



கலையார்வம் கொண்ட தக்ஷிண ரயில்வே ஊழியர்கள் பலர் சேர்ந்து கலைவளர்ச்சிக்கென்று 'லலித கலா நிலையம்' என்னும் சங்கத்தை நிறுவி நடத்தி வருகிறார்கள். அதன் இரண்டாவது ஆண்டு விழாக் கொண்டாட்டத்தை யொட்டி "அதிர்ஷ்டம்" என்ற நாடகத்தைச் சென்னை செயிண்ட்மேரி மண்டபத்தில் மேற்படி நிலைய அங்கத்தினர்கள் மிகச் சிறப்பாக நடித்தனர்.

அதோடு அவர் இன்று தன் வீட்டுக்கு வரப் போகிறார் என்ற செய்தி கட்டோடு அவளுக்குப் பிடிக்கவில்லை.

மாலதியின் வற்புறுத்தலுக்கு இணங்கி அன்று டிபனும் காப்பியும் செய்து வைத்துக் கொண்டு காத்திருந்தாள்.

★

**வா**சலில் 'பூம் பூம்' என்ற சத்தத்துடன் கப்பல் மாதிரி ஒரு கார் வந்து நின்றது.

உள்ளே ஜன்னலின் வழியாக எட்டிப் பார்த்தாள் விசாலம். காரிலிருந்து முதலில் மாலதி சிரித்த முகத்துடன் இறங்கினாள். அடுத்தபடியாக மானேஜர் இறங்கினார்.

விசாலத்தின் இருதயமே ஒருகணம் வேலை செய்யாமல் நின்று விட்டது. தலை சுற்றியது. உடம்பெல்லாம் வெடவெட வென்று நடுங்கியது. அந்த மானேஜர் சாக்ஷாத் விசுவநாதன்; அவளுடைய கணவனேதான். வயதாகியும் பார்க்கும்பொழுது சட்டென்று அடையாளம் கண்டு கொண்டாள் விசாலம்.

நெஞ்சை வலி அழுத்தியது. பொறுக்க முடியவில்லை. என்னவோ செய்து கொண்டு வந்தது. அப்படியே வெட்டிச் சாய்த்த மரம் மாதிரி கீழே விழுந்தாள்.

"ஐயோ, அம்மா!" என்று கதறிக் கொண்டு ஓடி வந்து மாலதி தாயாரைத் தூக்குவதற்கு முயன்றாள்.

"உங்களை எவ்வளவு ஆசையாக டிபனுக்குக் கூப்பிட்டேன்? அம்மா திடமாக இருப்பவளாயிற்றே? ஏன் இப்படி வந்தது என்று தெரியவில்லையே?" என்று கதறினாள் மாலதி.

மானேஜர் விசுவநாதனுக்கு விசாலத்தின் முகம் பழகிய முகமாகத் தோன்றியது. ஆயினும் ஒன்றும் இலயம் விளங்கவில்லை. விசாலத்தைப் பார்த்தபடி மாலதியைத் தேற்றினார்.

டாக்டரை அழைக்கக் கார் பறந்தது.

மாலதிக்குத் தன் தாயாரின் நிலையைக் கண்ட பொழுது இதயமே நின்று விடும்போலாகி விட்டது. தனக்கு ஒரே ஆதாரமாக இருக்கும் தாயாரும் விட்டு விட்டுப் போய்விட்டாள், தன் நிலை என்ன ஆகும் என்பதை நினைக்கவே அவளுக்குக் கதிகலங்கியது.

டாக்டர் வந்தார். விசாலத்தை நன்றாகச் சோதித்துப் பார்த்தார். "ஏதோ எதிர்பாராத அதிர்ச்சியால் இருதயம் பாதிக்கப்பட்டிருக்கிறது. திரும்பவும் பழைய நிலைக்கு வருவது சந்தேகம்தான். சில மணி நேரங்களே இருதயம் வேலை செய்யும் என்று நினைக்கிறேன்" என்றார் முகத்தைத் தொங்க விட்டபடியே.

மாலதி. "ஐயோ, அம்மா!" என்று அலறிய அலறல் ஊரையே கூட்டியது.

திடீரென்று விசாலம் கண்ணைத் திறந்தவள், மானேஜரைக் கிட்டே வரும்படி சைகை காட்டி அழைத்தாள்.

"என்னைத் தெரிகிறதா? நான் விசாலம்; உங்கள் மனைவி. இந்த வார்த்தையைச் சொல்லவே நான் அருகதையற்றவள். மாலதி உங்கள் பெண். அவளைக் கைவிட்டுவிடாதீர்கள். ரத்த பாசம்தான் அவளிடம் உங்களுக்கு அலாதி அன்பைக் காட்டச் சொல்லியிருக்கிறது. நான் ரொம்ப அற்பத்தனமாக நடந்து கொண்டு விட்டேன். 'ஒரு ஆண் பிள்ளையை இன்னொரு பெண்ணோடு பார்த்த மாத்திரத்தில் விகல்பமாகப் பேசி விடாதே! அவளும் உன்னைப்போல் ஒரு பெண்தான் என்பதை நினைவு வைத்துக் கொள்' என்றீர்களே! ஆத்திரத்தில் அறிவிழந்து பேசிய என்னை மன்னிப்பீர்களா? — மாலா! இவர் உன் அப்பா! அவர்மேல் தப்பில்லை. என் அகந்தையால் என் வாழ்வைப் பாழடித்துக் கொண்டேன்!" என்றாள் விசாலம்.

"நீதான் என்னை மன்னிக்க வேண்டும், விசாலம்! என் மனத்தில் களங்கம் இல்லையென்றாலும், பெண்களுடன் பழகும்பொழுது பிறர் தவறாகப் புரிந்து கொள்ளாமல் நடக்கத் தெரிய வேண்டாமா? உன்னைத் தவிர வேறு யாரையும் மனைவியின் ஸ்தானத்தில் நான் இதுவரையில் ஏற்காதபொழுதிலும், உன்னைக் காணக்கூடாது என்று கல்நெஞ்சனாக இருந்தேன்! என் பெண் இவள் என்பது தெரிந்ததும், பெற்ற பாசம் என்னை இழுத்தது. அதனாலேயே இவளை என் அந்தரங்கக் காரியதரிசியாக்கிக் கொண்டேன்" என்றார் அவர்.

'மாலதிக்குத் தந்தை கிடைத்து விட்டார். இனி திருமணப் பெண்ணாவாள்!' என்ற மகிழ்ச்சி விசாலத்தின் முகத்தில் பளிச்சிட்டது.

# படித்துப் பாருங்கள்

## Madras Seva Sadan- Thirtieth Anniversary Souvenir

நாதியற்ற நாரீமணிகளுக்கு உதவியும் புகலிடமும் அளித்துக் கைதூக்கிவிடும் ஸ்தாபனங்களில் முதன்மை ஸ்தானம் வகிப்பது சென்னை ஸேவாஸதனம். இந்த ஸ்தாபனத்தின் முப்பதாவது ஆண்டு பூர்த்தி யடைந்த தினம் ஒரு விழாவாகச் சமீபத்தில் உபஜனாதிபதி ஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் சென்னையில் கொண்டாடப்பட்டது. அது சமயம் வெளியிடப்பட்ட நினைவு மலர்தான் இந்தப் புத்தகம். நினைவு மலரில் இது முற்றிலும் புதுமையானது. தங்களைப் பற்றியும், தங்கள் சேவையைப் பற்றியும் பறைசாற்றிக் கொள்ளாமல் இம் மலரை ஒரு கலைக் களஞ்சியமாகவே வெளியிட்டிருக்கின்றனர், இக்க விழாக் கமிட்டியினர். பல அறிஞர்கள் அன்புடன் வழங்கிய வித்யாதானங்களைக் கொண்ட பொக்கிஷமாக வெளியிட்டிருக்கின்றனர். இந்தியாவில் தலைசிறந்த பெரியார்களுடைய கட்டுரைகள் சுமார் ஐம்பதுக்கு மேல் இந்த நினைவு மலரில் அடங்கியுள்ளன. சில இந்த மலருக்காகவே எழுதப்பட்டவை. மற்றும் பல இதர சந்தர்ப்பங்களில் எழுதப்பட்டவை என்றாலும் கருத்து மேன்மைக்காக எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளவை. அப்படிப்பட்ட ஒரு கட்டுரை பல வாண்டுகளுக்கு முன் ராஜாஜியால் தமிழில் 'காதலும் விவேகமும்' என்று எழுதப்பட்டது. அதை ஆங்கிலப்படுத்திச் சேர்த்திருக்கின்றனர். கட்டுரைகளைக்கொண்டும் சேர்ந்து இம்மலர் ஒரு கலைக்களஞ்சியமாகவே விளங்குகிறது. படிப்பதற்கு உற்சாகமூட்டும். சிந்தனையைத் தூண்டும். கிடைக்குமிடம்: சென்னை சேவாஸதனம் 5, ஹாரிங்டன் ரோட், சென்னை—31 விலை: ஒரு ரூபாய்.

## ராஜ்யம்

அரசியல் பற்றிய 'ராஜ்யம்' என்னும் இச் சிறுநூல் திரு க. சந்தானம் அவர்களால் 1951-ம் ஆண்டில் முதன் முதலாக வெளியிடப்பட்டு அதன் இரண்டாம் பதிப்பு இப்போது வெளிவந்திருக்கிறது. தமிழ் மக்களின் அறிவு வளர்ச்சிக்காக எழுதப்பட்டது. ஒரு ராஜ்யத்தின் முக்கிய தத்துவங்கள் என்ன? அதன் அங்கங்கள் யாவை? நிர்வாகத்தின் முறை யாது? அதை நம் வாழ்க்கைக்கும் சுகத்துக்கும் மனித அறிவாலும் முயற்சியாலும் எவ்வாறு பயன்படுத்தக் கூடும்? இக் கேள்விகளைப் பற்றிச் சிந்திக்கவும் பத்திரிகைகள் வாயிலாகக் கேட்கப்படும் வாதப் பிரதிவாதங்களின் தாரதம்யத்தைச் சீர்தூக்கிப் பார்க்கவும் பள்ளிப் படிப்பு அதிகமில்லாத தமிழருக்கு ஆற்றலளிப்பதே இந்நூலின் நோக்கம். புத்தகமும் இந் நோக்குடனே எழுதப்பட்டிருக்கிறது. முதல் பதிப்பு வெளிவந்த பிறகு நாம் அரசியலில் வெகு வேகமாக முன்னேறி விட்டிருந்தாலும் அடிப்படைத் தத்துவங்களை எளிதில் புரிந்து கொள்ள இந்நூல் உதவுகிறது.

பிரசுரம்: சக்தி காரியாலயம், ஆயிரம் விளக்கு, சென்னை—6. விலை: ரூபாய் ஒன்று.

## திருக்கோயில்

சென்னை மாநில அறநிலையப்பாதுகாப்புப் பகுதியிலிருந்து, சென்னை அரசாங்கத்தின் அனுமதியின் பேரில் மாதந்தோறும் வெளியிடப்படும் புதுப் பத்திரிகை இது "திருக்கோயில்." அக்டோபர் மாதம் 2-ம் தேதி காந்தி ஜயந்தியன்று இதன் முதல் இதழ் வெளிவந்துள்ளது. நம் நாட்டில் 275 தேவாரப் பாடல்கள் பெற்ற தலங்களும் 108 திவ்யப் பிரபந்தங்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருப்பதிகளும் உள்ளன. இவை பற்றிய குறிப்புகளும் சமயசம்பந்தமான கட்டுரைகளும் திருக்கோயில் வழிபாடு சம்பந்தமான பல விஷயங்களும் இக்கோயிலில் இடம் பெறும் என்று முதல் இதழிலிருந்து தெரிகிறது. பத்திரிகை உலகில் இது ஒரு புது முயற்சி. நாத்திகம் மேலோங்கி மக்கள் மனத்தைக் குழப்பி வரும் இந்தக் காலத்தில் அறத்தை வளர்க்கவும், கடவுள் வழிபாட்டை பெருகச் செய்யவும், இம்மாதிரி ஒரு முயற்சி வேண்டியதே. முதல் இதழில் வெளிவந்துள்ள சிறப்பான கட்டுரைகளையும், அதில் அடங்கியுள்ள படங்களையும், உயர்ந்த காகிதத்தில் அச்சடிப்பட்டிருப்பதையும் பார்த்ததிலிருந்து மற்ற இதழ்களும் இதேபோல் உயர்தரமான விஷயங்களடங்கியிருந்தால், இப்பத்திரிகையின் உபயோகம் எல்லையற்றிருக்கும். ஆஸ்திகர்கள் இம் முயற்சியைப் போற்றி இப் பத்திரிகைக்கு ஆதரவளிப்பர்.

திருக்கோயில்: திங்கள் வெளியீடு; தனி இதழ் 80 காசு; ஆண்டு சந்தா ரூபாய் 10. அறநிலையப் பாதுகாப்பு ஆட்சி அலுவலகம், மவுண்ட்ரோடு சென்னை—2



டாக்டர்: உன் உடம்புக்கு இரும்புச் சத்து அதிகம் வேண்டியிருக்கு. நீ எங்கே வேலை செய்கிறாய்?

நோயாளி: முருகன் இரும்புத் தொழிற்சாலையிலுங்க!



# வீரன் மகன்

## ப. ராதாகிருஷ்ணன்



**ப**யங்கரமான காடு. ஓங்கி உயர்ந்த மரங்களின் நெருக்கத்தால் பட்டப் பகலிலும் கூட அங்கு ஓரளவு இருள் சூழ்ந்திருந்தது. கேழ முட்புதர்கள் மண்டிக் கிடந்தன. அவை இல்லாத இடங்களை அலங்கரித்துக் கொண்டு நின்றன பாம்புப் புற்றுக்கள். தோளில் சுமந்து கொண்டிருந்த துப்பாக்கியின் பளுவுடன் என் உள்ளத்திலும் ஓர் கனம் ஏறத் தொடங்கியது. உண்மையை மறைக்க முயல்வானேன்? நான் அஞ்சாநெஞ்சனெனக் கருதியிருந்த என் நம்பிக்கை ஆட்டம் கண்டதென்று ஒப்புக் கொள்கிறேன்.

புறப்படும்போதே நண்பர்கள் சிலர் புத்தி சொன்னார்கள்: ''தம்பி, இது நம் நாடு அல்ல, மலேயா தேசம். துப்பாக்கி வைத்திருப்பவர்கள் எல்லோருமே வேட்டைக்குக் கிளம்பி விடலாமென்று நினைக்காதே. இக் காடுகளில் வாழ்வது துஷ்ட மருகங்கள் மட்டுமல்ல. அவற்றை விடக் கொடுமனம் படைத்த சில மனிதர்களும் மறைந்து வாழ்கிறார்கள். அரசாங்கத்தையே கவிழ்த்து விடச் சதி செய்யும் இந்தப் புரட்சிக்காரர்களின் கையில் நீ சிக்கினால் பின் உயிர் மீளுவது துர்லபம்...'' என்றெல்லாம் அவர்கள் கூறிய மொழிகள் என் செவியில் ஏறவில்லை. 'இளங் கன்று பயமறியாது' என்ற வாசகை நிரூப்பது போல் கிளம்பி விட்டேன்.

நேர்ந்தது என்ன? காட்டில் வழி தவறி விட்டது. வானம் பொத்துக் கொண்டது போலக் கொட்டிய மழையில் தெப்பமாக நனைந்தேன். அலைந்து திரிந்து அலுப்புற்ற கால்களின் வலியோடு வயிற்றில் பசியும் குடைந்தது. பட்ட கஷ்டத்துக்கு மனத் திருப்தியாக ஓர் மிருகத்தையேனும் சுட்டுத் தள்ளினேனாவென்றால் அதுவுமில்லை! என் வரவு பற்றி முன்கூட்டியே தெரிந்து கொண்டு மான்களும் முயல்களும் வெளியே தலை காட்டாது பதுங்கி விட்டன.

என் கண்ணெதிரே 'சரசர'வென்று ஊர்ந்து சென்று புற்றில் மறைந்தது ஓர் கருநாகம். அச்சம் பரிபூரணமாகி விட்ட நிலையில் நான் வீட்டைப் பற்றியும் குடும்பத்தைப் பற்றியும் அதிகமாகச் சிந்திக்கத் தொடங்கினேன். இப்பயங்கரச் சூழ் நிலையில் இரவை எங்கே எப்படிக் கழிப்பது என்ற பெரும் பிரச்னை எதிரே வந்து நின்றது.

அதோடு கால்கள் வேறு கெஞ்சின. இருட்டியும் விடவே, மேலே ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. அச் சமயம் எனக்கு ஓரே யோசனைதான் தோன்றியது தரை மீது தங்குவதை விட ஒரு மரக்கிளையின் மீது அமர்ந்திருந்தால் இரவில் நேரக் கூடிய விபத்துக்களினின்று தப்பலாம். பாதரக்ஷைகளைக் கழற்றினேன். அவற்றையும் துப்பாக்கியையும் ஓர் பெரிய விருக்ஷத்தினடியில் வைத்து விட்டு அதன் கிளையொன்றில் ஏறினேன்.

ஒரு விதத்தில் அது நன்மையாயிற்று. தரை மட்டத்துக்கு மேலிருந்து பார்க்கும்போது தூரத்தில் ஓர் சிறு ஒளிக் கீறல் புலனாகிடது. அது விளக்கின் வெளிச்சமாகத்தான் இருக்க வேண்டும். அதாவது, இந்தக் காட்டின் நடுவிலும் யாரோ மனிதர்கள் வசிக்கின்றனர்!

புரட்சிக்காரர்களைப் பற்றி நண்பர்கள் எச்சரித்தது நினைவுக்கு வந்தது. ஒருகணம் தயங்கிய உள்ளம் மறு விநாடி துணிந்து விட்டது. 'யாராயிருந்தால் என்ன? அவர்களும் மனிதர்கள். அவர்களிடையேயும் நல்ல மனமுள்ளவர்கள் இருக்கக் கூடும். என் அவல நிலையில் அவர்கள் உதவினால் உதவட்டும்,




அன்றி என்னை ஒழித்துக் கட்ட விரும்புவார்களானால் நல்லது. காட்டு மிருகங்களால் கிழித்தெறியப்படுவதை விட அது மேல்!'

மரத்திலிருந்து இறங்கி வெளிச்சம் வந்த திக்கு நோக்கி மெதுவாக நடந்தேன். அந்த இடம் அதிக தொலைவில் இல்லை.

மண்ணாலும் காட்டு மரங்களாலும் கட்டப்பட்டு இலைகளைக் கூரையாகக் கொண்ட ஓர் குடிசை. அதற்கு இரண்டொரு ஜன்னல்கள் வேறு இருந்தன. அவற்றில் ஒன்றின் மூலம் நோக்கினேன். உள்ளே கொழுப்பின் நாற்றத்தைக் கக்கிக் கொண்டு ஓர் அகல் விளக்கு மங்கலாக எரிந்தது. அதன் ஒளிதானே என்னை ஆகர்ஷித்தது! குடிசையின் எதிர் மூலையில் ஜன்னலை அடுத்தாற்போல ஒரு கட்டில். அதன் மீது அயர்ந்த நித்திரையில் கிடந்தாள் ஓர் இளம் பெண். மலாய் நாட்டவர்களுக்குள்ளே அவள் ஓர் அழகியென்று தயங்காமல் சொல்லலாம். ஜன்னலை இன்னும் சற்று நெருங்கிச் சுற்றுமுற்றும் பார்வையைச் செலுத்தினேன். கதவு உட்புறம் தாளிடப்பட்டிருப்பது தெரிந்தது. குடிசையில் அவளைத் தவிர வேறு யாருமில்லை.

பயங்கரமான காட்டின் நடுவே, நள்ளிரவு நேரத்திலே, புருஷர்களின் துணையின்றி உறங்கும் இப் பெண்ணின் துணிச்சல் என் தைரியத்தை விட ஒரு படி அதிகமாகத்தான் இருக்க வேண்டும்! முன்பின்னறியாத அயல் நாட்டானாகிய நான் அவளை எழுப்பி அங்கே இரவுக்குப் புகலிடம் வேண்டுவது உசிதமா?

கதவைத்தட்ட என் கைகள் தயங்கின. தற்செயலாகப் பின்புறம் திரும்பி நோக்கியபோது இன்னொரு காட்சியைக் கண்டேன்.

வெகு தூரத்துக்கப்பால் ஓர் ஒளிப் பிழம்பு. அது மலைச் சரிவினின்று இறங்கி வேகமாய் முன்னேறிக் கொண்டிருந்தது. மூச்சைக் கையில் பிடித்துக் கொண்டு சில நிமிஷங்கள் பொறுத்தேன். கையில் தீவட்டி தாங்கி விரைந்து வரும் ஓர் மனிதனின் தோற்றம் தெளிவாகத் தெரிந்தது

அவன் இந்தத் திசையில்தான் வந்துகொண்டிருந்தான். ஒருவேளை அவன் குடிசையில் உறங்கும் பெண்ணின் கணவனோ?

கனவேகமாய் நடந்து வந்தவன் குடிசைக்கு ஐம்பது கஜ தூரத்தில் ஏனோ நின்று விட்டான். ஒரு கையால் அணைத்துப் பிடித்திருந்த பிரம்பப் பெட்டியைச் சால ஜாக்கிரதையாகக் கீழே வைத்து விட்டுத் தீவட்டியின் கைப்பிடி நுனியால் தரையில் ஓங்கிக் குத்தினான். ஈரத் தரையில் குச்சி லகுவாக இறங்க, அங்கிருந்தபடியே ஒளி தந்தது தீவட்டி. அவனது முகத் தோற்றத்தில் ஒரு கொடூரமும் செயல்களில் ஒரு கபடமும் இருப்பது தெரிந்தன. ஆர்வம் என்னை மிஞ்சியது. அடிமேலடி வைத்து அவனை நெருங்கியவன் ஓர் புதர் மறைவிலிருந்து கண் கொட்டாது கவனித்தேன்.

பிரம்புப் பெட்டியைத் திறந்தான் அவன். அக்கணமே அதனுள்ளிருந்து சீறியெழுந்து படம் விரித்து நின்றது ஒரு சர்ப்பம். கண்ணிமைப் பொழுதுதான். பழகிய அவன் கரங்களில் சிக்கி அது திணறிக் கொண்டிருந்தது. தீவட்டியின் வெளிச்சத்தில் கண்ணாடிபோல் மின்னி மிளிர்ந்த அதன் உடலைக் கண்டேன். எனக்கு மயிர்க் கூச்செறிந்தது. அவனோ ஒரு அச்சமும் அறியாதவன் போல் குடிசையை நோக்கி முன்னேறினான். அவனது நோக்கம் என்னவென்று புரியாவிடினும் அது யாருக்கும் நன்மை தரப் போவதல்ல என்று மட்டும் உள்ளுணர்வு கூறியது. மெல்ல அவனைப் பின் தொடர்ந்தேன்.

அவன் கதவை இடிக்கவில்லை. சுற்றுப் புறமாக அப்பெண் உறங்கும் ஜன்னலருகே ஓசையின்றிச் சென்றான், குனிந்தான். ஜன்னலின் மரச் சட்டத்தினூடே பாம்பைப் பற்றிய அக் கரங்கள் புகுந்தன. மின்னலின் வேகத்தில் என் மூளையில் அவனது செயலின் கருத்து உதயமாகியது. அவன் செய்ய முயலுவது ஓர் கொலை! அதையும் எவ்வளவு முன்னேற்பாட்டுடன், சந்தேகம் தன்மீது விழாத வகையில் செய்யப் பார்க்கிறான்!

அதற்குமேல் நான் தாமதிக்க வில்லை. தோளில் சுமந்து கொண்டிருந்த துப்பாக்கி என் கைக்கு மாறியது. ''அடே, நில்' என்று உரக்கக் கூவினேன். அவன் பதறிப்போய்த் திரும்பினான். அப் பெண்ணும் திடுக்கிட்டுக் கண் விழித்தாள். ஒருகணம் பிசகியிருந்தாலும் அந்தக் கொடும் சர்ப்பம் அவன் கையினின்று விடுபட்டு அவள் உடல் மீது விழுந்திருக்கும்.

பேயறை வாங்கியது போன்ற முகத்துடன் மிரள மிரள விழித்து நின்றான் அப்பாதகன். பாம்பு அவன் கைகளில் நெளிந்து வளைந்து போராடிக் கொண்டிருந்தது.

''தூர வீசி எறி அதை. ஏதாயினும் விஷமம் செய்ய முயன்றால் சுட்டு எறிவேன் உன்னை'' என்று கர்ஜித்தேன். வாய் திறவாது கீழ்ப்படிந்தான் எறியப்பட்ட பாம்பு ஒருமுறை சீறி விட்டுப் புதர்களிடையே மறைந்தது.

''இவன் யார், அம்மா? உன்னைக் கொலை செய்யும் அளவுக்கு ஏன் துணிந்தான்?'' என்று நான் வினவினேன்.

''இவன் என் தந்தையின் நண்பன். என்னை மணக்க விரும்பினான். நான் இசையவில்லை. என் தந்தையும் சம்மதிக்கவில்லை. தன்மீது சந்தேகம் ஏற்படாத வகையில் இந்தச் சர்ப்பத்தின் மூலம் என்னை ஒழித்துக் கட்ட முயன்றிருக்கிறான். இதுபற்றி அவர் அறிந்தால் இவனது இரத்தம் சிந்திவிடும்...''

''உன் தந்தை யார்? இக்காட்டில் உன்னைத் தனியே விட்டு அவர் எங்கே சென்றிருக்கிறார்?'' என்று தொடர்ந்து கேட்டேன். பதிலளிப்பதற்கு முன் அவளது தயக்கம் நிதரிசனமாகத் தெரிந்தது. தன் தகப்பன் புரட்சிக்காரர் குழுவைச் சேர்ந்தவனென வெளிப்படையாய் அறிவிக்க அவளுக்கு எப்படி மனம் வரும்? உண்மையை ஊகித்துக் கொண்ட நான் மேலும் வற்புறுத்திக் கேட்கவில்லை.

அதற்குள் கதவருகே வந்து நின்றது பிரும்மாண்டமான ஓர் உருவம். என் மனம் கலகலத்தது.

''அப்பா!'' என்று கூவியவாறு அவனை நோக்கி விரைந்தாள் சூசாங். என் அச்சத்தில் ஒரு பகுதி நீங்கியது: ஆனால் முற்றிலும் நீங்கவில்லை. நான் அவன் மகளைக் காத்த நற்செயல் ஒருபுறம் இருக்கட்டும். என்னைப் போலீஸாரின் உளவாளியென்று அவன் சந்தேகித்தால் ...?

நடந்தவற்றை யெல்லாம் தகப்பனுக்கு விவரித்துக் கூறினாள் சூசாங். தன் கையிலிருந்த இரட்டைக் குழல் துப்பாக்கியை மகளிடம் கொடுத்துவிட்டு முன்னேறி வந்து என் கைகள் இரண்டையும் நன்றியுடன் பற்றிக் கொண்டான் அவன்.

# வாழ்க்கையில் நீங்கள் பெறுவதென்ன?

## விளங்கும் வீரியமா



அல்லது



வாழ்க்கையின் சந்தோஷத்தை கவலை, தெம்பின்மை, சிரமம் முதலியன கெடுக்காமல் காத்துக்கொள்ளுங்கள். வாழ்க்கையில் உண்மை வெற்றி தெம்பினால்தான் ஏற்படும்—ஸனடோஜன் புதுபலம் அளித்து, உடல்வலிமை மனசக்தி அதிகரிக்கச் செய்கிறது. 25,000 த்துக்கு மேற்பட்ட வைத்தியர்கள் அதன் அபூர்வ சக்தியளிக்கும் குணத்திற்கு அத்தாட்சி அளிக்கிறார்கள்.



**ஸனடோஜன்**

-மிக்க உயர்ந்த பால் டானிக்



# உங்கள் தினசரி உணவில் போதுமான கொழுப்புச் சத்து இருக்கிறதா?

ஆரோக்கியமாகவும் சக்தி உள்ளவர்களாயும் இருப்பதற்கு வயிறு நிரம்ப சாப்பிட்டால் மட்டும் போதும் என்று சிலர் எண்ணுகிறார்கள். ஆனால் அது சரியல்ல. ஆரோக்கியமாகவும் திடகாத்திரமாகவும் இருக்க நமது உணவில், விடமின்கள், மினரல்கள், புரோடீன்கள், கார்போஹைட்ரேட்கள், கொழுப்புச் சத்து முதலிய ஐந்துவகை போஷாக்குகள் இருக்க வேண்டும். அவைகளில் கொழுப்புச் சத்துகூட மிகவும் முக்கியமானது.

**கொழுப்புச் சத்து அவசியமானது**

ஒவ்வொருவருக்கும் தினசரி குறைந்தது 2 அவுன்ஸ் கொழுப்புச் சத்தாவது அவசியம் என்று விஞ்ஞானிகள் கூறியிருக்கிறார்கள். கொழுப்புச் சத்து சக்தியை அளிக்கவும் ஆகாரத்தை ருசியுள்ளதாக்கவும் செய்கிறது. தினசரி 2 அவுன்ஸ் கொழுப்புச் சத்து சுலபமாகப் பெற, நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் உங்கள் உணவை வனஸ்பதியில் சமையல் செய்வதே. இதனால் உங்கள் உணவு ருசியுள்ளதாயும் போஷாக்குள்ளதாயும் இருப்பதோடு மட்டுமல்லாமல் செலவும் குறையும்.

**பரிசுத்தமான கொழுப்புச் சத்து**

ஒவ்வொரு அவுன்ஸ் வனஸ்பதியிலும் 700 இன்டர்நேஷனல் யூனிட் விடமின் 'ஏ' அடங்கியுள்ளது. விடமின் 'ஏ', கண்களையும் சருமத்தையும் பாதுகாக்கவும் தேக வளர்ச்சியை அதிகரிக்கவும் செய்கிறது.

வனஸ்பதி நவீனமானதும், சுத்தமானதுமான பாக்டரிகளில், விஞ்ஞான ரீதியில் தயாரிக்கப்பட்டு டப்பாக்களில் சீல் செய்யப்படுகிறது. ஆகையால் அதை வாங்கும்போது அது மிகவும் சுத்தமானதென்றும் போஷாக்குவாய்ந்ததென்றும் நீங்கள் நம்பலாம்.

**வனஸ்பதி**

இல்லாளுக்கு வரப்பிரசாதம்!

தி வனஸ்பதி மான்யுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா

''ஐயா! உங்களை நான் அறிவேன். சென்ற முறை என் உயிரை எனக்கு மீட்டுத் தந்தீர்கள். இந்தத்தடவை என் மகனது உயிர் உங்களால் தப்பியது. உங்களுக்கு நன்றி தெரிவிக்கப் போதுமான வார்த்தைகள் என்னிடமில்லை'' என்றான் நாத் தழுதழுக்க.

''என்ன? நான் உன் உயிரைக் காப்பாற்றினேனா?'' என்றேன் ஆச்சர்யத்துடன்.

''ஆம், ஐயா! போலீஸாரின் குண்டு நெஞ்சில் பாய்ந்து படுகாயமுற்ற நிலையில் என்னை உங்கள் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்தார்கள். நீங்கள் செய்த ஆப்பரேஷன்தான் என்னை இன்னும் உயிருடன் வைத்திருக்கிறது. அதுமட்டுமல்ல. சாத்வீக முறையில் போராடிய எங்கள் கட்சியினர்மீது அநாவசியமான அடக்குமுறையைக் கையாண்ட அரசாங்கத்தைப் பழி வாங்க உறுதியும் உண்டாக்கியது. இப்போது இக்காட்டில் மறைந்திருக்கும் புரட்சிக்காரர்களுக்கு நான்தான் தலைவன்!'' என்றான் சற்றுப் பெருமையுடன்.

என் இதயத்திலும் பெருமிதம் பொங்கியது. இனி அச்சத்துக்கு ஏது இடம் அங்கே? நான் ஒரு டாக்டராக மட்டும் இருந்திராவிட்டால்.....?

குற்றவாளியின் பக்கம் திரும்பினான் அவன். ''அட துரோகி!'' என்ற வார்த்தைகள் இடியோசை போல் அவன் கண்டத்தினின்று வெளிவந்தன. வாலிபன் மெய்விதிர்ப்பது கண்கூடாகத் தெரிந்தது.

''...துணையின்றித் தனித்திருக்கும் ஒரு பெண்ணிடம் நெறி பிசகி நடக்க உனக்கு எப்படியடா துணிவு வந்தது? அதுபோகட்டும். அவளைக் கொல்ல விரும்புமளவுக்கு வஞ்சமா? பாம்பின் மூலம் கொலையை நிகழ்த்தி விட்டால் உன்மீது எனக்குச் சந்தேகம் எழாது எனக் கருதித்தானே இங்ஙனம் செய்திருக்கிறாய்?''

குற்றவாளி ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தான். அவனது உதடுகள் அசைந்தன. ஆனால் குரல் வெளிக் கிளம்பவில்லை. நியாயத்தின் பின்னணி பலம் இருந்தால்தானே வாக்கில் சக்தி இருக்கும்?

''புரட்சிக் குழுவில் சேரும் சமயத்தில் என்ன பிரமாணம் எடுத்துக் கொண்டாய்? நினைவிருக்கிறதா?'' என்று மலைமனிதன் தொடர்ந்து கேட்டான். ஒரு முனகல்தான் பதிலாகக் கிடைத்தது.

''நம்மிடையே யாருக்கும் கெடுதி நினைப்பதில்லை, உண்மை தவறுவதில்லை என்று கையில் கற்பூரத்தைப் பிடித்துச் சத்தியம் செய்தாயே! அதை மீறி நடந்த உனக்கு என்ன தண்டனை கொடுத்தால் தகாது? எனினும் இவ்விஷயத்தைப் பற்றி நான் ஒருவனே தீர்மானிக்கப் போவதில்லை. நம் இதர நண்பர்களும் இதில் பங்கெடுத்துக் கொள்ளட்டும். ஆனால் ஒரு விஷயம்மட்டும் நினைவில் வைத்துக்கொள். தவறுகளைக் கடவுளே மன்னித்தாலும் மன்னிக்கலாம். உயிரைக் கருதாது துணிந்து போராட்டத்தில் இறங்கியுள்ள புரட்சிக்காரர்கள் மன்னிக்க மாட்டார்கள்.''

அவன் குரலில் ஆவேசம் இல்லை; அசைக்க முடியாத உறுதி நின்றது. அஞ்சாநெஞ்சன் இவன், எடுத்த காரியத்தில் இதரர்களை அடக்கியாளும் திறமை கொண்டவன் என்று



கணவர்: ஏ. பூனை இங்கே வந்து நின்று கொண்டு 'மியாவ் மியாவ்' என்று சத்தம் போட்டுக் கொண்டிருந்தாள்...அப்புறம் எனக்குக் கெட்ட கோபம் வந்து. இந்த வடையில் ஒன்றை உனக்கும் போட்டு விடுவேன். உம்... ஜாக்கிரதை!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அவனது நடத்தை கட்டியம் கூறியது. இடுப்பில் தொங்கிய எக்காள வாத்தியத்தை எடுத்து வாயில் வைத்து முழக்கினான். அதன் ஓசை காட்டுப் பிரதேசமெங்கும் எதிரொலித்தது. மறுகணம்....எங்கெங்கிருந்தோ எழும் பல எக்காளங்களின் ஏகோபித்த முழக்கம்.

தன் முடிவு யாதாகுமென ஐயமறத் தெரிந்துகொண்ட வாலிபன் இறுதி முயற்சியாகத் தலைவனின் காலில் விழுந்தான். அவனுக்குக் கிடைத்ததெல்லாம் செம்மையான இரண்டு உதைகள்தான்!

ஜன்னல் மூலம் வெளியே நோக்கினேன். காட்டின் பல பாகங்களிலிருந்து தீவட்டிகளின் ஒளி தெரிந்தது. தலைவனது அழைப்புக் கிணங்க அக் குடிசை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தனர் இதர புரட்சிக்காரர்கள்!

மேலே அந்த வாலிபனுக்கு நடக்கவிருந்த உபசாரங்களைக் காணும் ஆவல் எனக்கு இல்லை. ரூசான் விரித்த படுக்கையில் பொத்தென்று விழுந்தேன். அப்பொழுது எங்களது விழிகள் ஒன்றையொன்று சந்தித்தன. மான் போலத் துள்ளியோடி விட்டாள் அவள்.

அந்த ஆறு மாதங்களும் என்னைப் பொறுத்தவரையில் ஆறு யுகங்கள் போலத்தான் கடந்தன. வேலையில் மனம் லயிப்பதில்லை. உணவும் உறக்கமும் வேண்டாதவையாயின. காட்டிலே கண்ட என் காதலி ரூசானின் மதிமுகம் ஒன்றுதான் எப்போதும் நீங்காது என் நினைவிலே நின்றது. அத்துடன் சேர்ந்த ஆயிரம் சிந்தனைகள், கவலைகள்.

புரட்சித் தலைவன் மின்டாங் எத்தனை தான் வீரனாக இருந்தாலும் அவனும் ஓர் மனிதப் பிறவிதானே? அவனது சாகசச் செயல்களுக்கும் எல்லையுண்டு அல்லவா? தன்னிலும் வலிமை மிக்க, சட்டத்தின் பின்பலத்தைக் கொண்ட அரசாங்கத்தை எதிர்த்துப் பலநாட்கள் நிற்பது இயலாத காரியமாயிற்றே! சுருங்கச் சொன்னால் அவனது நாட்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். பிறகு சூசாங்கின் கதி என்ன ஆகும்?

தங்களுக்கு ஓயாத் தொல்லை கொடுத்த புரட்சிக்காரன் மகளும் கையில் சிக்கினால் அரசாங்கம் சும்மாவிடுமோ? அல்லது அனாதையான அவள் இப் பொல்லாத உலகத்தில் தன்மானத்துடன் வாழ்வது தான் எளிதா? அவளது அழகே அவளுக்கு நமனாகி விடுமே!

அன்று குடிசையிலிருந்து அவள் தகப்பனுடன் தான் புறப்பட்ட சமயம் சூசாங் என்னைப் பார்த்த பார்வை — அதை நான் எவ்வாறு மறக்க முடியும்? "என்னை மறந்து விடாதீர்கள்" என்று கெஞ்சாமல் கெஞ்சினாள். தன் அன்பின் சின்னமாக அவள் தந்த மான் கொம்பு — இதோ எதிரே சுவரில் பொருத்தப்பட்டிருக்கிறது. காணுந்தோறும் என் இதயத்தைக் குத்திப் பிழிகிறது. மின்டாங் என்னைப் பத்திரமாகக் காட்டுக்கு வெளியே கொண்டு சேர்த்தான். நடக்கும் போது இருவரும் எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசினோம். சற்றுக் குறிப்பாகவேனும் நான் சூசாங்கின்மீது கொண்ட காதலைப் பற்றி அவனுக்கு உணர்த்தியிருந்தேனில்லை...

கடந்துபோன விஷயத்தை இப்போது நினைத்து வருந்துவதில் என்ன பயன்? இன்னொரு தடவை அவர்களைத் தேடிக் கொண்டு காட்டில் பிரவேசிப்பதுதான் அறிவுள்ள செயலாகுமா?

இரவு மணி பத்து. "கடைசியாக வந்த செய்திகள்" என்று அறிவித்தது ரேடியோ. கூர்ந்து கேட்டேன். '.....வெகு காலமாக அரசாங்கத்துக்குத் தொல்லை கொடுத்துவரும் புரட்சிக்காரர்களின் கும்பலை ஒழித்துக் கட்டப் போலீசும் இராணுவமும் வெற்றிகரமாக ஒத்துழைத்தன. இன்று பகல் தலைநகரை அடுத்துள்ள காட்டில் பயங்கரமான ஓர் கைகலப்பு நிகழ்ந்தது. புரட்சிக்காரர்களில் பெரும்பாலோர் கொல்லப்பட்டனர். சிலர் கைதியாயினர். அவர்களது தலைவன் மின்டாங் ஒருவன் மட்டுந்தான் எவ்வாறோ தப்பியோடி விட்டான். ஆயினும் அவன் அடைந்துள்ள பலத்த காயங்களைக் கருதும் போது, எங்கு சென்றாலும் அவனது முடிவு வெகு தூரத்தில் இல்லையென நிச்சயமாக நம்பலாம். போலீசார் காட்டுப் பிரதேசத்தைச் சல்லடை போட்டுச் சலிக்கிறார்கள்."

என் இருதயம் ஸ்தம்பித்து நின்றுவிட்டது. அப்படியானால் சூசாங்?

மேலே ரேடியோ என்னவெல்லாமோ இரைந்துவிட்டு இறுதியாக ஓய்ந்தது. ஆனால் இச் செய்திக்குப் பின் வேறெதுவுமே என் காதில் விழவில்லை. காட்டைச் சல்லடை போடும் போலீசார் கையில் மின்டாங் சிக்குவது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயம் அவள் அகப்படுவதும். ஏன் இந்நேரம் எல்லா விபரீதங்களும் நிகழ்ந்து முடிந்திருக்கும். அட தெய்வமே! அவளை நீ காப்பாற்றாவிட்டால் வேறு யார்.....

'டங்' என்ற ஒரு ஓசை. திறந்திருந்த ஜன்னல் வழியே ஓர் உருவம் குதித்தது. அதன் உடைகளெல்லாம், ஒரே ரத்தம். துள்ளி எழுந்து தலையணைக்கடியிலிருந்த கைத் துப்பாக்கியை எடுத்தேன். நான் திரும்புவதற்கு முன் எனக்கு நேர் எதிரே ஒரு அடி இடைவெளியில் நின்றது அவ்வுருவம். நான் திடுக்கிட்டேன். நின்று கொண்டிருந்தது வேறு யாருமில்லை; மின்டாங்தான்.

"ஐயா! இன்று ஏற்கெனவே அரை டஜன் குண்டுகள் என் உடலில் பிரவேசித்துவிட்டன. இனியும் தேவையில்லை" என்று சிரித்தான் அவன். ஆயினும் அந்த ரத்தக் கறைகள் பொய் கூறவில்லை, வெளிறிக் கிடந்த முகமும் உண்மையை மறைக்கவில்லை. அமானுஷ்யமான உடல் வலிவும் மனோ பலமும் இருந்தால்தான் இந்தப் படுகாயங்களுக்கு ஒருவன் பதில் சொல்லியிருக்க முடியும்.

"மின்டாங் உன்னையா இந்தக் கோலத்தில் காணுகிறேன்?" என்று குமுறினேன்.

"ஆம், ஐயா! என் கடைசி மூச்சுடன் இறுதிக் கடமையொன்றையும் நிறைவேற்ற இங்கு வந்தேன். அனுமதியின்றித் திருடன் போல் உங்கள் வீட்டில் பிரவேசித்ததற்கு என்னை மன்னியுங்கள்" என்று வெகு சிரமத்துடன் பேசினான் அவன்.

"மன்னிப்பு விஷயமெல்லாம் இருக்கட்டும், அப்பா! முதலில் நீ உட்கார்."

"இல்லை, நான் இங்கு தாமதிப்பது உசிதமல்ல. போலீசாரிடம் சரணாகதி அடையச் சென்று கொண்டிருக்கிறேன். கோர்ட் விசாரணை, தண்டனை என்ற அச்சமெல்லாம் இப்போது எனக்கில்லை. ஏனென்றால் இன்னும் சில மணி நேரத்துக்குமேல் இவ்வுடலில் உயிர் தரிக்காது என்று எனக்குத் தெரியும். ஆனால் போவதற்குமுன் என் மகள் சூசாங்..."

"எங்கே அவள்?" என்று ஆர்வத்துடன் குறுக்கிட்டேன். அவன் செய்த புன்னகை அர்த்தபுஷ்டி கொண்டதாயிருந்தது.

"வெளியே நிற்கிறாள். அவளை உங்களிடம் ஒப்படைத்து விட்டால் என் கடமை தீர்ந்ததாகும். உங்கள் இருவரது உள்ளச் சேர்க்கையைப் பற்றி அவள் மூலமாகவே அறிந்த பின் இதைவிட உயர்ந்த திட்டமொன்றும் தேவையில்லை எனத் தோன்றியது. ஆனால் இதன் மூலம் தங்களுக்கு ஏதேனும் கெடுதி சம்பவிக்கலாம் என்ற அச்சமிருந்தால்......நான் வற்புறுத்த மாட்டேன்."

"அச்சமா? எனக்கா, மின்டாங்!" வேகமாக முன்னே நடந்து வாயிற் கதவைத் திறந்தேன். சித்திரப் பதுமையாக வெளியே நின்றிருந்தாள் என் உள்ளங் கவர்ந்த கன்னி.

மின்டாங் எங்கள் கரங்களை இணைத்தான். மறு கணம் அங்கு அவனைக் காணோம்! தன் மகளை என் வசம் ஒப்புவித்ததோடு அந்தப் புரட்சி வீரனது இறுதிக் கடமை தீர்ந்தது.

---

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

பி. ஆர். பிலிம்ஸ் "ஸாதனா" படத்தில்
தோன்றும் வசீகர நட்சத்திரம்
வைஜயந்திமாலா

# வைஜயந்திமாலா

உபயோகிப்பது

தூய, வெண்மையான

# லக்ஸ் டாய்லெட் சோப்

அழகான புதிய
மேலுறையுடன் இப்போது
கிடைக்கிறது

LUX
TOILET SOAP

சினிமா நட்சத்திரங்களின்
அழகுசாதன சோப்

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

LTS. 583-23 TM